# பெரியாரியப் பெண்ணியம்

முனைவர் கு.ம. இராமாத்தாள்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113.

பெரியார் ஈ.வெ.ரா. நாகம்மை அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர்: பெரியார் மகளிர் அணி)

வரிசை எண் : 2

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Periyāriyap peṇṇiyam |
| Author | : | Dr. K.M. Ramathal<br>Chair-person<br>Tamilnadu State Commission for Women<br>Chennai-600 032. |
| General Editor | : | Dr. M. Valarmathi<br>Research Assistant<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113. |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus, Tharamani,<br>Chennai-600 113.<br>Ph: 22542992 |
| Publication No. | : | 576 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2007 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xii + 100 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs. 35/- (Rupees Thirty five Only) |
| Printed by | : | Sri Venkateswara Offset<br>36/19, New Street, Thousand Lights,<br>Chennai - 600 006 |
| Subject | : | Feminism |

முனைவர் ம. இராசேந்திரன்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

# முகவுரை

பெண்ணியம் என்பது சமூக அக்கறையின் வெளிப்பாடு; பெண் விடுதலை பெண் முன்னேற்றத்தை மையப்படுத்தும்; தற்காலத்தில் வாழ்வியலிலும் படைப்புலகிலும் பெண் நிலை பெரிதும் கவனிக்கப்படுகிறது. பதிவு செய்யப்படுகிறது.

*"ஆடை அணிகலன் ஆசைக்கு வாசமலர்*
*தேடுவதும் ஆடவர்க்குச் சேவித் திருப்பதுவும்*
*அஞ்சுவதும் நாணுவதும் ஆமையைப்போல் வாழுவதும்*
*கெஞ்சுவது மாகக் கிடக்கும் மகளிர்குலம்*
*மாணிடர் கூட்டத்தில் வலிவற்ற ஓர் பகுதி"*
(பாரதிதாசன், 'வீரத்தாய்', பாரதிதாசன் கவிதைகள்)

என்று பாவேந்தர் பெண் வாழ்வியல் மரபைச் சுட்டிக்காட்டி உள்ளார். இந்நிலை மாறிப் பெண்களும் ஆண்களும் சமமானார் என்று மாறும் நாள் எந்நாளோ என்ற தமது எதிர்பார்ப்பையும் வெளிப்படுத்தி இருக்கிறார். பெண் சமூகம் தற்காலத்தில், பெண் இலக்கியம் (Women's Literature), பெண்ணிய இலக்கியம் (Feminist Literature), பெண்சார்பு இலக்கியம் (Literature on Feminism), பெண் விவரணைப் பதிவிலக்கியம் (Literature of Feminism), பெண்ணியத் தத்துவம் (Feminist Philosophy), பெண்ணியக் கலை (Feminist Art), பெண்ணியப் படம் (Feminist Film), பெண்ணியக் கட்டுமானவியல் (Feminist Architecture) என்று பல்வேறு கோணங்களில் தன்னுடைய இருப்பை வெளிப்படுத்தி வருகிறது.

இவ்வரிசையில் **பெரியாரியப் பெண்ணியம்** என்னும் தலைப்பில் முனைவர் கு. ம. இராமாத்தாள் அவர்கள் (தலைவர், தமிழ்நாடு மகளிர் ஆணையம்) தன்னுடைய கருத்துகளைச் சிறந்த முறையில் நூலாக்கி வழங்கியுள்ளார். பெரியாரியல் நோக்கினை அடிப்படையாகக் கொண்டு பெண்ணிய நிலையை இந்நூலாசிரியர் விளக்கியுள்ளார். அவருடைய முன்னுரையில், இங்கு நாம் குறிப்பிட விரும்பும் அல்லது அடைய எண்ணும் சிறந்த பெண்ணிய நிலை என்பது எல்லா வகையிலும் ஆண்களுக்கு இணையாகச் சம உரிமை, சம வாய்ப்பு, சம அனுபவம், சம தகுதி, சம நுகர்ச்சி ஆகிய பெரியாரிய நோக்கினை அடிப்படையாகக் கொண்டதாகும்.

பெண்ணிற்கு விடுதலை என்பது வறுமைப்பிடியிலிருந்து விடுவிப்பது மட்டுமன்று, பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அச்சுறுத்தப் பெற்று, அறிவுக்கு விலங்கு பூட்டப் பெற்று,

மூடநம்பிக்கைகளில் அமிழ்த்தப் பெற்று, சமயச்சடங்குகளிலும் சாத்திர சம்பிரதாய வழக்குகளிலும் சிக்கவைக்கப்பட்டுள்ள பெண்களை அவற்றிலிருந்து முற்றாக விடுவிப்பதற்கான செயல்பாட்டைக் கூட்டாக மேற்கொள்வதே முழுமையான பெண்ணிய இயக்கமாகும் என்று தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார். பெரியார் ஈ.வெரா. நாகம்மை அறக்கட்டளை சார்பாகத் தமிழக மகளிர் ஆணையத் தலைவரின் இரண்டாவது பொழிவாக இந்நூல் வெளிவருகிறது.

தமிழ் நிலத்தில் பெண் விடுதலை எவ்வாறு அமைய வேண்டும் என்ற புரிதலோடு இந்நூலை வழங்கியுள்ளார். தாய்மையின் சிறப்பு, பெண் சிசுக் கொலை கொடுமை, பணியாற்றும் இடங்களில் பாலின வன்கொடுமை, வரதட்சணைக் கொடுமை, தகவல் தொழில்நுட்பத் துறையில் குடிபெயர்தலும் பாலினமும், கற்புநிலை, உலகமயமாக்கல் என்று பல்வேறு தலைப்புகளில் இந்நூலாசிரியர் விரிவாக ஆய்வு செய்துள்ளார்.

பெண்கள் முன்னேற்றத்திற்காக இயற்றப்பட்ட சட்டங்களின் பட்டியல், தாய்மை பற்றிய பொன்மொழிகள் என்பவை இந்நூலின் தனிச்சிறப்புகளாகும். பெரியாரியல் நோக்கில் தமிழ்ப் பெண்ணியம் பேசும் இந்நூல் பெரிதும் பாராட்டுக்குரியது.

**மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** தொடர்ந்து இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வழிநடத்தி வருகிறார்கள். **மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்கள்** தலைவராக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை நெறிப்படுத்தி வரும் பாங்கினைத் தமிழகம் என்றென்றும் நன்றியுடன் போற்றும்.

இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத் துறை **அரசுச் செயலாளர்** திரு. து. இராசேந்திரன் **இ.ஆ.ப.** அவர்களுக்கும் நன்றி.

இந்த அறக்கட்டளையின் பொறுப்பாளராகச் செயற்படும் இந்நிறுவன ஆராய்ச்சி உதவியாளர் முனைவர் மு. வளர்மதி அவர்களும், இச்சொற்பொழிவு மற்றும் நூல் வெளியீடு தொடர்பான அனைத்து ஏற்பாடுகளையும் செய்த நிறுவனப் பணியாளர்களும், மெய்ப்புத்திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன் அவர்களும், கணியச்சிட்ட திருமதி ந. இலட்சுமியும் இந்நூலை அச்சிட்டுத் தந்த அச்சகத்தாரும் பாராட்டிற்கு உரியவர்கள்.

**சென்னை**

**இயக்குநர்**

# ஆசிரியர் குறிப்பு



குமு. இராமாத்தாள் 5.2.1945ஆம் நாள் குளத்துப் பாளையம் (கோவை மாவட்டம்) எனும் ஊரில் பிறந்தார். தாயார் பெயர் இராமாத்தாள்; தந்தை பெயர் மருதாசலம். இவருடைய துணைவர் திரு. மு.பெ. நடராசன், நியூ இண்டியா பொதுக் காப்பீட்டுக் கழக அதிகாரி யாகப் பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளார்.

முனைவர் கு.ம. இராமாத்தாள் பெரியாரியல் சிந்தனையாளர். இவர் பொருளியல் துறையில் 'தமிழ்நாட்டின் நெல் உற்பத்தியில் பொருளாதாரத்திறன் மதிப்பீடு' எனும் ஆய்வுத் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். சித்த மருத்துவத்தில் பட்டயம், அலுவலக மேலாண்மை (D.O.M.), மனிதவள மேலாண்மை (HRM) ஆகிய கல்வித் தகுதிகளைப் பெற்றுள்ளார்.

முதுகலை (எம்.ஏ.) பட்டப்படிப்பில் மாநில அளவில் முதல் தகுதி பெற்றுள்ளார். திரு. பக்தவச்சலம் அறக்கட்டளைப் பரிசு, திரு. சண்முகம் அறக்கட்டளைப் பரிசு ஆகியவற்றைப் பெற்றுள்ளார்.

பாரதியார் பல்கலைக்கழகத்தில் 15 ஆண்டுகள் பேராசிரியர், பல்கலைக்கழக நிருவாகத்தில் 15 ஆண்டுகள் பணி என 30 ஆண்டுகள் பணிசார் பட்டறிவு பெற்றுள்ளார். ஆராய்ச்சி மேற்பார்வையாளராக ஓராண்டு இருந்துள்ளார். 21-3-2001 முதல் 4-2-2007 வரை தமிழ்நாடு அரசுப் பணியாளர் தேர்வாணைய உறுப்பினராகப் பணியாற்றியுள்ளார். தற்பொழுது தமிழ்நாடு மகளிர் ஆணையத்தின் தலைவராகப் பணியாற்றி வருகிறார்.

சென்னைப் பல்கலைக்கழகம், மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம், பாரதியார் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், ஸ்ரீ அவினாசிலிங்கம் நிகர்நிலைப் பல்கலைக் கழகம் ஆகியவற்றில் தேர்வுக்குழு உறுப்பினராக இடம்

பெற்றுள்ளார். பல்கலைக்கழகத் தேர்வு வினாத்தாள் தயாரிப்புக் குழு உறுப்பினராகவும் பிற கல்விப்புலக் குழு உறுப்பினராகவும் பணியாற்றியுள்ளார்.

பல்கலைக்கழகங்களில் நடைபெறுகின்ற பணிப் பட்டறை, கருத்தரங்கு, புத்தொளிப் பயிற்சி ஆகியவற்றில் பொழிவுகளை வழங்கி, தமது பங்களிப்பைச் செலுத்தி வருகிறார்.

கோயம்புத்தூரில் உள்ள மு.வ. இலக்கியப் பேரவை, தமிழ்ச் சிந்தனையாளர் கழகம், பாவேந்தர் பேரவை, தாய்த் தமிழ்த் தொடக்கப்பள்ளி ஆகியவற்றின் சமுதாய/இலக்கியக் கழக உறுப்பினராகவும் உள்ளார். இவர் கோயம்புத்தூரில் தந்தை பெரியாரின் மறுமலர்ச்சி இயக்க நிறுவனராகவும் விளங்குகிறார். வானொலி, தொலைக்காட்சிகளில் பெரியாரியல், பெண்ணியம், சமூகச் சீர்திருத்தம், சமத்துவ நோக்கில் அமைந்த சொற்பொழிவு மற்றும் பிற நிகழ்ச்சிகளில் பங்கேற்று வருகிறார்..

*1.* பெரியாரின் பெண்ணியச் சிந்தனை, *2.* Honey Dews of Economics in Thirukkural *(திருக்குறளில் பொருளாதாரத் தேன்துளிக் கருத்துகள்), 3.* EVR's Why she has become slave? *(பெண் ஏன் அடிமை ஆனாள் - பெரியார்)* என்ற நூல்களை வெளியிட்டுள்ளார்.

# பொருளடக்கம்

பக்கம்

# முன்னுரை

சற்றொப்ப 500 கோடி ஆண்டுகளுக்கு முன்னர்க் கதிரவனிலிருந்து சிதறிய ஒரு நெருப்புக் கோளம் நெபுலா என்றழைக்கப்பட்டது. இந்த நெபுலா பல்லாயிரம் ஆண்டுகளாக அனற் பிழம்பு நிலையிலிருந்து மெல்ல மெல்லக் குளிர்ந்து தற்போது உள்ள இறுகிய உருண்டை நில வடிவம் பெற்றது. அதன் பின்னர் இப்பகுதியில் உயிரினங்கள் படிப்படியாகத் தோன்றலாயின. அமீபா என்கிற முதன் முதலாகத் தோன்றிய ஓர் உயிரியே பிற்காலத்தில் அனைத்து உயிரினங்களின் தோற்றத்திற்கும் அடிப்படைக் காரணமாகும்.

தொல்காப்பியர் காலத்திலேயே உயிரினங்கள் அறிவின் அடிப்படையில் 6 வகைகளாகப் பிரிக்கப்பட்டன. ஓரறிவு உயிரி களுக்குப் புல், மரம் முதலானவையும், ஈரறிவு உயிரிகளுக்குச் சங்கு, நத்தை முதலானவையும், மூன்றறிவு உயிரிகளுக்குக் கறையான், எறும்பு முதலானவையும், நான்கு அறிவு உயிரிகளுக்கு நண்டு, தும்பி முதலானவையும், ஐந்தறிவு உயிரிகளுக்குப் பறவைகள், ஆடு, மாடு, பாம்பு முதலானவையும் எடுத்துக்காட்டுகளாகக் கூறப்பட்டுள்ளன. இதில் மனிதனே ஆறறிவு பெற்ற உயிரியாகக் குறிப்பிடப்படுகிறான். அனைத்து உயிரினங்களுக்கும் மேம்பட்ட அறிவு மாந்தருக்கே உரியது.

நிலத்தின் நடுப்பகுதியிலேயே உயிரினங்கள் தோன்றின என்பது ஆராய்ச்சியாளர்களின் துணிபு. அப்படிப் பார்க்கும்போது இலமூரியா என்றழைக்கப்பட்ட தமிழர்தம் தாயகமாகிய நம் தமிழ்நாடுதான் மாந்தர் தோன்றிய முதல் நிலமாகும். மாந்தர் தோன்றுமிடத்தேதான் மொழி தோன்றலும் இயற்கை ஆகும். எனவே உலகின் முதன் மொழி தமிழேயாகும்.

உலகின் முதல் மாந்தனாகிய தமிழன் தலைசிறந்த நாகரிக வளர்ச்சி பெற்று, செம்மாந்த அக, புற வாழ்க்கை நிலைகளில் உலகோருக்கெல்லாம் முந்தி நின்றான். இதில் பெண்களின் நிலை மிகவும் பெருமிதப்படத்தக்க, பண்பட்ட ஒன்றாக இருந்தது. உலகிலேயே பெண்களை ஆண்பாற்படுத்தி விளித்திடும் வழக்கம் ஒன்றே தமிழரின் நனிசிறந்த நாகரிகத்திற்குத் தக்கதோர் சான்றாகும்.

சங்ககாலம் வரை கல்வி, இல்லறம், விருந்தோம்பல், அரசு, அமைச்சு ஆகியவற்றில் கண்ணியமான முறையில் பெண்கள் வைக்கப்பட்டிருந்தனர். இறைவனின் உடலில் பாதியாகவும், நாட்டின் மக்கள் தொகையில் பாதியாகவும், குடும்ப இன்ப துன்பங்களில் பங்காளியாகவும் இன்னும் பல்வேறு நிலைகளில் சம பங்காளியாகவும் பெண்கள் நடத்தப்பட்டு வந்தனர். ஆரியர் வருகைக்குப் பின்னர், தங்களுடைய தகையுறு நிலையை இழந்து தாழ்வெய்தினர். இத்தகைய பண்பாட்டுத் தாக்கத்தால் தமிழ் மொழி மட்டுமல்லாது மொத்த இனமும் இருளில் மாய்ந்தது. குறிப்பாகப் பெண்ணினம் பொட்டுப் பூச்சிகளாய், புன்மைத் தேரைகளாய், அடிமை விலங்குகளாய் வீழ்ச்சியுற்றது. இவ் அடிமை விலங்கறுக்கும் அறிவுக் கூர்வாளாய் இந்நூல் வடிவெடுக்கிறது.

பல்வேறு புராண, சமய நூல் குறிப்புகளின்படி இவ்வுலகம் இறைவனால் தோற்றுவிக்கப்பட்டதென்றும், ஒரு களிமண் உருண்டையிலிருந்து மனிதனைப் படைத்ததாகவும், அவ்வாறு படைக்கப்பெற்ற முதல் மாந்தர் ஆதாம் அவ்வாள் எனவும், ஆதாம் ஏவாள் எனவும், ஆதி பகவன் எனவும் பல்வேறு விதமாகச் சமயவாதிகளால் கூறப்படுகின்றது. எனினும் அறிவியல் அடிப்படையில் கூறப்பட்ட முதலில் தோன்றிய மாந்தன் தமிழனே என்பது உறுதிபட நிறுவப்பட்டுள்ளது.

இந்நிலையில் ஆதாமின் மனைவியாகிய ஏவாளுக்குத் தடுக்கப்பட்ட மரத்தின் கனியை உண்ண வேண்டாவென இறைவன் விதித்த கட்டளையை அவள் சாத்தானின் தூண்டுதலால் மீறினாள் எனச் சமய நூல்கள் உரைக்கின்றன. எவ்வாறாயினும் இறைவன் கட்டளையை மீறி நிலத்தில் தோன்றிய முதல் புரட்சி ஒரு பெண்ணால் நிகழ்த்தப் பெற்றது ஈண்டு எண்ணத்தக்கதாகும்.

## பெண்ணியம் என்றால் என்ன?

பெண் விடுதலை பற்றிப் பேசும்போது உங்களுடைய தாயை, சகோதரியை நினைத்துக் கொண்டு பேசுங்கள். மனைவியை நினைத்துக் கொண்டு பேசாதீர்கள் என்றார் தந்தை பெரியார்.

'Feminism' என்ற சொல்லுக்குத் தெற்காசிய நாடுகள் தந்துள்ள விளக்கத்தின்படி, 'பெண்கள் சமூகத்திலும் அலுவல்களிலும் வீட்டினுள்ளேயும் ஒடுக்கப்படுவதைப் பற்றிய விழிப்புணர்ச்சியும் அந்நிலையை மாற்றியமைக்க ஆண்களும் பெண்களும் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு மேற்கொள்ளும் முயற்சிகளும்' ஆகும்.

கார்டன் என்ற அறிஞர் "பெண்களின் தாழ்நிலையை ஆராய்ந்து அவை மாற்றிட மேற்கொள்ளப்படும் வழிமுறைகளே

பெண்ணியம்" என்று வரையறுத்தார். ஜெயின் என்பார் "பெண்கள் ஒருவரோடு ஒருவர் சேர்ந்து ஒரு ஆற்றலை உருவாக்கி அவ் ஆற்றலால் விளையும் பெண்மையானது ஆண்களோடு மாறுபட்டு இருந்தாலும், அது ஆண்மைக்கு நிகரானது என ஏற்றுக்கொள்ளச் செய்வது பெண்ணியமாகும்" என்பதாக விளக்கம் அளித்துள்ளார். மற்றொரு அறிஞரான புட்சர் என்பவர் "பெண்ணியம் என்பது பெண்கள் பாலினப் பாகுபாட்டால் அனுபவிக்கும் தனிப்பட்ட பொருளாதாரத் துன்பங்களை எதிர்த்து மேற்கொள்ளும் இயக்கமே" என்று வரையறுக்கிறார்.

'பெண்ணியம்' என்பது பெண்கள் அனுபவிக்கும் எல்லாவித அடக்குமுறைகளையும் எதிர்ப்பது மட்டுமின்றிப் பெண்களின் மேம்பாட்டுக்குரிய வழிமுறைகளையும் காட்டுதலாகும்.

இங்கு நாம் குறிப்பிட விரும்பும் அல்லது அடைய எண்ணும் சிறந்த பெண்ணிய நிலை என்பது எல்லா வகையிலும் ஆண்களுக்கு இணையாகச் சம உரிமை, சம வாய்ப்பு, சம அனுபவம், சம தகுதி, சம நுகர்ச்சி ஆகிய பெரியாரிய நோக்கினை அடிப்படையாகக் கொண்ட தாகும்.

பெண்ணிற்கு விடுதலை என்பது அவளை வறுமைப் பிடியிலிருந்து விடுவிப்பது மட்டுமன்று, பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அச்சுறுத்தப்பெற்று, அறிவுக்கு விலங்கு பூட்டப்பெற்று, மூட நம்பிக்கைகளில் அமிழ்த்தப் பெற்று, சமயச் சடங்குகளிலும் சாஸ்திர சம்பிரதாய வழக்குகளிலும் சிக்க வைக்கப்பட்டுள்ள பெண்களை அவற்றிலிருந்து முற்றாக விடுவிப்பதற்கான செயல்பாட்டைக் கூட்டாக மேற்கொள்வதே முழுமையான பெண்ணிய இயக்கமாகும்.

## பெண் பிறவியின் சிறப்பு

இயற்கையின் படைப்பில் பெண் பிறவியானது தனிச்சிறப்புக்குரியது. மகளிரின் உடலமைப்பும், தியாக உணர்வும், பரந்த உள்ளமும், பொறுமையும் மகப்பேறு எனும் மகத்தான மாந்த இனப் பெருக்கப் பணிக்கு அவர்களைத் தயார்படுத்தி உள்ளன. மகுடங்களை மண்ணில் உருட்டிய மாவீரர்களுக்கும் வாய்த்திடாத நற்பேறு பெண்களுக்கே வாய்த்துள்ளது. எந்த ஒரு சமுதாயத்திலும் பெண்ணானவள் தாய்மை அடைதல் என்பது புனிதமாகக் கருதப்படு கிறது. தாய்மை நிலை ஒரு நிறைவு நிலை ஆகும். தாய்மையில் தான் பெண்மை நிறைவடைகிறது. எனவே பெண்ணியம் போற்றுதல் மாந்த இனத்தின் தலையாய கடமையாகும்.

## பெண்களே முதல் உழவர்கள்

நாடோடி நிலையிலிருந்த மாந்தர் கூட்டம் ஓரிடத்தில் தங்கி வாழும் நாகரிக முதிர்ச்சி நிலையை அடைந்தது. அந்நிலையில் ஆடவர் வேட்டையாடுதல், உணவுப் பொருள் சேகரித்தல் ஆகியவற்றின் பொருட்டு வெளியில் சென்று வந்தனர். ஆனால் பெண்டிர் இல்லத்தில் தங்கி, ஆடவர் கொண்டு வந்த காய் கனிகளை உண்டு, உண்பித்து எஞ்சிய விதைகளையும் கொட்டைகளையும் வெளியில் வீசி எறிந்தனர். அவை முளைத்துச் செடி கொடி மரமாகிப் பலன் தருவதைக் கண்டனர். இதுவே பின்னர் வேளாண்மைத் தொழிலாக உருவெடுத்தது. இவ்வாறு வேளாண்மைத் தொழில் முதன்முதலில் தோன்றிடப் பெண்களே காரணமாயினர் என்பது வரலாற்று ஆசிரியர்களின் கருத்தாகும். பெண்ணே முதல் வேளாண்மைத் தொழிலாளி ஆவாள்.

## நாகரிக வளர்ச்சி

திராவிட நாகரிகம் மிக மிகத் தொன்மையான நகர நாகரிகமே என்பதை யாவரும் ஒப்புவர். திராவிட நாகரிகம் தாய்வழிச் சமுதாய அமைப்பினைக் கொண்டதாகும். எனவே திராவிட மகளிர், தமிழ்ப் பெண்டிர் கல்வி, கேள்வி ஆகியவற்றில் மாண்புக்குரிய இடத்தில் இருந்தனர். அரசவைகளில் மதிப்பிற்குரியோராய் வீற்றிருந்தனர். அரசியராய்க் கோலோச்சினர். ஆனால் ஆரியர் நாகரிகத்தில் பெண்களின் நிலை தாழ்வுற்றது. பெண் தன் தனித் தன்மையை இழந்து, சுதந்திரத்தை இழந்து தந்தைக்கு, கணவருக்கு, மகனுக்குக் கட்டுப்பட்டவளாக ஆக்கப்பட்டிருந்தாள்.

சங்ககாலத்திலும் கூட, தமிழகப் பெண்களின் கல்வி மற்றும் சமூகநிலை பெருமைமிக்க நிலையாகவே இருந்தது. திருக்குறளில் சுட்டப்பெறும், "பெண்ணின் பெருந்தக்க யாவுள" என்னும் தொடரே பெண்மையின் சிறப்பைப் பறை சாற்றுவதாகும்.

## ஆரிய நாகரிகம்

ஆரிய நாகரிகம் என்பதாக எதையும் குறிப்பிட இயலாது. கைபர் போலன் கணவாய் வழியாகச் சிந்துவெளிப் பகுதிக்குள் நுழைந்த ஆரியர் நாடோடிக் கூட்டத்தினர் ஆவர். ஏனெனில் திராவிடர்களைப் போல் ஓரிடத்தில் தங்கி வாழும் முதிர்ந்த நாகரிக நிலையை அவர்கள் எய்தினாரல்லர். சிந்து சமவெளிக்கு வந்தபோது ஒரு முழுமையான நகர நாகரிகம் உடைய ஒரு பெருங்கூட்டம் அதாவது திராவிடர்கள் வாழ்ந்து வருவது கண்டு மிரண்டனர். பெரும் வியப்படைந்தனர். இந்த வியப்பு பொறாமையாகவும் பகையாகவும் மாறி அதனால் விளைந்ததுதான் ஆரிய - திராவிடப் போராக

இருந்திருக்கக் கூடும். ஆரியர்கள், திராவிட நாகரிகத்தின் சிறந்த கூறுகளைத் தம்முடையவையாக்கிக் கொண்டு, பின்னர் அவற்றை ஆரியப் பண்பாடு எனப் பறைசாற்றத் தொடங்கினர். ஆரியரின் மனு தருமத்தில் பெண்களின் நிலை எவ்வளவு இழிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளது என்பதைப் பின்வரும் சுலோகங்களால் தெரிந்து கொள்ளலாம்.

பெண்ணானவள் வீட்டுப் பணிகளைப் பராமரிக்க வேண்டும். தன் விருப்பப்படி எதையும் செய்யக்கூடாது (சுலோகம் 147).

எவ்வளவு சிறப்புக்குரிய பெண்ணாய் இருப்பினும், சிறு வயதில் தந்தைக்கும் மனைவி ஆனபின் கணவனுக்கும், கணவனுக்குப் பின் மகனுக்கும் கட்டுப்பட்டே இருக்க வேண்டியவள் ஆவாள் (சுலோகம் 148).

கணவன் சமயச் சடங்குகளை நிறைவேற்றாமல் அவற்றை உடைத்தெறிந்தாலும், ஒழுக்கமற்ற பெண்களின் பின்னே திரிந்தாலும், வீட்டிலிருக்கும் பெண்ணானவள் அப்படிப்பட்ட கணவனையும் கூட, கடவுளாகத் தொழ வேண்டும் (சுலோகம் 154).

பெண்கள் மறுமணம் செய்து கொள்ளக்கூடாது (சுலோகம் 162).

எந்தக் காலகட்டத்திலும் பெண்ணுக்கு சுதந்திரமோ, தனிப்பட்ட சொத்துரிமையோ கூடாது (சுலோகம் 3).

கணவனுக்கு அடங்கி நடக்காத பெண்ணானவள் மக்களின் சாபத்திற்கு ஆளாகி, அடுத்த பிறவியில் நரியாகப் பிறந்து பாவத்தில் உழல்வாள் (சுலோகம் 30).

இவையெல்லாம் ஆரிய நாகரிகத்தில் பெண்களின் இழிநிலையை எடுத்துக்காட்டும் ஒரு சில செய்திகளாகும்.

மனு தருமத்தை ஆழமாக ஆராய்ந்தால் மாந்தநேயத்துக்கும் மனிதகுலத்திற்கும் எதிரான, ஆபத்தான, அநாகரிகமான கருத்துக்கள் ஏராளமாகத் தெரியவரும்.

ஆரிய நாகரிகம் பரவிய பின்னர்ப் பெண்கள் கல்வியிழந்து சமூக மதிப்பிழந்துஅடிமைநிலை அடைந்தனர். திருமண முறையானது சிக்கல்களும், மூட நம்பிக்கைகளும் நிறைந்ததாயிற்று. இளமைத் திருமணம், உடன் கட்டையேறுதல் எனும் மனிதாபிமானமற்ற கொடுமைகள் பெண்ணினத்திற்கு ஏற்பட்டன. ஆங்கிலேய ஆளுநர், இராசாராம் மோகன்ராய் ஆகியோர் உடன்கட்டை ஏறும் முறையை எதிர்த்தனர்.

## பொட்டுக் கட்டுதல்

ஒரு குறிப்பிட்ட வகுப்பில் பிறந்த பெண்ணை இறைவனுக்கு அடியவளாக ஆக்கி, பின்னர்ப் பார்ப்பனர் உள்ளிட்ட செல்வந்தர் பலருக்கும் அவளைப் போகப் பொருளாக்கிக் கீழ்மைப்படுத்தியது பிற்காலச் சமுதாயம். இதனைப் பொட்டுக் கட்டும் முறை என்று அழைத்தனர். தந்தை பெரியாரின் பெண்ணுரிமைக் கொள்கைகளைத் தம் நெஞ்சில் தாங்கிய டாக்டர் முத்துலட்சுமி ரெட்டி இம்முறையை வன்மையாகக் கண்டித்தார். ஆனால் காங்கிரஸ் இயக்கத்தைச் சார்ந்த சத்தியமூர்த்தி போன்றோர் இம்முறையை ஆதரித்து, பெண்ணினத்தின் பெரும்பகைவராயினர்.

தமிழ்நாட்டில் அமைந்த நீதிக்கட்சி அரசானது 1929ஆம் ஆண்டு தேவதாசி ஒழிப்புச் சட்டத்தைக் கொண்டு வந்து பொட்டுக் கட்டும் முறையை ஒழித்தது.

தமிழ்ச் சமூகத்தில் பெண்ணிய உணர்வுகள், பெண்களை மதித்துப் போற்றும் பாங்கு தொல்காப்பியர் காலந்தொட்டு, திருவள்ளுவர் காலம் வழியாகச் சங்கம் மருவிய காலத்திலும், பிற்காலச் சோழர்கள் காலத்திலும் நிலவி வந்திருக்கிறது. எனவே ஆரியப் பண்பாட்டுக் கலப்புக்குப் பின்னர் தான் பெண் விடுதலை பேச வேண்டிய நிலை தமிழ்ச் சமுதாயத்திற்கு ஏற்பட்டது.

சங்க காலத் தமிழ்ச் சமுதாயத்தில் பெண்ணுக்கு விடுதலை வேண்டிப் போராட வேண்டிய கட்டாயமே இருந்ததில்லை. ஏனெனில் தமிழர் வாழ்வு முழுக்க முழுக்கப் பகுத்தறிவின் அடிப்படையில் அமைந்திருந்தது. மெல்ல மெல்ல, ஆனால் உறுதியாக ஆரிய மயமாக்கப்பட்டு வந்த தமிழர் சமுதாயம் ஐரோப்பியர் வருகைக்குப் பின்னர் இன்னும் பெரிய மாற்றங்களுக்குள்ளாகித் தன் தனித் தன்மையை இழந்து நின்றது.

மேலும் கி.பி.18 ஆம் நூற்றாண்டுவரை ஐரோப்பிய சமுதாயத்தில் சமயக் கருத்துக்கள் ஆதிக்கம் செலுத்தி வந்தன. மக்களின் நம்பிக்கைகள் அனைத்தும் சமயச் சார்புடையனவாய் அரசு அங்கீகாரம் பெற்றதோடு அவற்றைக் கேள்வி கேட்கவோ, மறுத்து உரைக்கவோ சிறிதும் வாய்ப்பு ஏற்படவில்லை. இருப்பினும் ஐரோப்பாவில் தோன்றிய மறுமலர்ச்சி இயக்கம், சீர்திருத்த இயக்கம், புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள், தொழிற் புரட்சி ஆகியவற்றின் காரணமாக மூன்று நூற்றாண்டுகளுக்கு மேலாகப் புதிய கருத்துகள் தோன்றி மக்கள் நெஞ்சில் உரிமை வேட்கையை விளைவித்தன. இக்காலக் கட்டத்தைப் பகுத்தறிந்து தெளியும் காலம் (The Age of Reasoning) என்று அழைத்தனர். இவ்வுரிமை வேட்கை இந்தியப் பெண்களுக்கும் ஏற்பட்டது இயல்பே ஆகும். இருப்பினும் தமிழகத்தில் பெண்மையைப் போற்றும் பண்பு என்பது ஐரோப்பாவில் தோன்றிய தற்கும் முந்தியது எனலாம்.

# தாய்

ஆண் பெண் பிறப்பில் இயற்கை ஆணைவிடப் பெண்ணுக்கே பொறுப்பையும் மதிப்பையும் கூட்டிக் கொடுத்திருக் கிறது. கருவாக மக்களைப் பத்து மாதம் சுமப்பவள்; மானுட வேதனைகளிலேயே மிகப்பெரிய வேதனையான பிரசவ வேதனையைக் குழந்தை பெறும் தோறும் பெற்றுத் துடிப்பவள்; கிட்டத்தட்ட ஏழாண்டுகள் அந்தக் குழந்தையை எடுத்து வளர்ப்பவள் என்ற முறையில் ஒரு தாய் குடும்ப அமைப்பில் பெற்றிருக்கும் பொறுப்பு மிகமிகப் பெரியதாக இயற்கையாகவே அமைந்துள்ளது. இது எளியதும் அன்று, சிறியதும் அன்று. எனவேதான் தாயைத் தெய்வமாக நம் மரபு கருதுகிறது. தெய்வப் பட்டியலில் அன்னையே முன்னவளாக எண்ணப்படுகிறாள். 'மாதா, பிதா குரு, தெய்வம்', 'அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்' என்பன நம்மிடம் வழங்கும் மொழிகள்.

பெண்ணே துன்பங்களைத் தாங்குவதில் ஆற்றல் பெற்றவளாகவும், இரத்த இழப்பை இயல்பாக ஏற்கும் உடல் வல்லமை உடையவளாகவும், மனித குலத்தையே பெருக்க வைக்கும் உற்பத்தி ஊற்றாகவும் விளங்குகிறாள். அவளே 'சக்தி'; ஆணுக்கும் அவளே சக்தி; குடும்பம் முழுதுக்கும் அவளே சக்தி. 'பெண்ணின்றி ஆண் இல்லை' 'சக்தி இன்றிச் சிவனில்லை'. இது கடவுளைப் பற்றிய மொழி மட்டுமல்ல. மானுடகுல மந்திரம். எனவேதான் பெண்ணைச் சக்தியாக உருவகப்படுத்தி இலட்சுமியாகவும், துர்க்கையாகவும், சரசுவதியாகவும் நம் மக்கள் நம்பி வழிபட்டு வருகின்றனர். இது சரியா தவறா என்பது வேறு.

சிறு குழந்தையாகக் கொண்டு வழிபடும்போது சந்திகா என்றும், ஏழு வயதில் சண்டியா என்றும், எட்டு வயதில் சாம்பவி என்றும், பத்து வயதில் கவுரி என்றும், சிருஷ்டியில் மகாகாளி என்றும், பிரளயத்தில் மகாமாரி என்றும், செல்வத்தை அளிப்பதில் இலட்சுமி என்றும் செல்வத்தை அழிப்பதில் மூதேவி என்றும் பெயரிட்டு அழைக்கின்றனர். இப்பெயரீடுகள் தத்துவத்தின் ஆக்கத் திறனையும் அழிவுத் திறனையும் அறிவிக்கின்றன. எனவேதான் பராசக்தி என்கின்றனர். இப்பராசக்தியே மதுரையில் மீனாட்சியாகவும், காஞ்சியில் காமாட்சியாகவும். காசியில் விசாலாட்சியாகவும் வணங்கப்படுகிறாள். இந்த நம்பிக்கைகள் சரியா தவறா என்புது ஆழ்ந்த ஆய்வுக்குரியது.

பழைய சமுதாய அமைப்பில் தாயே முதன்மை எய்தி யிருந்தாள். தாய்வழிச் சமுதாயமே மிகப் பழங்காலத்தது. முற்காலத்தில் தாயை முன்னிறுத்தியே குடும்பம் இயங்கிற்று, சமுதாயம் இயங்கிற்று. இதன் அடையாளங்களைத் தமிழ்ச் சமுதாயத்தில் இன்றும் காணுகிறோம். உலகிலேயே அம்மாவைத் தலைமைப்படுத்தி இன்றும் வழிபடும் தாய்த் தெய்வ வழிபாடு தமிழ்நாட்டில்தான் மிகுதி; தமிழரிடையேதான் மிகுதி. ஊர்தோறும் உள்ள அம்மன் கோயில்கள் இக்கருத்திற்குக் கட்டியம் சாற்றுகின்றன. ஒரு காலத்தில் தாயைச் சொல்லிக் குழந்தையைக் குறிப்பிடும் வழக்கமே நம்மிடம் இருந்தது. பிறப்பு அடிப்படையிலும் வளர்ப்பு அடிப்படையிலும் அதுவே இயல்பானதும் கூட. இதன் விளைவாகத் தாயின் பெயரையே முதல் எழுத்தாக வைத்துக் கொள்ளும் வழக்கம் தமிழரிடமும் ஆப்பிரிக்கரிடமும் இருந்தது. பழந்தமிழ் நாடான சேர நாட்டிலும் தமிழகத்தின் தெற்கு எல்லையான குமரி மாவட்டத்திலும் தாயின் பெயரை முதல் எழுத்தாகப் போற்றும் பழக்கம் அண்மைக் காலம் வரை நடைமுறையில் இருந்தது. மூதாதையரின் சொத்து ஆணான மகன்வழி இறங்காமல் பெண்ணான மகளுக்கே உடைமையாக இருந்தது. இந்த உரிமையே 'மருமக்கள் தாயம்' எனப்பட்டது. பழந்தமிழரிடம் இருந்த இந்த உறவு முறை ஐரோப்பிய வரவால் மாறியது; மாற்றப்பட்டது.

தமிழரின் கடவுள் முருகன். முருகனைத் தாயைச் சொல்லிக் குறிப்பிடுவதே பழந்தமிழரின் வழக்கம். முருகனின் தாயின் பெயர் - கொற்றவை. அவள் மிகப் பழைமையானவள் - பழையோள் என்று அழைக்கப் பெற்றாள். எனவே தான் சங்க இலக்கியங்கள் முருகனைக் 'கொற்றவை சிறுவ' என்றும், 'பழையோள் குழவி' என்றும் அழைத்தன. கொல்+தவ்வை என்பதே கொற்றவை ஆயிற்று. கொல் என்றால் வெற்றி என்று பொருள். தவ்வை என்றால் தாய் என்று பொருள். வெற்றியைத் தருபவள் தாய் என்பதே கொற்றவை என்பதன் கோட்பாடு.

தாயைச் சக்தியாகக் கொண்டு வழிபடுவது பழைய மரபாக இருந்தது. அதுவே தாய்வழிபாடு எனத் தனி மதமாகவும் போற்றப்பட்டு வந்தது. சக்தியை முதன்மையாகப் போற்றும் மதம் 'சாக்தம்' எனப்பட்டது. கல்வித் தெய்வமாகிய சரசுவதியையும், செல்வத்தின் தெய்வமாகிய இலட்சுமியையும், வீரத்தின் உறைவிடமாகிய துர்க்கையையும் ஒன்றாக இணைத்துச் சாக்தம் பின்பற்றப்பட்டு வந்தது.

தாயை முன்னிறுத்தும் தாய்ச் சமுதாய அமைப்பும், தாய்த் தெய்வ வழிபாடும் அவற்றிற்கு எதிரான வேற்றுச் சமுதாய வரவாலும் உறவாலும் மாறின. மாற்றப்பட்டன. என்றாலும் தாயையே தலைமை யாகக் கொள்ளும் நம்மவரின் பழக்கம் விடைபெற்று விடவில்லை.

அஃது அணையாத நெருப்பாக ஆங்காங்கே நீறுபூத்துக் கனன்று கொண்டிருக்கிறது. தற்போது ஆயிரக்கணக்கான அம்மன் வழிபாடாக எல்லா இடங்களிலும் கொண்டாடப் பெறுகிறது. குழந்தையைச் செயற்கை முறையில் உருவாக்கும் 'குளோனிங் முறை' அயல் நாடுகளில் அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறது. ஒருவர் கருவை இன்னொருவர் வயிற்றில் வைத்து வளர்த்துக் குழந்தை பெறும் முறையும் வரத் தொடங்கிவிட்டது. இவை எல்லாம் தாயின் முதன்மையைக் குறைக்கப் போவதில்லை. சுமப்பவள், பெறுபவள் எனும் நிலைகளைத் தாண்டி வளர்ப்பவள், வளர்த்து உருவாக்குபவள் தாயாகவே உலகில் என்றும் இருப்பாள். நல்ல தாயே ஒரு குழந்தையின் முதல் பள்ளிக்கூடம். நல்ல தாயால்தான் சிறந்த குழந்தையை வளர்த்து, எடுக்க முடியும். 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்பது பழமொழி. நல்ல தாய்மார்களால் தான் நல்ல சமுதாயத்தை உருவாக்க முடியும். இதற்குச் சரியான சாட்சி மாதவி. இலட்சியத் தாயாக இருந்த அவள் தன் மகளை வளர்த்து அனைத்துக் கல்வியையும் போதித்து அனைவருக்கும் சோறு போடும் அன்னையாக மணிமேகலையை உருவாக்கினாள். சிவாஜியை, 'வீர சிவாஜியாக வளர்த்தது' அவர் தம் தாயார் என்பர். தாய்மார்களின் தியாகத்தில்தான் ஒரு நல்ல சமுதாயம் கட்டப்பட முடியும்; கட்டப்பட வேண்டும்.

சொர்க்கம் எங்கே இருக்கிறது என்று தேடுபவனிடம் 'உன்னைப் பெற்ற தாயின் காலடியில்' இருப்பதாகப் பழமொழி கூறுகிறது. தியாகம், கடமை, பொறுமை, அன்பு, பாசம் இவை மலரக் காரணமானவள் தாயே. இந்தத் தாயின் வயிறு தான் ஏசுநாதர், நபி நாயகம், சித்தார்த்தர்கள், காந்தியடிகள், பெரியாரைப் போன்றவர் களையும் படைத்தது. இந்தத் தாய்தான் முன்பு மகளாக, மருமகளாக, மனைவியாக, பாட்டியாகப் பல்வேறு நிலைகளைக் கொண்டவள்.

'ஈன்று புறந்தருதல் என் தலைக் கடன்' என்று தாயின் கடனைப் பழந்தமிழ் இலக்கியம் சுட்டும். கடவுளைத் தேடிக் காடு, மேடு என்று மனிதர்கள் அலைகிறார்கள். எத்தனையோ கோயில்களுக்குச் சென்று தேடுகிறார்கள். ஆனால் கடவுள் நம் இல்லங்கள்தோறும் இருக்கிறார் நம் தாயின் வடிவத்தில் !

பத்து மாதங்களாக அங்கமெல்லாம் நொந்து சேயைப் பெறுகிறாள் தாய். பெற்ற குழந்தையைப் பேணிக் காக்கிறாள். குழந்தை அழுமே, பசிக்குமே என்று நினைத்து நினைத்துப் பாலை ஊட்டுகிறாள். கண்விழித்து நோய் என்றும் துன்பம் என்றும் வாடும் குழந்தையை நாளும் வளர்த்து எடுக்கிறாள். கல்வி அறிவில் மேம்பட்டவனாகத் தன் குழந்தை விளங்க விரும்புகிறாள். பள்ளிக்கு அனுப்பிப் பாடம் பயிற்றுவிக்கிறாள். குழந்தை இல்லத்தில் தனியே இருந்துவிட்டால் அத்தாயின் மனம் பதைபதைத்து விடும்.

வேலைக்குச் செல்லும் தாய்மார்கள் அக்குழந்தையைப் பள்ளிக்குப் புறப்பட வைத்துவிட்டு அவர்களும் உரிய நேரத்தில் அலுவலகத் திற்குச் செல்லுகிறார்களே அத்தகையோர் படும் அல்லல்கள் இந்தியச் சூழ்நிலையில் கொஞ்சமா! கொஞ்சிக் குலவி மகிழும் பருவ வயதுக் குழந்தையைக் குழந்தைகள் காப்பகத்திற்குச் சென்று விட்டுச்செல்லும் தாயின் மனம் சொல்ல முடியாத வேதனையில் துடிக்கும். தந்தை தன் குழந்தையைக் காப்பதைவிடத் தாய் தான் அதிக நேரம் குழந்தையைக் காக்கிறாள்.

அன்பு காட்டும் தாயாக அமையாமல் அறிவூட்டும் தாயாகவும் ஒரு தாய் அமைய வேண்டும். குழந்தைகளுக்காகத் தன்னைத் தொலைக்காட்சி, உறவு, நட்பினரோடு பேச்சு, அனாவசியப் பொழுதுபோக்கு, இவற்றைத் தியாகம் செய்து குழந்தைகளுக்காகவே வாழ வேண்டும். வரலாற்றுக் கருத்துகள், வாழ்வியல் கருத்துகள் இவற்றை ஒரு தாய் கற்று, குழந்தைகளுக்கும் கற்பித்தல் வேண்டும். குழந்தைகளைச் சொந்தக் காலில் நிற்கக் கற்றுத்தர வேண்டும். மீனை வாங்கிக் கொடுப்பதைவிட மீன் பிடிக்கும் முறையைக் கற்றுத்தருதல் வேண்டும் என்பர் மேலை நாட்டார். அங்கே குழந்தைகளை நீச்சல் அடிக்கக் கற்றுத் தரும்போது இரக்கம் இல்லாமல் தண்ணீரில் தூக்கிப் போட்டு விடுவர். தண்ணீரில் கைகால் அடித்து நீச்சலடிக்கக் கற்றுக் கொள்ளும் குழந்தை. இங்கே பரிவுகாட்டித் தாய் தன் மடியிலேயே குழந்தையை வைத்துக் கொண்டால் குழந்தை வாழ்நாள் முழுதும் நீச்சல் தெரியாமலே ஆகிவிட நேரிடும். கண்டிக்க வேண்டிய இடத்துக் கண்டித்துத் திருத்த வேண்டும்.

ஒருவன் ஒரு தாய்ப் பசுவை அடித்துக் கொண்டே இருந்தானாம். ஏனப்பா இந்தப் பசுவை இவ்வாறு அடிக்கிறாய் என்று கேட்டதற்கு, கட்டுத் தறியில் அமையாத, துடுக்குடன் சுற்றித் திரிந்த, அடிபணியாத கன்றுக் குட்டியைப் பெற்றதற்கு இந்தத் தாயைத்தான் அடிக்க வேண்டும் என்றானாம். இந்தக் காலத்தில் குழந்தையை வளர்ப்பது என்பது அவ்வளவு எளிய செயல் அன்று. பலவற்றைக் கடந்து எதிர்நீச்சல் போட வேண்டியதிருக்கிறது.

குழந்தைகளின் எதிரே தாய் தந்தையர் சண்டையிடும்போது அந்த நிகழ்வு எத்தனையோ குழந்தைகளைப் பாதிக்கும். சில குழந்தைகளின் மனநிலைகூடப் பாதிக்கும் அளவுக்குப் பெற்றோரின் வாய்ப்பேச்சும் கைகலப்பும் அமைந்திருக்கும். 'நூலைப்போலச் சேலை' என்ற பழமொழிப்படி குழந்தைகளும் பெரியவர் ஆகி மனத்தில் பதிவாகிப் பெற்றோரைப் போலவே அவர் தம் குடும்பத்திலும் சண்டையிடுவர். அதிகச் செல்லம் கொடுத்துப் பிள்ளைகளைப் பெற்றோர் கெடுத்துவிடவும் கூடாது. தாயாரின் செல்லப் பிள்ளைகள்

வெண்ணெய் வெட்டும் வீரர்களாகவே உருவாகி விடுவர். தாய் கொடுக்கும் செல்லம் அவரை நல்லவராக்க வேண்டும்; வல்லவர் ஆக்க வேண்டும்.

அறிவுள்ள மேதைகளை உருவாக்கிய தாயார் பலர் உள்ளனர். நாம் மேதைகளாக ஆக்க முடியாவிட்டாலும் இந்தக் குடிபோதை, போதைமருந்து, புகை, வெண் சுருட்டுகள், மது வகை, திரைப்படப் போதை, கிரிக்கெட் எனும் போதை, சோம்பல் எனும் போதை, தொலைக்காட்சித் தொடர் எனும் போதை இவற்றை நம் குழந்தைகள் கெடுவதற்கு என்றே கட்டவிழ்த்துவிட்ட இந்த இந்தியச் சூழலில் நம் குழந்தைகளை வல்லவர் ஆக்குவது என்பது ஒரு பக்கம் இருந்தாலும் கூடத் தாய்மார்களாகிய நாம் அவர்களை நல்லவர் என்ற நிலைக்குக் கொணர அரும்பாடுபடுவோம்.

- அன்னையர் நாளில் அரிய சிலவற்றை மனத்தில் இருத்துவோம்.
- குழந்தைகளுக்கு உற்ற தோழியாக, நண்பியாக வழிகாட்டியாக வாழ்ந்து காட்டுவோம்.
- குழந்தைகளின் குறைகளைப் பிறர் எதிரில் கூறாத தாயாக இருப்போம்.
- வேறு குழந்தைகளோடு ஒப்புமைப்படுத்தாத தாயாராக வாழ்வோம்.
- உணவு வேளைகளில் ஒன்றாக உணவு உண்டு, குழந்தைகளைப் பேச வைத்து அவர்களைப் புரிந்து செயலாற்றுவோம்.
- சிக்கல்கள் தோன்றும்போது குழந்தைகளையும் ஒன்றாக இருத்தி ஆலோசனை கேட்போம்.
- குழந்தைகளுக்கு, பிறரிடத்து தியாகம், அன்பு, பரிவு, உதவும் தன்மை இவை வளரக் காரணமாக அமைவோம்.
- நாமும் நடப்போம்; குழந்தைகளையும் நடக்க வைப்போம்.

# தாய்மை

உலகத்தின் எல்லா மொழிகளிலும் மிக அழகான சொல் ... அம்மாவைக் குறிக்கும் சொல்!

பிரபஞ்சத்தைப் படைத்தளித்த பரம்பொருள் எல்லா இடங்களிலும் ஒரே நேரத்தில் இருக்க முடியாததால்தான், ஒவ்வோர் உயிருக்கும் ஒரு தாயைத் தந்தது. தாயும் தெய்வமும் தனித்தனி வடிவங்கள் இல்லை!

கடவுளின் படைப்பில் தன்னலத்தின் நிழல்கூடப் படாத தாயின் படைப்பு ஒன்றுதான். இதில் யாருக்காவது சந்தேகம் இருந்தால், தான் பெற்ற விழியற்ற இருபிள்ளைகள் பார்வையைப் பெறுவதற்காகத் தன் விழிகளைத் தரும் நோக்கில் சமீபத்தில் தற்கொலை செய்துகொண்ட தமிழ்ச்செல்வியைச் சிந்தித்தால் போதும். இதயமுள்ள அனைவரையும் அழச் செய்த தமிழ்ச்செல்வியின் தற்கொலை ஒரு தவறான நடவடிக்கை... ஆனால், அதைத் தன்னலமற்ற ஒரு தாயால் மட்டுமே செய்ய முடியும்.

தாயை வேறெந்த மொழியில் விளக்கினாலும் வராத பொருள் தமிழில் விளக்கினால் வரும். தாய் தன்னுடைய குழந்தைக்கு உயிர் கொடுக்கிறாள். கருவில் உயிர் கொடுத்தவள். அந்த உயிர் உறைவதற்கு மெய்(உடல்) கொடுக்கிறாள். பத்து மாதம் சுமந்து பின்பு அதை உலகத்தில் உயிர்மெய்யாய் உலவவிடுகிறாள். இந்த உண்மையை உணர்த்தவே உயிர், மெய், உயிர்மெய் எழுத்துகள் சேர்ந்து உருவானது 'அம்மா'!

'இந்தியாவில் ஓர் இலட்சியப் பெண் தாயே. அவள்தான் தன்னலமற்று, துன்பங்களைச் சகித்துக்கொள்கிற, எந்தப் பாவத்தையும் மன்னிக்கிற மனோபாவம் கொண்டவள்.

மேலை நாடுகளில் பெண், ஒருவனால் மனைவியாகப் பார்க்கப்படுகிறாள். ஆனால் கிழக்கில் அவள் எப்போதும் தாயாகவே போற்றப்படுகிறாள். இந்தியாவில் பெண் என்பவள் நம் கண்களுக்குத் தரிசனம்தரும் தெய்வம். அவள் தன் முழு வாழ்க்கையையும் தாய்மைக்கே அர்ப்பணிக்கிறாள்' என்றார் சுவாமி விவேகானந்தர்.

பூ அரும்பாகி, மலராகி, கனியாகக் கனிவதுபோல், பெண்ணுக்கும் வாழ்வில் பெண்மை, தாய்மை, இறைமை என மூன்று

நிலைகள் உண்டு. பெண்மைக்குள் தாய்மை மலர்ந்தால் இறைமை தானாய் மலரும். மலையில் உள்ள கல்லை யாரும் மதித்து வணங்குவ தில்லை. அது சிற்பியின் கைபட்டுச் சிலையாகும்போது அதற்கு ஒரு மரியாதை பிறக்கிறது. அந்தச் சிலை கோயிலின் கருவறையில் வைக்கப்படும்போது தொழுகைக்குரிய தெய்வமாகிறது. கன்னிப் பெண் ஒரு கல்லைப்போன்றவள். இல்லற வாழ்க்கையில் அவள் சிற்பமாகச் செதுக்கப்படுகிறாள். தாயாகும்போது குடும்பக் கோயிலின் கருவறைக்குள் அவள் கடவுளாக்கப்படுகிறாள்.

உலகத்தின் எந்த இடத்திலும் கெட்ட பிள்ளை உண்டு. ஆனாலும் எங்கேயும் கெட்ட தாய் இல்லை. இதற்கு நம் இதிகாசத்திலும் சான்று உண்டு.

கௌரவர்களின் தாய் காந்தாரி. கணவன் காணமுடியாத உலகைத்தானும் காண்பதில்லை என்று கண்களைப் பட்டுத் துணியால் மூடி மறைத்துக் கொண்டவள். காலம் முழுவதும் கற்புத் தவம் புரிந்த அந்தத் தாயுள்ளம், பாண்டவர்களால் துரியோதனனுக்குத் துன்பம் நேர்ந்துவிடுமோ என்று கலங்கித் தவித்தது. போர் மேகம் சூழ்ந்தபோது அவள் துரியோதனனை அழைத்தாள்: 'மகனே! என் கற்புத் தவத்தை' உன் உடலுக்குக் கவசமாக்குகிறேன். குழந்தையாய்ப் பூமியில் நீ பிறப்பெடுத்த போதிருந்த நிர்வாணக் கோலத்தில் என் முன் வந்து நில். துணியால் மூடி வைத்திருக்கும் என் விழி திறந்து உன்மேனி பார்க்கிறேன். என் பார்வை படுமிடமெல்லாம் உருக்கின் வலிமை. அதன் பின் உன்னை யாராலும் அழிக்க முடியாது! என்றாள்.

தாயின் முன்னால் நிர்வாணமாக நிற்க நாணிய துரியோதனன் இடுப்பில் ஓர் அரையாடை அணிந்து வந்தான். கணவனின் கரம் பற்றிய காலம்தொட்டு மூடிவைத்த விழிகளைப் பட்டுத் திரை விலக்கி, முதன்முதலாக மகனைப் பார்த்தாள் காந்தாரி. ஆடை மூடிய தொடைப் பகுதியில் அவள் பார்வைபடாததால் அந்த இடம் மட்டும் பலவீன முற்றது. அதை அறிந்து வைத்திருந்த கண்ணன் காட்டிய சமிக்ஞையின்படி, களத்தில் பீமன் துரியோதனனின் தொடையில் கதையால் அடித்து நிலத்தில் வீழ்த்தினான்.

தான் பெற்ற நூறு பிள்ளைகளும் அழிந்ததற்கு மூல காரணம் கண்ணனே என்று புரிந்து கொண்டாள் காந்தாரி 'கண்ணா! நான் ஒரு பத்தினி என்பது உண்மையானால் இவ்வளவு அழிவுக்கும் அடித்தளமான நீ அழிந்து போவாய். இன்றிலிருந்து முப்பதாறு ஆண்டுகள் முடியும்போது உன் குலம் முழுவதும் அழியும். உறவுகளின்றி அநாதையாய் நீ மரணத்தைச் சந்திப்பாய். இது சத்தியம்!' என்று சபித்தாள். அவளுடைய சாபம் அப்படியே நிறைவேறியதாகப் பாரதம் கூறுகிறது. கெட்ட பிள்ளைக்குத் தாயாக இருந்தாலும்

பாசமில்லாத கெட்ட தாயை எங்கும் பார்க்க முடியாது. அவதார புருஷனையும் சபிக்கும் ஆற்றல் பெற்றது தாயின் பாசம்!

உலகத்தின் எல்லா உறவுகளையும் துறந்துவிட்ட துறவிகள் கூட, எந்த நிலையிலும் துறக்க முடியாத உறவு தாயின் உறவு. பற்றுகளிலிருந்து விடுபட்ட துறவிகளுக்குப் பூர்வாசிரமம் இல்லை என்கிறது சனாதன தர்மம். ஒரு துறவியை, அவரைப் பெற்ற தந்தை சந்திக்க நேர்ந்தால், தந்தைதான் அந்தத் துறவியின் கால்களில் விழுந்து வணங்க வேண்டும். ஆனால் தாய் சந்திக்க நேர்ந்தால், அவள் திருவடிகளில் துறவி விழுந்து தொழ வேண்டும். தந்தைகட்கு இல்லாத மதிப்பை இந்து தர்மம் தாய்க்குத் தந்திருக்கிறது.

கேரளத்தில் உள்ள காலடியில் அவதரித்த ஆதிசங்கரர், எட்டு வயதில் நான்கு வேதங்களைக் கற்று முடித்து, பன்னிரண்டு வயதில் சாத்திரங்கள் அனைத்தையும் தேர்ந்து தெளிந்து, பதினாறு வயதில் பாஷ்யம் எழுதி, முப்பத்திரண்டு வயதில் அத்வைதியானவர். அவர் துறவுக் கோலம் பூண்டபோது, தான் மட்டும் தனி மரமாக எப்படி வாழ்வது என்று தவித்தாள் அன்னை ஆர்யாம்பிகை. மரணத்தின் மடியில் மூச்சுத் திணறும் போது மகனுடைய மடியில் தலைசாய்க்கும் வரம் வேண்டினாள். 'தாயே' ! நான் எங்கிருந்தாலும் உன் மரணப் பொழுதில் வந்து மடி சுமப்பேன்' என்று சத்தியம் செய்தார் சங்கரர்.

காலம் அதன் போக்கில் வேகமாக ஓடியது. ஒருநாள் சிருங்ககிரியில் சீடர்களுக்கு நடுவே அமர்ந்திருந்தபோது அவருடைய நெஞ்சில் தாயின் மரணப்படுக்கை நிழலாடியது. உடனே, காலடி நோக்கி விரைந்தார். மரண வாசலில் தடுமாறிக் கொண்டிருந்த தாயின் தலையை மடியில் சுமந்தார். ஆர்யாவின் ஆன்மா அமைதியடைந்தது. ஊரும், உறவும் கூடியது. ஈன்ற அன்னைக்கு இறுதிக்கடன் முடிக்க சங்கரர் முடிவெடுத்தபோது 'துறவிக்கு ஏது உறவு'? என்று உரத்த குரலில் ஊர் கேட்டது. 'சந்நியாசம் வாங்கியவன் பிரேத சம்ஸ்காரம் செய்ய முடியாது' என்று அது தீர்ப்பு வாசித்தது. 'தர்மத்தை மீறினால் தள்ளி வைத்து விடுவோம்' என்று சனாதனச் சமூகம் மிரட்டியது.

ஊரின் மிரட்டலுக்கும், உறவின் ஒப்பாரிக்கும் சங்கரர் வளைந்து கொடுக்கவில்லை. தன்னைப் பெற்ற தாயின் சடலத்தைத் தோளில் சுமந்தார். தனியனாய்க் கொல்லைப்புறம் நோக்கி நடந்தார். அன்னையின் சடலத்தை இறக்கி வைத்து, 'அக்கினி தேவனே ! சந்நியாச தர்மத்தைத் தாங்கி நிற்கும் நான் இதுவரை உனக்கு அவிர்ப்பாகம் அளிக்கவில்லை. இன்று என் தாயின் தேகத்தை உனக்கு ஆகுதியாய் அளிக்கிறேன். ஏற்றுக்கொள்' என்றார். அன்னை ஆர்யாவின் உடலை உடனே நெருப்பு சூழ்ந்தது. விருப்பு வெறுப்பு களைக் கடந்த ஞானநிலை அடைந்த ஆதிசங்கரர் சுகதுக்கங்களுக்கு

ஆட்பட்ட சாதாரண மனிதனைப் போல் தாயின் அன்பை நினைந்து நெஞ்சம் உருகி, ஐந்து பாடல்களில் தன் சோகம் முழுதையும் இறக்கி வைத்தார். அந்தப் பாடல்கள் வடமொழியில் 'மாத்ருகா பஞ்சகம்' என்று அமரத்துவம் பெற்றுவிட்டன.

வாழ்க்கை உறவுகளை ஒரே நொடியில் உதறித் தள்ளிய பட்டினத்தாராலும் தாயின் உறவைத் தள்ள முடியவில்லை. தெரு மண்ணில் உருண்டும், குப்பையில் புரண்டும், காடு மேடுகளில் கால் கடுக்கத் திரிந்தும் பட்டினத்தாரின் காலம் கடந்த போது, ஒரு நாள் அவரைப் பெற்றெடுத்த தாய் கண் மூடிய செய்தி வந்து சேர்ந்தது. மயானம் நோக்கி ஓடினார். சுற்றத்தார் அடுக்கியிருந்த சிதையைத் தள்ளிவிட்டுப் பச்சை வாழைமட்டையில் தாயின் சடலத்தைக் கிடத்தி ஞான நெருப்பால் எரித்தார். பாசத்தால் ஆற்றமாட்டாமல் அனைவரும் தேம்பித் தேம்பி அழும்படிப் பத்துப் பாடல்கள் பாடினார். தாயின் தியாகத்தை விளக்கும் பட்டினத்தாரின் பத்துப் பாடல்களை விஞ்சி நிற்கும் படைப்பு உலகத்தின் எந்த மொழியிலும் இருக்க முடியாது.

கன்னி மேரிக்கு மகனாய்ப் பிறந்த கர்த்தர் இயேசு கல்வாரி மலையில் சிலுவையில் அறையப்பட்ட போது, கண்மூடும் கடைசி நிமிடத்தில் தன் தாயை நினைத்தார். உடற் கூட்டிலிருந்து உயிர்ப் பறவை பறக்கும் அந்தக் கடைசி நொடியில் ஒவ்வொருவர் நெஞ்சிலும் தாயின் நினைவே நிழலாட வேண்டும் என்று உணர்த்துவதற்காகவே தன்னுடைய மரணப் பொழுதில் அவர் தாயை நினைத்தார்.

'தாயின் காலடியில்தான் சொர்க்கம் இருக்கிறது' என்று நபிகள் நவின்றார். 'ஒரு மனிதனின் அழிக்க முடியாத பாவங்களுள் ஒன்று தாயையும், தந்தையையும் புறக்கணித்தல்' என்கிறது திருக்குர்-ஆன்.

நிலத்துக்கடியில் நிறைந்து கிடக்கும் நீர் கிணற்றில் தெரிவது போல், பசுவின் உடலில் வியாபித்திருக்கும் பால் மடிக்காம்பில் சுரப்பது போல், தெய்வம் ஒவ்வொருவனுக்கும் தாயில் தரிசனம் தருகிறது என்பது நம் வைதீக மதத்தின் வாக்கு. ராமகிருஷ்ண பரமஹம்சர் தக்ஷிணேசுவரம் காளி கோயிலில் அம்பிகை தரிசனத்தில் ஆழ்ந்து கிடந்தாலும், பெற்ற தாயை இறுதிவரை பராமரிக்க மறக்க வில்லை. அவருடைய ஆன்மீகச் சீடர் விவேகானந்தர் வேதாந்த சிகரத்தில் நின்ற நிலையிலும், தாயின் விருப்பத்தை நிறைவேற்ற, தனக்குச் சடங்குகளில் நம்பிக்கை இல்லாவிடினும் கங்கையில் நீராடி, ஈர உடையுடன் காளி கோயிலில் அங்கப் பிரதட்சணம் செய்யத் தயங்கவில்லை.

'என்னுடைய நல்ல குணங்கள் எல்லாவற்றுக்கும் என் தாய்க்கு நான் கடன்பட்டவன்' என்றார் ஆபிரகாம் லிங்கன். 'பிரெஞ்சு நாட்டில் நல்ல குடிமக்கள் உருவாக நல்ல தாய்மார்கள் பெருக வேண்டும்' என்றான் நெப்போலியன். 'அன்னையின் செல்வாக்கில்தான் என் பண்புகள் சிறந்தன. அவளால்தான் என் இலக்கிய ரசனையும் வளர்ந்தது' என்று நன்றி செலுத்தினார் காந்தியைச் சிந்தனையளவில் மகாத்மாவாகச் செதுக்கிய ரஸ்கின்.

கோடிக்கணக்கில் மக்களைக் கொன்று குவித்த ஹிட்லரின் இதயத்தில் கூட இறுதிவரை தாய்ப்பாசத்தின் ஈரம் இருந்தது. இரண்டாம் உலகப் போரில் மோசமான தோல்வியைத் தழுவியதும் துப்பாக்கியால் சுட்டுத் தற்கொலை செய்துகொண்ட ஹிட்லர், தன் மார்பில் தாயின் படத்தைத் தழுவியபடி நாற்காலியில் சரிந்து கிடந்தார் என்று சரித்திரம் சொல்கிறது.

'முள்ளில் படுக்கையிட்டுப் பெற்றோர் இமையை மூடவிடாத பிள்ளைக் குலங்கள்' பல்கிப் பெருகுவது பாரதப் பண்பாட்டுப் பெருமைக்கு உகந்ததன்று. முதியோர் இல்லங்கள் எண்ணிக்கையில் அதிகரிப்பது இந்த மண்ணுக்குரிய நாகரிகத்தின் நல்ல அடையாள மில்லை. குடந்தையில் தாயைத் தவிக்கவிட்டு, காசியில் கோதானம் செய்பவனைக் கடவுள் கண் திறந்து பார்க்க மாட்டான். நன்றி மறந்து தாயையும், தந்தையையும் புறக்கணிப்பவன், வாழும் உலகிலேயே நரகத்தை நாள்தோறும் அனுபவிப்பான். பெற்றோர்க்குச் சோறு போடாதவன் வாழ்க்கையில் உயர்ந்ததாக வரலாறில்லை.

அரசியலும், சினிமாவும் நம்மைப் பாதித்ததுபோல் வேறு எதுவும் பாதித்ததில்லை. ராஜரிஷியாய் வாழ்ந்த காமராஜர் தாய்க்கு மட்டும் மாதம்தோறும் அடிப்படைச் செலவுக்கு 120 ரூபாய் அனுப்பி வைத்தார். கலைஞர் கருணாநிதி நாத்திகம் பேசினாலும் தாயைத் தெய்வமாகத் தொழுபவர். எம்.ஜி.ஆரும், சிவாஜி கணேசனும் அம்மா என்ற சொல்லின் ஆழம் கண்டவர்கள். இவர்கள் அனைவரும் வாழ்க்கையில் வளர்ந்தவர்களே தவிர, வீழ்ந்தவர்களில்லை. இந்த இரண்டு துறைகளாலும் எத்தனையோ வழிகளில் மோசமாகப் பாதிக்கப்பட்ட என் வாழ்கால இளைஞர்கள் தாயைப் போற்றுவதில் இவர்களைத் தாராளமாகப் பின்பற்றலாம்.

பணத்தை மையமாக வைத்து உறவுகள் மதிக்கப்படும் காலம் இது. தாய்ப்பாலில் வளர்ந்து, தந்தையின் வியர்வையில் உயர்ந்து, வெளிநாடுகளில் பணியாற்றிப் பணம் சேர்க்கும் இளைஞர்கள் சிலர் இன்பங்களைப் பட்டியலிட்டு அனுபவிக்கும் அவசரத்தில், ஆதரவற்று நிற்கும் பெற்றோரைப் புறக்கணித்துவிடுகின்றனர். அப்படிப் புறக்கணிக்கப்பட்ட பெற்றோரின் கண்ணீரில் வரையப்பட்டதுதான் இந்தக் கவிதை ....

'மகனே ...
நீ பிறந்த அன்று
தோட்டத்தில் வைத்தோம்
ஒரு தென்னங்கன்று
எங்கள் வியர்வையில்
நீ உயர்ந்தாய்
நாங்கள் வார்த்த தண்ணீரில்
தென்னை வளர்ந்தது
எங்கோ இருந்து நீ ஈட்டும் பணம்
உனக்கு இன்பம் தருகிறது
இங்கே இருக்கும் தென்னை மரம்
எங்கள் இருவருக்கும்
சுக நிழலும் சுவை நீரும் தந்துதவுகிறது
ஒரு நாள் ...
நீ ஈ மெயிலில் மூழ்கியிருக்கும்போது
எங்களை ஈ மொய்த்த செய்தி வந்து சேரும்
இறுதிப் பயணத்தில்
நீ இல்லாமற் போனாலும்
தென்னை ஓலை
எங்கள் கடைசி மஞ்சமாகும் !'

பாசத்தின் வேர்களினால்தான் பாரதத்தின் பண்பாட்டு மரம் பூத்துக் குலுங்குகிறது. அந்த வேர்களை யாரும் வெட்டி விடாதீர்கள். மறைந்த காஞ்சி மகாப் பெரியவர் சொல்கிறார்.. 'தாயன்பு போன்ற கலப்படமற்ற அன்பு இந்த உலகில் வேறு எதுவுமில்லை. பிள்ளை தன்னுடைய அன்பைப் பிரதிபலிக்காவிடினும், தாய் அதைப் பொருட்படுத்த மாட்டாள். பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லு ! துஷ்டப் பிள்ளை உண்டு. துஷ்ட அம்மா கிடையவே கிடையாது. பரிபூரணமான அன்பையும், தன்னலமற்ற உழைப்பையும் அம்மா ஒருத்தியிடம் மட்டுமே பார்க்க முடியும்".

'அம்மா என்று அழைக்காத உயிர் இல்லையே
அம்மாவை வணங்காமல் உயர்வில்லையே'

என்னும் கவிஞர் வாலியின் வைர வரிகள் எப்போதும் வேத மந்திரமாக நம் இதயங்களில் ஒலித்துக் கொண்டே இருக்கட்டும் !

23.12.2006 தினமணி நாளேட்டில் 'கருவில் கருகும் மொட்டுகள்' எனும் தலையங்கமும், 'மனசுக்கு ஒரு மின் அதிர்வு' எனும் தலைப்பில் சிந்தனையாளர் திருமதி. ஆண்டாள் பிரியதர்சினி அவர்கள் தீட்டியுள்ள கட்டுரையும் நம் நெஞ்சங்களை ஆழமாகத் தொடுகின்றன.

# பெண் சிசுக் கொலை

கருவிலேயே பெண் குழந்தைகளை அழிக்கும் போக்கு அதிகரித்து வருகிறது. அதுவும் குறிப்பாக ஹரியானா, பஞ்சாப், தில்லி, இமாசலம் ஆகிய மாநிலங்களில் இது அதிகமாகக் காணப்படுகிறது என்று அண்மையில் நாடாளுமன்றத்தில் சுகாதார அமைச்சர் அன்புமணி தெரிவித்துள்ளார். அதாவது 1901 இல் ஆண், பெண் பிறப்பு விகிதம் 1000 ஆண்களுக்கு 972 பெண்கள் என்ற நிலையில் இருந்தது. 1991 இல் பெண்கள் பிறப்பு விகிதம் 1000க்கு 927 என்று குறைந்தது. இது 2001 இல் 1000க்கு 933 ஆக அதிகரித்துள்ளது.

பெண் குழந்தை என்றால் சுமை என்ற எண்ணம் பண்டைய காலந்தொட்டே வழக்கத்தில் இருந்து வருகிறது. ஏழ்மையில் உள்ளவர்கள் அறியாமை காரணமாக இந்த எண்ணத்தில் உள்ளார்கள் என்றால், ஓரளவு கல்வி அறிவு பெற்ற நடுத்தர வர்க்கத்தினரிடையே யும் இது பரவலாகக் காணப்படுகிறது.

நோபல் பரிசு பெற்ற அமார்த்திய சென்னும் அண்மையில் நிகழ்ச்சி ஒன்றில் கலந்து கொண்டபோது இந்த ஏற்றத்தாழ்வு நிலையைச் சுட்டிக்காட்டியுள்ளார். சமூக, பொருளாதார நிலையில் இந்தியா முன்னேறி வந்தாலும் குழந்தை நலம், ஊட்டச் சத்து உணவு அளிப்பதில் நாடு பின்தங்கிய நிலையிலேயே இருக்கிறது என்றும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

பொருளாதார, சமூக நிலையில் கணிசமான மாற்றங்கள் ஏற்பட்டு வரும் சூழ்நிலையிலும், ஆண்களுக்கு இணையாக அனைத்துத் துறைகளிலும் பெண்களுக்கு வாய்ப்புகள் பெருகி வந்தாலும் ஆண் குழந்தைகள் மீதே அதிகக் கவனம் செலுத்தும் போக்கு தொடர்கிறது. பெண்கள் சொந்தக்காலில் நின்று வருவாய் ஈட்டினாலும் வரதட்சிணை உள்ளிட்ட பிரச்சினைகளால் அவர்கள் திருமண வாழ்வில் பல்வேறு சவால்களை எதிர்கொள்ள வேண்டி யுள்ளது. இந்த நிலை ஆண்களுக்கு ஏற்படுவதில்லை.

மேலும், குடும்பத்தில் ஆண்களைவிடப் பெண்களுக்கே பொறுப்பு அதிகம் உள்ளது. இதனால் அவர்கள் அதிக மன

உளைச்சலுக்கு ஆளாக நேரிடுகிறது. நிலைமை இப்படி இருந்தாலும் ஏதாவது ஒரு வகையில் ஆண்களின் ஆதிக்கம் தொடர்கிறது. இவை பெண் குழந்தைகளைத் தவிர்க்கும் எண்ணம் ஏற்படுவதற்கான காரணங்கள் என்று ஆய்வுகளிலிருந்து தெரிய வருகிறது.

இத்தகைய போக்கைத் தடுக்க, பெண் சிசுக் கொலைகள் அதிகம் உள்ள மாநிலங்களில் எம்.பிக்களுக்குச் சிறப்பு நிதியாக ரூ.5 லட்சம் ஒதுக்கி, குழந்தைகளிடையே பாரபட்சம் காட்ட வேண்டாமென மக்களிடையே விழிப்புணர்வு ஏற்படுத்தத் திட்டமிடப்பட்டுள்ள தாகவும், பெண் குழந்தைகளின் முக்கியத்துவத்தை வலியுறுத்த மதத் தலைவர்களின் உதவியை நாடப்போவதாகவும் அமைச்சர் அன்புமணி கூறியுள்ளார்.

இந்த நிலையில் அடுத்த ஐந்தாண்டுத் திட்டத்தில் சமூக நலத்துறைக்குக் கூடுதல் நிதி ஒதுக்கி, குழந்தைகள் நலத் திட்டங்கள் மீது அதிகக் கவனம் செலுத்தப்படும் என்று திட்டக் கமிஷன் துணைத் தலைவர் மான்டேக் சிங் அலுவாலியா தெரிவித்துள்ளது சற்று ஆறுதல் அளிப்பதாக உள்ளது.

கர்ப்பக் காலத்தில் தாய், சேயின் ஆரோக்கியத்தை உறுதி செய்து கொள்வதற்காகக் கண்டுபிடிக்கப்பட்ட நவீன சாதனங்கள், பிறக்கப் போகும் குழந்தை ஆணா, பெண்ணா என்பதைக் கண்டறிந்து பெண் குழந்தையை அழிக்கப் பயன்படுத்தப்படுவது கவலை அளிப்பதாக உள்ளது. இதனை உணர்ந்த அரசு இதற்கான சோதனையைச் செய்தால் அதனைத் தண்டனைக்குரிய குற்றமாக்கும் சட்டத்தை இயற்றியுள்ளது. இதன் தொடர்ச்சியாக, மருத்துவ மனைகளிலும், சோதனைக்கூடங்களிலும் பொது மக்களுக்கு இதைப் பற்றிய அறிவிப்பு வைக்கப்பட்டுள்ளது.

எனவே இத்தகைய சோதனைகளுக்குக் கடும் கட்டுப்பாடு விதிக்க வேண்டியது மத்திய, மாநில அரசுகளின் கடமையாகும். பெண் குழந்தைகள் தொடர்பாகப் போதிய விழிப்புணர்வு ஏற்படுத்த கிராம சுய உதவிக் குழுக்களையும் பயன்படுத்திக் கொள்ளலாம். ஒவ்வோர் ஆணின் வெற்றியின் பின்னணியில் ஒரு பெண் இருக்கிறாள் என்பது பல்வேறு நிகழ்வுகளில் நிரூபிக்கப்பட்டுள்ளது. ஆண், பெண் விகிதம் சமமாக இருந்தால்தான் நாட்டின் வளர்ச்சி நிலையும் சீராக இருக்கும் என்பதை அனைவரும் உணர்ந்து செயல்பட வேண்டும்.

# மனம் படும்பாடு

மனக்கொடுமைக்குச் சட்டம் இயற்றித் தண்டிக்கும் அளவுக்கு - காலம்காலமாகத் தொடர்கின்றன பெண் கொடுமைகளும், இல்லறத் துன்புறுத்தல்களும், தாம்பத்யக் குரூரங்களும் குறிப்பாக இந்திய ஆண்குலம் அவமானத்தில் தலைகுனிய வேண்டியது காலத்தின் கட்டாயம்.

குடும்ப வன்முறை தடுப்புச் சட்டம் சரியான முறையில் நடைமுறைப்படுத்தப்பட்டால், நம் தேசத்தின் தொண்ணூறு சதவீத ஆண்கள் சிறைக் கம்பிகளுக்குப் பின்தான் காலம் கழிக்க வேண்டி யிருக்கும். இல்லறத் துணையைத் துன்புறுத்தும் ஆண்களின் ராஜாங்கம் இந்த மண்ணில் மிக அதிகம். குடும்பப் பெருமை, பாரம்பரியம் கருதி வாய்மூடி மௌனிகளாகவே இருந்து வருகிறார்கள்.

பெற்ற தாயிடம் கூடச் சொல்லக் கூடாது, உற்ற சகோதரி யிடமும் சொல்லக் கூடாது, சட்ட உதவியை நாடக் கூடாது என்ப தெல்லாம் எழுதப்படாத இல்லற எதிர்பார்ப்புகள். இப்படியாக உயிருடன் சமாதியாக்கப்பட்ட தாம்பத்யங்கள், பெண் கவலைகள் கோடி கோடி. நல்ல தோழன், நண்பன் என்பவர்களே திருமணத்துக்குப் பின் முற்ற முழுக்கக் கலப்படமற்ற 'கணவன்' என மனமாற்றம் ஆகிவிடுகையில், வெறும் கணவனாகவே பெண்ணை ஆக்கிரமிக்கும் ஆண்களைப் பற்றி என்ன சொல்வது? விதிவிலக்குகளுக்கு மனமார்ந்த வாழ்த்துகள்.

ஒவ்வோர் இல்லறத்திலும் நாளும் பொழுதும் வார்த்தைக் கொலைகள் அரங்கேறித்தான் வருகின்றன. அவை எல்லாமே அரூபமானவை. அப்படியான வார்த்தைக் கொலைக்குத் துப்பாக்கி கிடையாது. வீச்சரிவாள் கிடையாது. கத்தி கிடையாது. விஷக் கோப்பை கிடையாது. மனக் கொலையான பெண் கொட்டும் குருதி அருவிக்கும் உருவம் கிடையாது. ஆறவே ஆறாத அவளின் மனப் புண்ணுக்கு அடையாளம் கிடையாது.

ஆணின் மனோரீதியான வன்முறை தாளமுடியாமல், பொறுமையே வடிவான, அன்பே உருவான பத்தினி செய்யும் கொலைக்கு நீதிமன்றத் தண்டனை ஆயின் அதுநாள் வரை அவன் செய்த வார்த்தை அரூபக் கொலைக்கு ஏது தண்டனை?

இந்திய இல்லற அமைப்பு வட்டத்தில், ஆண் கை ஓங்குவதும், வார்த்தையால் துன்புறுத்தல் செய்வதும் அங்கீகரிக்கப்பட்டவை. மனைவிகள் அதைப் பொறுத்துக் கொள்ளவே அவதரித்தவர்கள் என்பதாகவும் அங்கீகரிக்கப்பட்டவர்கள்.

கொலையும் செய்வாள் பத்தினி என்கிற நரக வெறிக்கு அவளைச் சிறுகச் சிறுகத் தள்ளிவிடும் ஆணின் கொடுமைகளை இயற்கை நீதிதான் சீர் செய்ய முடியும்.

பெண்ணை, அவளின் ஆளுமையை, புன்னகையை, அறிவாற்றலை, மனத்திட்பத்தை, கற்பு நுட்பத்தைக் கேள்விக் குள்ளாக்கி, கேலிக்குள்ளாக்கி, சேற்றுப்புதையலில் தள்ளுகின்றன. ஆண் வார்த்தையால் நோகச் செய்து கழுவிலேற்றுவதற்கும், பெண் பொறுமையாக அதைத் தாங்குவதற்கும் படைக்கப்பட்ட விஷ நம்பிக்கை காலம்காலமாக வேரூன்றி இருக்கிறது. இனிமேலாவது அதை மாற்றும் நீண்ட நெடும் பயணத்தின் முதல் காலடி இப்போது எடுத்து வைக்கப்படுகிறது. அனைத்துப் பெண்களுக்குமான பாதுகாப்பு வலை இது. ஆண் எல்லை தாண்டாமல் காக்கும் சட்ட வேலி.

இந்தப் பயணமும், பயணத்தின் நோக்கமும் சரியாக நிறை வேறினால், நம் மகள், நம் பேத்தி, நம்கொள்ளுப்பேத்தி சகலரும், திருமணத்துக்குப் பின் - வாழ்க்கைத் துணையுடன் மற்றொரு துணையாகக் கண்ணீரையும் வலியையும் பொறுத்துக் கொள்ள வேண்டியதில்லை. வார்த்தைகள் சுமக்கும் சுண்ணாம்புக் காளவாய்களில் தினமும் மூழ்க வேண்டியதில்லை. அரூப அக்கினிக் குண்டங்களில் மூழ்கித் தீக்குளிக்க வேண்டியதில்லை.

அடித்தாலும், உதைத்தாலும், வார்த்தையால் சிதைத்தாலும், கற்பிழந்தவள் எனக் கதைத்தாலும், சகல ஆலகால விஷத்தையும் ஜீரணித்து, உயிரற்ற பிணமாகக் காலம் தள்ளும் சகோதரிகளுக்கு நிச்சயம் விடிவுகாலம். அரூபமான வார்த்தைக் கொலைகளுக்கும் இனித் தண்டனை உண்டு என்கிற பாதுகாப்பு வளையம் பெண்ணின் உயிர்வேலி.

ரோஜாப்பூ மாலையில் தொடங்கும் மணவாழ்வைக் கற்றாழை முள் மாலையாக மாற்றுகிறார்கள் ஆண்கள். பன்னீர்த் தெளிப்பில் தொடங்கும் இல்லறத்தைக் கண்ணீர்த் துளிகளில் மூழ்கடிக்கிறார்கள். ஹோம நெருப்பின் சாட்சியில் தொடங்கும் தாம்பத்யத்தை அக்னி வார்த்தை சாட்சியாக்குகிறார்கள். சந்தோஷக்களம் போர்க்களமாகிறது. மிக நீண்ட குருக்ஷேத்ரம்.

உறவுகளுக்குள்ளேயே ஓயாத போராட்டம். பிரச்சினை உண்டாக்கும் ஆணுக்கு அறிவுரை சொல்லாமல், பெற்றோரோ, உற்றோரோ, உடன் பிறந்தோரோ கூட ஆலோசனை சொல்லாமல் 'இது உங்கள் குடும்ப விவகாரம்' 'ஆண் இப்படித்தான் இருப்பான். பொறுத்துக் கொள்க...' இப்படியாக வழுக்கல் காரணங்களை உதிர்ப்பது இனி ச் செல்லாக் காசாகிவிடும்.

பெண்ணை இல்லறத் துணையாகக் கருதாமல், இல்லற அடிமையாகக் கருதுபவருக்கெல்லாம் ஒரு சாட்டையடி. அவளை உயிரும், உணர்ச்சியும்மிக்க தோழியாகக் கருதாமல் உயிரற்ற ஜடமாகக் கருதுபவருக்கெல்லாம் ஒரு கசையடி.

பெண்ணை அடக்கி ஆள வசதியாகவே அவளைச் சமூக, சமுதாயப் பண்பாட்டுக் காவலாளியாக்கி, பாரம்பரிய வேலி என்னும் சிறைவாசியாக்கி வேடிக்கை பார்த்த ஆண் மனசுக்கு ஒரு மின் அதிர்வு கொடுக்கப்பட்டிருக்கிறது.

எல்லாப் பெண்களும் இல்லறக் கொடுமைக்கு ஆளாகின்றனர். குடிசைப் பெண், நடுத்தர வர்க்கத்துப் பெண், செல்வச் சீமாட்டி எல்லோரும் சந்திக்கும் ஒரே ஒற்றைப்புள்ளி திருமணத் துன்புறுத்தல் என்பதே.

அவரவர் வாழ்வியல் சூழலுக்கும், கல்விக்கும், அறிவாற்றலுக் கும், குடும்பப் பின்னணிக்கும், உடல் உழைப்புக்கும், மனோ திடத்துக்கும் ஏற்ற வகையில், சந்திக்கும் பிரச்சினையின் வீரியம் உருமாறுகிறதே தவிரப் பெண் பிரச்சினைகள் உலகளாவிய அளவிலும்கூட ஒருமித்தவைதான்.

பெண் கண்ணீருக்கான ஊற்றுக் கண் ஒன்றேதான். பெண் உளைச்சலுக்கான பொங்குமாக்கடல் அதேதான். இயற்கை அமைப்பில் அத்தியாவசியமான இல்லறம் - ஆணுக்கு ரோஜா பாதையாகவும் பெண்ணுக்கு முள்பாதையாகவும் இருப்பதே பெரும்பாலும் நிதர்சனம். முள் களையப்படுவதற்கான சட்டக் கொழுகொம்பு இப்போது கிடைத்திருக்கிறது. களைகள் - காலப் போக்கில் களையப்படும். களைகள் முளைக்காமலிருக்கும் பாதுகாப்பு உணர்வு - இனி மேம்படும்.

இல்லறம் என்பதும், உறவுகள் என்பதும் வழுக்கு நிலமாக, சாக்கடையாக, பாலைவனமாக இனியும் இருக்க முடியாது என்பதே நிதர்சனம்.

பெண்ணை நோக்கிக் காலம்காலமாக நீண்ட ஆணின் சுட்டுவிரல் இனி யோசித்தே நீளும். தன்னை நோக்கி நீளும் அவனின் மூன்று விரலுக்கும் பதில் சொல்லும் கடப்பாடு அவனுக்கு இனி எழும்.

அவளின் சுவாசம் இனியும் நீளமான பெருமூச்சாக இருக்காது. அவளின் பகலும் இரவும் - இனியும் கல்யாணக் கல்லறையில் குடியிருக்காது. அவளின் புன்னகை புழு அரித்ததாக இருக்காது. அவளின் நடை - முறிக்கப்பட்டதாக இருக்காது.

நம் ஊரில் வார்த்தைக் கொலைகள் செய்வோருக்குச் சிம்மாசனமும், வழிபாடும் கிடைக்கும். அத்தனை வலியையும் பொறுத்த பெண்ணுக்கு இப்போதுதான் மெல்லிய வெளிச்சக்கீற்று தெரிகிறது. அவதாரங்களே சறுக்கும்போது, சராசரிகளுக்கும், அதற்கும் கீழானவர்களுக்கும் உன்னத சிந்தனை என்கிற உச்சம் பல நூற்றாண்டுகளாகப் பொய்த்திருக்கிறது. இனித் துளிர்க்கும். சட்டப்படி துளிர்க்க வைக்கலாம்.

கடையனுக்கும் கடைத்தேற்றம் என்பது போல், கணவனுக்கும் கடைத்தேற்றம் தர விரும்பும் பெண்ணுக்குக் கடவுள்தான் கண்திறக்க வேண்டும். கிராமப்புற, நகர்ப்புற, படிக்காத, படித்த பெண்கள் அனைவரும் குடும்ப வன்முறை தடுப்புச் சட்டம் குறித்துத் தெளிவு பெற்றால் நலம். என்ன - இப்போதிருக்கும் சிறைக் கூடங்களின் எண்ணிக்கையை அதிகரிக்க வேண்டியிருக்கும்.

# கள ஆய்வு

அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகக் கல்வியியல் துறை சார்பில் சென்னையில் கல்விவழி மகளிரின் தன்னுரிமை பற்றிய கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் பங்கேற்ற பேராசிரியர் முனைவர் தாயம்மாள் அறவாணன் மதுரை நகரில் மேலப் பொன்னகரம் பகுதியில் வேலைக்குச் செல்லும் பெண்களின் ஒரு நாள் (24 மணி நேரம்) வாழ்க்கை முறையைக் கள ஆய்வு செய்து கிடைத்த முடிவுகளை ஆராய்ந்து வழங்கினார். அவற்றில் களப்பணி அறிவுறுத்தும் முடிவுகள் நம் கவனத்துக்குரியவை. இன்றியமையாத கருத்துகள்:

பெண்கள் கடுமையாக உழைக்கின்றனர்

| | | | | |
|---|---|---|---|---|
| காலை | : | வீட்டில் 5-9 | = | 4 மணி நேரம் |
| பகல் | : | அலுவலகத்தில் 10-5¾ | = | 7¾ மணி நேரம் |
| இரவு | : | வீட்டில் 8-11 | = | 3 மணி நேரம் |
| மொத்தம் | : | | | 14¾ மணி நேரம் |

ஆக 14¾ மணி நேரம் உழைக்கின்றனர். ஆண்கள் அலுவலகத்திலிருந்து வீடு வந்ததும் ஓய்வு எடுக்கின்றனர்.

1. மணம் முடித்தவர் கூடுதலாக 84% வேலைக்குச் செல்வது பெண் வீட்டில் அடைபட்ட நிலையில் இருந்து விடுதலை பெற்றிருப்பதைக் காட்டுகிறது; என்றாலும் குடும்பப் பொருளாதாரத் தேவையே இவர்களை வேலைக்குத் துரத்துகிறது. வீட்டு வேலை மட்டும் செய்து கொண்டிருந்த பெண் வேலைக்காக அலுவலகம் செல்வது கூடுதல் சுமையைப் பெண்ணின் மேல் ஏற்றியிருக்கிறது. அலுவலகத்துக்குப் புறப்படும் முன் ஆடவரைப் போல் பெண் ஓய்வாக இருப்பதில்லை; அயல்நாடுகளைப் போல் ஓட்டல் உணவுக்கும் பழகவில்லை. எனவே சமையல் வேலை நெருக்குகிறது. 70% பெண்டிர் சமையல் வேலையைச் செய்ய வேண்டி உள்ளது. தனக்கு மட்டுமின்றிக்

கணவன், குழந்தைகள், சார்ந்திருப்போருக்கும் காலைச் சமையலைச் செய்து தருவதுடன் மதிய உணவையும் சேர்த்துச் செய்து தரவேண்டி உள்ளது. தொடர்ந்து பயண நேரம், அலுவலக உழைப்பு நேரம் ஆகியன சேர்ந்துள்ளன. மாலை வீடு திரும்பிய பின்னரும் சமையல் வேலையை அவளே செய்கிறாள். வீட்டில் கடைசியில் படுக்கச் செல்பவளும் முன்னதாக எழுபவளும் பெண்ணாகவே இருக்கிறாள்.

2. கல்வி

படித்த பெண்களே வேலைக்குச் செல்லுகின்றனர். 28% முதுநிலைக் கல்வி பெற்றவராக இருப்பது நல்ல அறிகுறி; ஆனால் இவர்கள் தம் பொது அறிவை வளர்த்துக் கொள்ள வாய்ப்பு மிகக் குறைவாகவே இருக்கிறது.

| | |
|---|---|
| ஆங்கில நாளேட்டைப் பார்ப்போர் | 4% |
| தினமலர் நாளேட்டைப் பார்ப்போர் | 6% |
| தினத்தந்தி நாளேட்டைப் பார்ப்போர் | 2% |

ஆக 12% பெண்களே நாளேடுகளை ஓரளவு பார்க்கின்றனர் என்று தெரிகிறது. ஆக நாளேடு படிக்காதோர் எண்ணிக்கை 88%.

புத்தகம் வாசிப்போர் 2% மட்டுமே. அந்த வாசிப்பும் ஆன்மீகம் சார்ந்ததே. எனவே கல்வியால் மேலும் வளர்தல் அலுவலகத்திற்குச் செல்லுவோரிடம் அருகியே உள்ளது.

5. செய்யும் வேலை

ஆசிரியத் தொழிலில் பெண்கள் மிகுதியாக உள்ளனர். இது நல்ல அறிகுறி. ஏனைய வேலைகளை விட ஆசிரியத் தொழிலில் இவர்களுக்குக் கோடை விடுமுறையும் கிறிஸ்துமஸ் விடுமுறையும் கிடைக்கின்றன. பள்ளியில் பயிலும் குழந்தைகளுக்கு ஆடவரைவிடப் பெண்டிரே பொறுமை காட்டும் விரும்பத் தகுவோராக உள்ளனர். என்றாலும் பல்வேறு தொழில்நுட்பத் திறனில் பெண்டிர் பங்களிப்பு குறைவாக இருப்பதையே இது உணர்த்துகிறது.

6. உரையாடும் பொதுப் பொருள்

பெண்டிர் தமக்குள் பேசிக்கொள்ளும் பொதுப் பொருள்களில் தொலைக்காட்சி முதலிடம் வகிக்கிறது. குடும்பம் அடுத்த இடத்தையும், உடை, பொன் அதற்கு அடுத்த இடத்தையும் மூன்றாம் நபரைப் பற்றிய பேச்சு அதற்கடுத்த நிலையையும் பெற்றுள்ளன. இது வருந்தத் தகும் ஒரு குறிப்பே ஆகும். இதில் மாற்றம் வரவேண்டும்; வரிசை முறை மாற வேண்டும். அதற்காக நாம் என்ன செய்வது என்பது பற்றிச் சிந்தித்தல் வேண்டும்.

7. உதவி செய்பவர்

இப்பட்டியலில் கணவர் முன்னிலை வகிக்கிறார். இது நல்ல அறிகுறி. ஆனால் விழுக்காடு 34% மட்டும் தான். இது நூற்றுக்கு நூறாக மாறக் குடும்ப அமைப்பையும் சமுதாய அமைப்பையும் நாம் மெல்ல மெல்ல மாறுதல் செய்ய வேண்டும். குழந்தைகளின் பங்களிப்பு 24%. இது நல்ல அறிகுறி அன்று. குழந்தைகளுக்குப் பொறுப்புணர்ச்சியும் அம்மாவுடன் சமையல் முதலானவற்றைக் கற்றுக் கொள்ளும் திறனும் வரும் தலைமுறை வளர்ச்சிக்கும் போதுமானது அன்று. குழந்தைகளின் பங்களிப்பு குறையுமானால் பெற்றோரிடத்தில் இருந்தும், குடும்பத்தில் இருந்தும் அந்நியப்படும் அபாயம் இருக்கிறது.

8. பெண்கள் நலமுடன் இருக்கிறார்களா?

பெண்கள் வீட்டிலும் வெளியிலும் இரட்டை வேலை செய்யும் பொழுது அவர்கள் நலம் பற்றிய சிந்தனை நமக்கு ஏற்படுகிறது. ஓய்வே இல்லாமல் உழைப்பதால் நலம் கெடுகிறது என்றே பேட்டியில் அவர்களே கூறுகின்றனர்.

ஆகவே தன்னுரிமை பெற்ற பெண்ணின் வாழ்வில் ஒருநாள் அவளின் தனி உரிமை காலை முதல் இரவு வரை அதாவது விழிப்பு முதல் உறக்கம் வரை அவள் நிலை என்ன என்பதைப் பொறுத்து அவளைப்போன்ற பெண்களுக்கு இந்த நாடு என்ன சொல்கிறது பதில்.

பெண்களுக்குச் சமையல் வேலையிலிருந்தும் பிற வேலைகளிலிருந்தும் விடுமுறை கிடைக்க வாரத்தில் ஒரு நாள்

ஆண்கள் மட்டுமே எல்லா வேலையையும் செய்ய வேண்டும் எனச் சட்டம் இயற்றப்பட நாடாளுமன்றத்தில் விவாதிக்கப்படடது. அது எவ்வாறு நடைமுறைப் படுத்தப்பட்டுள்ளது என்பது கேள்விக்குறி.

எழு மங்கையே எழு!
எழு மங்கையே மேலே
எழில் மின்னல் விளையாடும்
மழை மேகம் போலே
தொழுவத்தில் அடைபட்டுக்
குனிவுற்ற உள்ளம்
தோளேந்தி நடை கற்க
அறிவென்னும் வெள்ளம்
இது பெரியாரின் கொடையன்றோ !

# பணியாற்றுமிடங்களில் பாலின வன்கொடுமைகள்

இன்றைய நிலையில் பெண்கள் வேலைக்குச் செல்வதால் முதலாவதாக அவர்களின் தன் மதிப்பு உயருகிறது. சொந்தக் காலில் நிற்கிறோம் என்ற பெருமித உணர்வு அவர்களுக்கு ஏற்படுகிறது.

இரண்டாவதாக வருவாய் ஈட்டத்தினால் குடும்ப நிலை உயருகிறது.

மூன்றாவதாக, தாங்கள் கற்ற கல்வி, பெற்ற திறன் சமுதாயத்திற்குத் திரும்பத் தரப்படுகிறது. இதனால் அடுத்தடுத்த தலைமுறைகள் முன்னேற வழி பிறக்கிறது.

குடும்பப் பொறுப்பினை மிகுதியும் தாங்குபவர்கள் பெண்கள் என்பதால் அவர்கள் வேலைக்குச் செல்வது தவிர்க்க இயலாததாகி விட்டது.

இந்நிலையில் ஆண்கள் மேலீடு உள்ள இச்சமுதாயத்தில் ஆண்களுடன் இணைந்து பணியாற்ற வேண்டிய நிலை உள்ளது. ஆகையால் பணிபுரியும் இடங்களில் பெண்களில் பாலியல் வன்முறைக்கு ஆளாவது, செய்தித்தாள்களில் அடிபடும் அன்றாட நிகழ்வாகிவிட்டது. ஊடகங்களின் வலைக்குள் அகப்படாத எத்தனையோ பணியிடங்களில் ஆண்களின் கிண்டலுக்கும், கேலிக்கும், பாலியல் நெருக்கடிகளுக்கும் உள்ளாக வேண்டிய கட்டாயத்தில் பெண்கள் உள்ளனர்.

தேசியப் பெண்கள் ஆணையம் அமைத்து 2002 ஆம் ஆண்டுடன் 10 ஆண்டுகள் முடிவடைந்ததை ஒட்டி வெளியிடப்பட்ட Year of Endeavour 2002 எனும் நூலில் கூறப்பட்டுள்ள கருத்துகள் இங்குக் குறிப்பிடத்தக்கவையாகும்.

பணியாற்றுமிடங்களில் பெண்களுக்கு இழைக்கப்படும் பாலின வன்கொடுமைகள் என்பன மனித உரிமைகள் மீறல் மட்டுமல்லாமல் 'சமவாய்ப்பு' எனும் கொள்கைக்கு மறைமுகமாக ஊறுவிளைவிப்பனவுமாகும். காலப்போக்கில் பெண்ணானவள் தனது

தாழ்நிலையை இயற்கையானதுதான் என ஏற்றுக்கொள்ளும்படி அவளுக்கு அழுத்தமாகக் கற்பிக்கப்பட்டு, அவளுடைய சிந்தனையும் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. பெண்கள் மிகவும் கீழ்ப்படியும் குணமுடையவர்களாகவும் ஆண்கள் ஆதிக்கக் குணமுடையவர் களாகவும் திகழ்கின்றனர். ஆண்கள் பெண்கள் சமனற்ற நிலை என்பது ஏறக்குறைய எல்லாச் சமூகங்களிலும் இருக்கின்றது. எனினும் சமனற்ற அதிகார உறவுகளின் வெளிப்பாடுதான் இந்தப் பாலினக் கொடுமை யாகும். பெண்களை விட ஆண்கள் அதிக ஊதியம் ஈட்டுகின்ற உயர் பதவிகளில் இருக்கின்றனர். பெண்கள் கையில் அதிகாரம் இல்லாமை யாலும், பாதுகாப்பற்ற நிலையாலும், அமைதியாகவே இருந்து துன்பங்களைத் தாங்கிப் பழகியதாலும் அவர்கள் பாலின வன்கொடுமைக்கு ஆளாகின்றனர். ஆண்கள் பெண்கள் ஆகியோரின் பங்களிப்புப் பற்றிப் பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட நம்பிக்கைகள் உள்ளன. சில பண்பாடு சார்ந்த கருத்துகள் பாலினக் கொடுமைகளை நியாயப்படுத்துவனவாக அல்லது அவற்றை மறுப்பனவாக உள்ளன. சமூக, பொருளாதார, அரசியல் சூழ்நிலைகள் மாறுவதற்கேற்ப ஆண், பெண் சமூகப் பங்களிப்பும் மாறுகின்றது. பாலின உறவுகள் பற்றிப் பொதுவாக நீண்டகாலமாக இருந்து வரும் நம்பிக்கைகள் பெண்களின் மீதான பாலின வன்கொடுமைகளின் அடிப்படைக் காரணத்தைத் திரையிட்டு மூடி மறைக்கின்றன. இப்பிரச்சினை பற்றிய விவாதத்தைக் கடினமாக்குகின்றன. அவை பின்வருமாறு :

## 'பெண்களே தூண்டுகிறார்கள்' எனக் கூறும் ஆணாதிக்க மனப்பான்மை

ஒரு பெண்ணின் தோற்றமும் அவள் அணியும் உடையும் பாலின வன்கொடுமைக்குக் காரணங்களாக அமைகின்றன எனக் கூறப்படுகின்றது. எனினும் தங்களுடைய சமுதாய மரபுப்படி உடையணிந்து வரும் பெண்களும் குறி வைக்கப்படுகிறார்கள் என்பதற்கு விளக்கம் கிடைக்கவில்லை. ஆண்களில் ஒரு சிலர் மட்டுமே ஏன் இவ்வாறு பாலியல் கொடுமையில் ஈடுபடுகின்றனர் என்பதும், மற்றவர்கள் ஏன் அவ்வாறு ஈடுபடுவதில்லை என்பதும் புரியவில்லை. குடும்பத்திலிருந்து, உடன் பணியாற்றுவோரிட மிருந்து, சமவயதினரிடமிருந்து ஆதரவில்லாமை ஒரு பெண் இதற்குத் தீர்வு காண்பதற்குத் தடையாகவுள்ளது. வயிற்றுப் பிழைப்புக்காக வீட்டை விட்டு வெளியே சென்று ஊதியம் ஈட்டக் கூடிய பெண்கள் பாலினக் கொடுமை என்கிற விலையைக் கொடுத்தே தீர வேண்டி யுள்ளது. பெரும்பாலான பெண்கள் தமக்கு இழைக்கப்படும் பாலினக் கொடுமைகள் பற்றி வெளியில் சொல்வது கிடையாது. ஏனெனில்

பாலின வன்கொடுமைகளை இந்தச் சமுதாயம் எவ்வாறு நோக்குகிறது; அற்பத்தனமாக்கியுள்ளது என்பதை அவர்கள் உணர்ந்தே இருக்கின்றனர். கோணல்புத்தி படைத்த ஆண்களின் நடத்தையைப் புறக்கணித்தால், அலட்சியப்படுத்தினால் பெண்கள் பல சிக்கல்களைத் தவிர்க்கலாம் என அவர்களை நம்பச் செய்துள்ளனர் அல்லது அவர்கள் நம்புகின்றனர்.

"பாலின வன்கொடுமை என்பது பணியில் ஈடுபட்டுள்ள ஆண்கள் அல்லது பெண்களின் கண்ணியத்தைக் குலைக்கும் வகையில் உடல்ரீதியாக, வாய்ச்சொல்லால் அல்லது வாய்மொழி யல்லாத பிறவழியில் விரும்பத்தகாத உடலுறவு நடத்தையே ஆகும்" என அய்ரோப்பியக் குழு (1990) தீர்மானம் கூறுகின்றது.

**பாலினக் கொடுமையின் விளைவுகளாவன :**

உடல் ரீதியான தொந்தரவுகள்

உணர்வுப்பூர்வமான தொல்லைகள்

தற்கொலைகள்

உடலுறவுத் தாக்குதலால் விளையும் ஆபத்தான நிலை

திட்டமிடா கருவுறுதல்

பால்வினை நோய்கள்

ஹெச்.ஐ.வி. நோய் பரவல்

**பாலினக் கொடுமைகள் பற்றித் துன்புறும் பெண்கள் பெரும் பாலும் புகார் கொடுப்பதில்லை. அதற்கான காரணங்கள் :**

- பாலினக் கொடுமைபுரிந்தோர் மீது எடுக்கப்படும் நடவடிக்கை யால் மேலும் தமக்கோ, தம் குடும்பத்துக்கோ பாலினக் கொடுமைகள் அல்லது வன்முறைகள் நிகழலாம் என்கிற அச்சம்.
- பாலினக் கொடுமைக்கு ஆளான பெண் தனது வேலையை அல்லது வேலை தொடர்பான பயிற்சியை இழக்கலாம்.
- பாலினக் கொடுமை பற்றிய வழக்குகள் நீண்டகாலம் இழுத்தடிக்கப்படுவதால் ஏற்படும் பொருளாதாரச் செலவுகளும் மன உளைச்சல்களும்.
- பாலினக் கொடுமை செய்யும் ஆண்களுக்கு எதிராகப் பெண்களிடம் சக்தி / அதிகாரம் இன்மை.

- தனது சொந்த அல்லது பொருளாதார சுதந்திரம் பறி போய்விடுமோ என்கிற அச்சம்.
- பாலின வன்கொடுமை நிகழ்த்தப்பட்டால் அது பற்றி என்ன செய்ய வேண்டுமென்கிற அறிவின்மை, விழிப்புணர்வின்மை.

## பணியிடங்களில் பாலினக் கொடுமைகளை எதிர்த்துப் போரிடும் வழிமுறைகள் :

அ. பாலினக் கொடுமைகளுக்கு எதிராகக் கடுமையான சட்டங்கள்

ஆ. சமுதாயக் காவல்முறை

இ. பணியிடங்களில் முறைசாரா நிவாரண / குறைதீர் மன்றம்

ஈ. தொழிற்சங்க நடவடிக்கைகள்

உ. மகளிர் சங்கத்தின் மூலம் நடவடிக்கைகள்

ஊ. விழிப்புணர்வூட்டும் இயக்கங்கள்/ நடவடிக்கைகள்

## சட்டப் பாதுகாப்புகள்

இந்நிலைமை உணர்ந்து இதனை மாற்றுவதற்கு இந்திய உச்ச நீதிமன்றம் ஓர் ஆணை பிறப்பித்தது. அதன்படி எல்லா அரசு அலுவலகங்களிலும் பெண் கொடுமையைத் தடுப்பதற்கான கண்காணிப்புக் குழுக்கள் ஏற்படுத்தப்பட வேண்டும் என அரசு உத்தரவிட்டது. அதனைத் தொடர்ந்து இந்திய அரசும், மாநில அரசுகளும் இதற்கான ஆணைகளைப் பிறப்பித்துள்ளன.

இக்கண்காணிப்புக் குழுவின் தலைவராகப் பெண் அலுவலர் ஒருவர் இருக்க வேண்டும். இக்குழுவில் பெரும்பான்மை உறுப்பினர்கள் பெண்களாகவே இருக்க வேண்டும் என அவ்வாணையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

கேலிவதை, பாலியல் கொடுமைக்கு உள்ளாகும் பெண்கள் இக்குழுவிடம் தங்கள் புகார் மனுவை அளிக்கலாம். அதனைப் பெற்று, தவறிழைக்கும் ஆண் பணியாளர்களை இக்குழு விசாரித்து, உரிய நடவடிக்கை எடுப்பதற்கு வழிவகை செய்யவும், குற்றம் உறுதி செய்யப்பட்டால் உரிய விதிகளின் கீழ் ஒழுங்கு நடவடிக்கை மேற்கொள்ளப்படும். இக்கண்காணிப்புக் குழுக்கள் குற்றமனங் கொண்ட ஆண்களிடையே ஓர் அச்சவுணர்வை ஏற்படுத்தக் கூடியன என்று சொன்னாலும் பெரிய அளவில் உணரத்தக்க மாற்றங்கள்

இதனால் ஏற்பட்டுள்ளதா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

உயர் பதவி வகிக்கும் ஆண் அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்திப் பெண்களை அச்சுறுத்தித் தம் வயப்படுத்தும் நிலை இன்னும் முற்றாகக் களையப்படவில்லை என்றே சொல்ல வேண்டும்.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின் 15ஆம் பிரிவு ஒருவரின் பிறப்பிடம், பால் வேறுபாடு, சாதி, இனம், சமயம் ஆகியவை காரணமாக எந்த வேறுபாடும் குடிமக்களிடையே காட்டப்படக்கூடாது என வரையறுத்துள்ளது. எனினும் பெண்களுடைய தாழ்நிலையைக் கருத்தில் கொண்டு சட்டப் பிரிவு 15(3)இன் படி, பெண்களுடைய சமூக, பொருளாதார, அரசியல் நிலையைச் சமன்படுத்த வேண்டி அவர்களுக்குச் சாதகமான வகையில் அரசு சட்டமியற்றிக் கொள்ளவும் சிறப்பு அனுமதி வழங்கப்பட்டுள்ளது.

# வரதட்சணை தடைச்சட்டம்

திருமணத்தின் பொழுது வரதட்சணை கொடுப்பதையும் வாங்குவதையும் தடை செய்து 1961ஆம் ஆண்டு சட்டம் கொண்டு வரப்பட்டது. இதன்படி வரதட்சணை என்பது மணம் செய்து கொள்ளும் ஒரு பக்கத்தார் திருமணத்திற்காக நேரிடையாகவோ, மறை முகமாகவோ மணம் செய்து கொள்பவருக்கோ, அவர் வீட்டாருக்கோ சொத்தாகவோ வேறு மதிப்புள்ள பொருளாகவோ கொடுப்பது அல்லது கொடுக்கச் சம்மதிப்பது ஆகும். பின்பு 1984ஆம் ஆண்டு கொண்டு வந்த சட்டத்தில் 'திருமணத்திற்காக' என்ற சொற்றொடர் 'திருமணம் தொடர்பாக' என்று மாற்றப்பட்டது.

## கருக்கலைப்புச் சட்டம்

1971இல் கொண்டுவரப்பட்ட இச்சட்டம் 12 வாரத்திற்கு மேற்படாத கருவை அனுமதிக்கப்பட்ட மருத்துவர்கள் மூலம் கலைத்துக் கொள்ள வகை செய்கின்றது. கற்பழிப்பு மூலமோ, கருத்தடைச்சாதனங்களை உபயோகிப்பதில் ஏற்பட்ட தவறுகள் மூலமோ கருத்தரித்திருந்தால் அக்கருவைக் கலைக்க முடியும்.

## பெண்களுக்கிழைக்கப்படும் குற்றச் சட்டங்கள்

இவை தவிர, சில குற்றச்சட்டங்களின் சில பிரிவுகள் பெண்களுக்கிழைக்கப்படும் கொடுமைகளினின்றும் பாதுகாத்துக் கொள்ள உதவுகின்றன.

## பெண்களை இழிவுபடுத்துவதையும் பாலுறவுக்குப் பயன்படுத்து வதையும் தடைசெய்தல்

பெண்களைப் பொது இடங்களில் இழிவாக நடத்துவதும் இழிவான பாடல்களின் மூலமோ, வார்த்தைகளின் மூலமோ மனம் புண்பட வைப்பதும் தண்டனைக்குரிய குற்றங்களாகும். காமவெறி யூட்டும் புத்தகங்களையோ படங்களையோ விற்பதும், வெளியிடங் களில் காட்சிப் பொருட்களாக வைப்பதும் வாடகைக்கும், தனிச் சுற்றுக்கும் பயன்படுத்துவதும், அதை வைத்து வியாபாரமோ, விளம்பரமோ செய்வதும் தண்டனைக்குரிய குற்றங்களாகும்.

பெண்களை இழிவாகக் காட்சிப் பொருளாக்குவதைத் தடை செய்யும் சட்டம் 1986இல் கொண்டு வரப்பட்டது.

மேலும் பருவமடைந்த பெண்களை விலைக்கு வாங்குவது, அவர்களைப் பாலுறவுக்கு உட்படுத்தும் அபாயத்தை உண்டாக்குவது, வெளிநாடுகளிலிருந்து பெண்களை இறக்குமதி செய்வது, வயது முதிராத பெண்களை விலைக்கு வாங்குவது, வாடகைக்கு வாங்குவது, கைப்பற்றுவது, கற்பழிப்பது இவையும் குற்றங்களாகும். 1956ஆம் ஆண்டு பெண்களையும், பெண் குழந்தைகளையும் தீய வழியில் உபயோகிப்பதைக் குற்றமாக்கும் சட்டம் அமலுக்கு வந்தது. இது பெண்களை வியாபாரப் பொருளாகப் பயன்படுத்துவதையோ, அப்படிப் பயன்படுத்திப் பொருள் ஈட்டுவதையோ குற்றமாக்குகிறது. 1986இல் கொண்டு வந்த சட்டத்திருத்தத்தின்படி பிறரோடு பாலுறவில் ஈடுபட்ட ஆணும் பெண்ணும் தண்டனைக்கு உள்ளாவர். இத்திருத்தம் பிறரோடு பாலுறவு கொண்டவர்களை மட்டுமின்றிப் பாலுறவுக்காக ஒருவரை உபயோகப்படுத்துவதையும் குற்றமாக்கு கின்றது.

ஒருவரைப் பயமுறுத்துவதற்காகப் பத்திரிகைகளில் அவரைப் பற்றிய செய்திகளோ, படங்களோ வெளியிடுவதும் குற்றம். ஒரு பெண்ணின் விருப்பத்திற்கெதிராகவோ, அவள் சம்மதமின்றியோ ஒரு ஆண் கொள்ளும் பாலுறவு பாலின வன்முறை எனக் கருதப்படும். இதுவும் தண்டனைக்குரிய குற்றமாகும்.

## இருதார மணம்

ஒரு பெண்ணை ஏமாற்றித் திருமணம் செய்வது குற்றம். இது போன்று கணவனோ மனைவியோ உயிருடன் சட்டப்படி கணவன் மனைவியாக வாழும் பொழுது வேறொருவரை மணப்பது குற்றமாகும். இது முகமதியச் சட்டத்தைக் கட்டுப்படுத்தாது.

## பிறருடன் கொள்ளும் பாலுறவு

ஓர் ஆண் மாற்றான் மனைவியுடன், அவள் சம்மதத்துடனும், அவள் கணவனின் சம்மதமின்றியும் கொள்ளும் உடலுறவு பிறரோடு கொள்ளும் பாலுறவு எனப்படும். ஒரு ஆணே, பெண்ணை மயக்கிப் பாலுறவு கொள்ளச் செய்கின்றான் என்ற கருத்தின் அடிப்படையில் இவ்வாறு பாலுறவு கொள்ளும் ஆணே தண்டனைக்குள்ளாகிறான். மேலும் சட்டம் இக்குற்றத்தை ஒருத்தி தன் கணவனுக்கு இழைக்கும் தீங்காகவே கருதுகின்றது. ஆனால் ஒரு ஆண் விலைமகளுடனோ, திருமணமாகாத பெண்ணுடனோ, ஒரு விதவையுடனோ அல்லது மணமான பெண்ணின் கணவனின் சம்மதத்துடனோ கொள்ளும்

பாலுறவுகளைக் கொள்ளத்தகாத பாலுறவுகளாகச் சட்டம் கருதவில்லை.

## வரதட்சணைக் கொடுமைகள்

வரதட்சணை தடைச் சட்டத்தில் வரதட்சணை கொடுப்பதும் வாங்குவதும் குற்றமாகும். வரதட்சணை கேட்டுக் கொடுமைப் படுத்தும் கணவனுக்குச் சிறைத் தண்டனையும் அபராதமும் விதிக்கச் சட்டம் வகை செய்கின்றது. திருமணமாகி 7 வருடங்களுக்குள் சந்தேகப்படும் வகையில் ஒரு பெண் இறந்தால் அதைப்பற்றி நீதிபதி விசாரணை செய்ய முடியும். வரதட்சணைப் பணத்தைத் தங்கள் விருப்பப்படி உபயோகித்துக் கொண்டு, அதைத் திருப்பிக் கொடுக்காத கணவன் வீட்டுக்காரர்களைத் தண்டிக்க முடியும். ஒரு பெண் தன் கணவனாலோ, அல்லது குடும்பத்தினாலோ தற்கொலை செய்து கொண்டிருந்தால் அவர்களைத் தண்டிக்கவும் சட்டம் வகை செய்கின்றது.

## பராமரிப்பு நிதி உதவி

குற்றப்பிரிவின் பகுதிகள் சாதி, மத பேதமில்லாமல் மணவிலக்குப் பெற்ற மனைவி தனக்கும், தன் குழந்தைகளுக்கும் பராமரிப்பு நிதியுதவி கோர வகை செய்கின்றது. அவனது தாய் தந்தையரும் இவ்வுதவியைக் கோர முடியும். சுயமாகப் பொருளீட்ட இயலாததைக் காரணம் காட்டி இவ்வுதவியைக் கோர முடியும். மனைவி மாதம் ரூ.500/- பெற முடியும்.

தனிப்பட்ட மதச் சட்டங்கள் இதற்கு வகை செய்யாததைக் காரணம் காட்டிக் கணவன் இந்தப்பொறுப்பிலிருந்து தப்ப முடியாது.

## காவல் நிலையத்திலுள்ள பெண்களுக்குப் பாதுகாப்பு

குற்றம் சாட்டப்பட்டுக் காவல் நிலையத்திற்குக் கொண்டு போகப்படும் பெண்களுக்கும் சட்டம் பாதுகாப்பளிக்கின்றது. காவல் நிலையத்திலுள்ள பெண் குற்றவாளியைப் பெண் காவலர்தான் சோதனையிடவேண்டும். மேலும் அவ்வாறு சோதனையிடும் பொழுது, பெண் மருத்துவர்கள் உடன் இருக்க வேண்டும். மேலும் பெண்ணை அவள் இருக்கும் இடத்திலின்றி வேறு இடத்திற்கு வரவேண்டுமென்று காவலர் கட்டளையிட முடியாது.

இவை தவிர, பெண்களுக்கு நிகழும் கொடுமைகளை விசாரிக்கக் குடும்ப நீதிமன்றங்கள் 1984 ஆம் ஆண்டு முதல் நிறுவப்பட்டு இயங்கி வருகின்றன. 1987-ஆம் ஆண்டு உடன்கட்டை ஏறுவதைக் குற்றமாக்கும் மற்றொரு சட்டத்தையும் அரசு பிறப்பித்தது.

## பெண் தொழிலாளர்கள் சட்டம்

வெகுகாலமாகவே சமூகத்தின் கீழ்நிலையிலுள்ள பெண்கள் வேலை செய்து பொருளீட்டிக் குடும்பத்தைப் பராமரித்து வருகின்றனர். அவர்கள் வீட்டிற்குள்ளேயும் வெளியிலும் வேலையின் பாரத்தைச் சுமக்கின்றனர். ஆயின் சமூகத்தில் நிலவிய மதிப்புக்களும் சட்டதிட்டங்களும் ஆண்களுக்குச் சாதகமாகவே அமைந்துள்ளன. இந்நிலையை மாற்றித் தொழிலாளப் பெண்களின் நிலையை மேம்படுத்த சில சட்டங்கள் இயற்றப்பட்டன. அவற்றில் சில இங்குக் கொடுக்கப்பட்டுள்ளன.

### தொழிற்சாலைச் சட்டம்

1948- ஆம் ஆண்டு இயற்றப்பட்ட தொழிற்சாலைச் சட்டம் தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளர்களுக்கு அநேக வசதிகள் செய்து கொடுக்க வகை செய்கின்றது. அவற்றில் சில, பெண் தொழிலாளர்கள் நலன் குறித்தவைகளாகும்.

இதன்படி தொழிற்சாலைகளில் அபாயகரமான வேலைகளில் பெண்களை வேலைக்கமர்த்துவது குற்றமாகும். 30 பெண்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகளில் குழந்தைக் காப்பகங்கள் ஏற்படுத்த வேண்டும். குழந்தைக்குப் பாலூட்ட வேலையின் நடுவில் அன்னைக்கு இடைவேளை கொடுக்க வேண்டும். மாலை 6 மணியிலிருந்து காலை 7 மணி வரை உள்ள நேரத்தில் பெண்களைத் தொழிற்சாலையில் வேலை செய்ய வைக்கக் கூடாது. குழந்தைப் பேறு காலத்தில் பெண்களுக்கு மூன்று மாத காலம் மகப்பேறு விடுப்பு அளிக்க வேண்டும் என்பவை இச்சட்டத்தின் சில முக்கியப் பகுதிகளாகும்.

### தோட்டத் தொழிலாளர்கள் சட்டம்

தோட்டத் தொழிலாளர்களுக்கான சட்டம் 1951-ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது. 50 அல்லது அதற்கு மேல் எண்ணிக்கை உடைய பெண் தொழிலாளர்கள் வேலை செய்யும் தோட்டங்களில் குழந்தைக் காப்பகங்கள் அமைக்க வேண்டும். இரவில் பெண்களை வேலைக்கனுமதிக்கக் கூடாது என்பவை இதன் சில முக்கியப் பகுதிகளாகும்.

#### சுரங்கச் சட்டம்

இச்சட்டம் 1952-ஆம் ஆண்டு நடைமுறைக்கு வந்தது. பெண்களுக்கான இதன் முக்கியப் பகுதி காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரையிலான நேரம் தவிர மீதி நேரத்தில் பெண்கள் சுரங்கத்தின்

கீழ்ப்பகுதியிலோ மேற்பகுதியிலோ வேலை செய்வதைத் தடை செய்வதாகும்.

## மகப்பேறு நலச்சட்டம்

1961-இல் இயற்றப்பட்ட மகப்பேறு நலச்சட்டம் பெண்களுக்குப் பேறு காலத்திலும் அதன் பின்னரும் வேலை உறுதி அளிக்கின்றது. குழந்தைப் பேறு காலத்தில் ஒரு பெண்ணுக்கு மூன்று மாதங்கள் ஊதியத்துடன் விடுப்பு அளிக்க வேண்டும். இதே சலுகையை அவள் கருக்கலைப்பு செய்தாலும் அளிக்க வேண்டும். மேலும் கருத்தரிப்பு, குழந்தைப்பேறு, கருக்கலைப்பு இச்சமயங்களில் ஒரு பெண்ணின் உடல் நிலை பாதிக்கப்பட்டால் 1 மாத காலம் ஊதியத்துடன் விடுப்பு அளிக்க வேண்டும். ஒரு பெண் குழந்தை பெற்ற 6 வாரங்களுக்குள் அவளை வேலை செய்ய அனுமதிக்கக் கூடாது என்பவை இதன் முக்கியப் பகுதிகளாகும்.

## தொழிலாளர் அரசு காப்பீட்டுச்சட்டம்

தொழிலாளர் நலக்காப்பீட்டுச் சட்டம் தொழிற்சாலைகளில் வேலை செய்யும் பெண்ணுக்குக் கருத்தரிப்பு, கருக்கலைப்பு, குழந்தை பிறப்பு, உடல் நலமின்மை இக்காலங்களில் குறிப்பிட்ட தொகையை வழங்க வகை செய்கின்றது. இச்சட்டம் செயற்பட முடியாத இடங்களில் மகப்பேற்றுச் சட்டம் செயற்படும்.

# சட்டங்கள்

**பெண்கள் பாதுகாப்பிற்காகவும் அவர்களுக்கு உரிமை அளிக்கவும் அரசால் இயற்றப்பட்ட சட்டங்கள் வருமாறு :**

1. 1987-ஆம் ஆண்டு சதி முறையை நடைமுறையில் செய்வதைத் தடுத்தல் சட்டம்.

   The Commission of Sati Prevention Act, 1987.

2. 1961-ஆம் ஆண்டு வரதட்சணை தடுப்புச் சட்டம்.

   The Dowry Prohibition Act, 1961.

3. 1992-ஆம் ஆண்டு குழந்தைகளுக்கான பால் மாற்றீடு, பாலூட்டும் குப்பிகள் மற்றும் குழந்தைகளுக்கான உணவுகள் - தயாரிப்பினை, வழங்குவதனை மற்றும் பங்கீட்டினை முறைப்படுத்துதல் சட்டம்.

   The Infant Milk Substitute, Feeding Bottles and Infant foods-regulation production, supply and Distribution Act, 1992.

4. 1961-ஆம் ஆண்டு மகப்பேறு கால நலச் சட்டம்.

   The Maternity Benefit Act, 1961.

5. 1890-ஆம் ஆண்டு காப்பாளர்கள் மற்றும் காப்பிலுள்ளவர்கள் சட்டம்.

   The Guardians and Wards Act, 1890.

6. 1986-ஆம் ஆண்டு பெண்களை அருவருப்பான முறையில் சித்திரிப்பதைத் (தடுத்தல்) சட்டம்.

   The Indecent Representation of Women (Prohibition) Act, 1986.

7. 1956-ஆம் ஆண்டு பரத்தமை (தடுப்புச்) சட்டம்.

   The Immoral Traffic (Prevention) Act, 1956.

8. 1971-ஆம் ஆண்டு மருத்துவ முறையில் கருவைக் கலைத்தல் சட்டம்.

   The Medical Termination of Pregnancy Act, 1971.

9. 1929-ஆம் ஆண்டு குழந்தைத் திருமணத் தடுப்புச் சட்டம்.

   The Child Marriage Restraint Act, 1929.

10. 1969-ஆம் ஆண்டு அயல்நாட்டுத் திருமணச் சட்டம்.

    The Foreign Marriage Act, 1969.

11. 1984-ஆம் ஆண்டு குடும்ப நல நீதிமன்றங்கள் சட்டம்.

    The Family Courts Act, 1984.

12. 1925-ஆம் ஆண்டு இந்திய வழியுரிமைச் சட்டம்.

    The Indian Succession Act, 1925.

13. 1872-ஆம் ஆண்டு கிருத்துவத் திருமணச் சட்டம் (2000-ஆம் ஆண்டு கிருத்துவத் திருமணச் சட்ட முன்வரவு மீதான குறிப்புரை).

    The Christian Marriages Act, 1872 (Comments on Christian Marriage Bill 2000)

14. 1874-ஆம் ஆண்டு திருமணமான பெண்களின் சொத்துச் சட்டம்.

    The Married women's Property Act, 1874.

15. 1990-ஆம் ஆண்டு மகளிருக்கான தேசிய ஆணையச் சட்டம்.

    National Commission for Women Act, 1990.

16. 1956-ஆம் ஆண்டு இந்து மகவேற்புகள் மற்றும் பேணுகைச் சட்டம்.

    The Hindu Adoptions and Maintenance Act, 1956.

17. பிறப்பிற்கு முந்தைய நோய் அறி உத்திகளைத் தவறாகப் பயன்படுத்துவதை முறைப்படுத்துதல் மற்றும் தடுத்தல் 1994-ஆம் ஆண்டுச் சட்டம்.

    The pre-natal diagnostic techniques (Regulation and Prevention of Misuse) Act, 1949.

18. 1948-ஆம் ஆண்டு தொழிற்சாலைகள் சட்டம்.

    The Factories Act, 1948.

19. 1948-ஆம் ஆண்டு சட்டம்.

    The Hindu Succession Act, 1948.

20. 1948-ஆம் ஆண்டு குறைந்தபட்ச ஊதியச் சட்டம்.

    The Minimum Wages Act, 1948.

21. 1948-ஆம்ஆண்டு பணியாளர்கள் அரசு காப்புறுதிச் சட்டம்.

    The Employees' State Insurance Act, 1948.

22. 1948-ஆம் ஆண்டு பிணையத் தொழிலாளர் முறை (ஒழித்தல்) சட்டம்.

    The Bonded Labour System (Abolition) Act, 1948.

23. 1923-ஆம் ஆண்டு சட்டத் தொழிலாற்றுநர்கள் (மகளிர்) சட்டம்.

    The Legal Practitioners (Women) Act, 1923.

24. 1986-ஆம் ஆண்டு இளவல் நீதிமுறைச் சட்டம்.

    The Juvenile Justice Act, 1986.

25. 1955-ஆம் ஆண்டு இந்து திருமணச் சட்டம்.

    The Hindu Marriages Act, 1955.

26. 1954-ஆம் ஆண்டு சிறப்பு திருமணச் சட்டம்.

    The Special Marriages Act, 1954.

27. 1976-ஆம் ஆண்டு சம ஊதியச் சட்டம்.

    The Equal Remuneration Act, 1976.

28. 1969-ஆம் ஆண்டு இந்திய மண முறிவுச் சட்டம்.

    The Indian Divorce Act, 1969.

29. 1956-ஆம் ஆண்டு இந்து இளவல் நிலை மற்றும் பாதுகாவலர் நிலைச் சட்டம்.

    The Hindu Minority and Guardianship Act, 1956.

30. 1937-ஆம் ஆண்டு முஸ்லீம் தனிச் சட்டம் (சாரியட்) பொருந்துகைச் சட்டம்.

    The Muslim Personal Law (Shariat) Application Act, 1937.

31. 1979-ஆம் ஆண்டு ஒப்பந்தத் தொழிலாளர் (முறைப் படுத்துதல் மற்றும் ஒழித்தல்) சட்டம்.

    The Contract Labour (Regulation and Abolition) Act, 1979.

32. 1979-ஆம் ஆண்டு மாநிலங்களுக்கிடையே இடம் பெயரும் பணியாளர்கள் (வேலை மற்றும் பணி நிபந்தனைகளை முறைப்படுத்துதல்) சட்டம்.

    The Inter-state Migrant workmen (Regulation Employment and Conditions of service) Act, 1979.

Indian Journal of Gender Studies (மே - டிச.2005) எனும் சிறப்பு மலரில் வெளியிடப்பட்ட கட்டுரையின் சாரத்தைப் பார்ப்போம்.

## இந்தியத் தகவல் தொழில்நுட்ப வல்லுநர்கள் இடம் பெயர்தலால் பாலினம், வரதட்சணை ஆகியவற்றின் பாதிப்பு

இந்தியாவில் கடந்த பத்தாண்டுகளுக்கும் மேலாக மாபெரும் தகவல் தொழில்நுட்பப் புரட்சி நடைபெற்று வருகின்றது. இதனால் நம் நாட்டுச் சமூகப் பொருளாதாரப் பண்பாட்டுத் துறையில் குறிப்பிடத்தக்க மாற்றங்கள் ஏற்பட்டு வருகின்றன. இத்துறையில் படித்துப் பட்டம் பெற்று வேலைதேடும் பெண்கள் மாநிலம் கடந்தும் நாடு கடந்தும் செல்ல வேண்டி உள்ளது. இது ஒரு தவிர்க்க இயலாத நிலையாகும். அவ்வாறு தகவல் தொழில்நுட்பத் துறையில் வேலைக்குச் செல்லும் பெண்கள் பல்வேறு சிக்கல்களை அக, புறச்சூழல்களில் சந்தித்து வருகின்றனர்.

உலகமயமாக்குதலின் தாக்கத்தால் பெண்களை விற்பது, வாங்குவது, விபச்சாரம், பெண் சிசுக் கொலை மற்றும் பெண் கருக்கலைத்தல் வரதட்சணைக் கொடுமை, வீட்டு வன்முறைகள், கொடுமைப்படுத்துதல், வரதட்சணைக் கொலை போன்றவை அதிகமாகின்றன. இதற்குப் பின்னால் பெண்கள் சிலரின் பங்கும் இருப்பது மிகவும் வருந்தத் தக்க ஒன்றாகும். இதனால் ஏழைப் பெண்கள் மிகவும் பாதிக்கப் படுகிறார்கள். தற்போதைய வளர்ச்சியின் உண்மையான நிலையும் கண்கூடாகத் தெரியும் அறிகுறியும் என்னவென்றால் ஆண் பெண் குழந்தைகளின் பிறப்பு விகிதம் குறைந்துள்ளதுதான். இதை நமக்குப் புள்ளி விவரங்கள் உணர்த்து கின்றன. ஒட்டுமொத்த ஆண் பெண் விகிதம் அதிகரித்திருக்கிறது. இருந்தாலும் இப்போது 1000 ஆண்களுக்கு 933 பெண்கள் இருக்கிறார்கள். 6 வயதுக்குட்பட்ட குழந்தைகளில் ஆண் பெண் விகிதம் 1991ஆம் ஆண்டு 1000 ஆண் குழந்தைகளுக்கு 945 பெண் குழந்தைகள் என்ற அளவில் இருந்தது. ஆனால் 2001ஆம் ஆண்டு அது 927 எனக் குறைந்து விட்டது.

இந்தியப் பெண்கள் தொன்று தொட்டு எதிர்கொள்ளும் சிக்கல்களோடு இதுவும் ஒரு புதிய பரிமாணமாகச் சேர்ந்துள்ளது. இத்துறையில் ஈடுபட்டுள்ள பெண்கள் இடம் பெயர்ந்து செல்வதால் சந்திக்கும் தனித்தன்மை வாய்ந்த சிக்கல்களைப் பற்றிச் சற்று விரிவாகக் காண்போம்.

நடைமுறையில் நாம் இதுவரை படித்தறிந்ததெல்லாம் இடம் பெயர்தலால் பெண்கள் எவ்வாறு பாதிக்கப்படுகிறார்கள்? இடம் பெயர்ந்த பெண்களின் அனுபவம் என்ன? அல்லது இடம் பெயர்ந்த ஆண் ஒருவர் இந்தியாவிலேயே விட்டுச்செல்லும் பெண்ணின் அனுபவம் என்ன என்பது குறித்ததாகும். ஆனால் இக்கட்டுரையானது

ஆண், பெண் இடம்பெயரும் போது பாலினம் எப்படி ஒரு தலையாய பிரச்சினையாகவே அமைந்திருக்கிறது என்பதனை வெளிக்கொணர் கிறது.

2000, 2001 ஆம் ஆண்டுகளில் ஆஸ்திரேலிய நாட்டின் சிட்னி நகரிலும் இந்திய நாட்டின் ஆந்திரப் பிரதேச மாநிலத்திலும் ஆராய்ச்சிகள் மேற்கொள்ளப்பட்டன. இந்த ஆராய்ச்சிக்கு ஆஸ்திரேலியா மையமாகத் தேர்வு செய்யப்பட்டதற்குக் காரணம் ஆஸ்திரேலியா அதிக அளவு தகவல் தொழில் நுட்ப வல்லுநர்களைக் கவர்ந்து இழுக்கிறது. மேலும் அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கு இடம் பெயர ஆஸ்திரேலியா ஒரு படிக்கல்லாக அமைந்திருக்கிறது. அதே போல இந்தியாவில் ஆந்திரப் பிரதேசத்தைத் தேர்ந்தெடுத்ததற்குக் காரணம் இம்மாநிலம் அளவுக்கு அதிகமான தொழில் நுட்பாளர்களை, உலகத்தில் உள்ள தகவல் தொழில்நுட்ப வல்லுநர்களில் 23 சதவிகிதத்தினரை உற்பத்தி செய்துள்ளது.

ஆந்திராவில் நிலவிவரும் பாலின உறவு முறைகள், வரதட்சணைமுறை, மாற்றங்களை அடைந்து வரும் இவ்வுலகப் பொருளாதாரத்தில் மலிவான, இணக்கமான தொழிலாளர்கள் உருவாக்குவதில் அவற்றின் பங்கு குறித்தும் இடம்பெயர்ந்து செல்லும் தகவல் தொழில்நுட்ப வல்லுநர்கள் அதிக வரதட்சணை வாங்குவதால் அத்தகு வாய்ப்பில்லா மக்கள் எப்படிப் பாதிக்கப்படுகிறார்கள் என்பது குறித்தும் இந்த ஆய்வு எடுத்துச் சொல்கிறது.

1990-ஆம் ஆண்டுகளில் ஏற்பட்ட பொருளாதாரத் தாராளமயத்தால் தொடர்ந்து தகவல் தொழில்நுட்பத் துறையில் ஏற்பட்ட அபரிமிதமான வளர்ச்சியும், அதன் பயனாகத் தகவல் தொழில் நுட்ப வல்லுநர்கள் விரைவாகப் பணி மாற்றங்கள் செய்யப்பட்டமையும் குறிப்பிட வேண்டிய மாற்றங்களாகும். 2002 ஆம் ஆண்டில் மட்டும் அமெரிக்க நாட்டில் உயர் தொழில் நுட்பப் பணிகளில் சேருவதற்காக 64,980 இந்தியர்களுக்கு H1B சிறப்புப் பயண அனுமதிச்சான்றிதழ்கள் வழங்கப்பட்டன. இவ்வகையில் சீனா 18, 841 மற்றும் கனடா 11,760 என்ற எண்ணிக்கைகளை விஞ்சி இந்தியா முதலிடம் பெற்றது. இப்படிக் குடியேறிய இந்தியர்களில் 73 சதவிகிதம் கணிப்பொறி வல்லுநர்கள் என்பதும், அனைத்து நாடுகளிலிருந்தும் குடியேறிய கணினி வல்லுநர்களில் 63 சதவிகித்தினர் இந்தியர் என்பதும் குறிப்பிடப்பட வேண்டும். அதுபோலவே இங்கிலாந்து நாட்டிற்குக் குடிபெயர்ந்த அயல் நாட்டுத் தகவல் தொழில் நுட்ப வல்லுநர்களில் 78 சதவிகிதத்தினர் இந்தியர்கள். இப்படிக் குடிபெயர்ந்த இந்தியர்களில் பெண்கள் மிகச் சிலரே என்பது ஆச்சரியப்பட வைக்கும் செய்தியாகும்.

குடிபெயர்ந்த தகவல் தொழில் நுட்ப வல்லுநர்களில் பெண்கள் சதவிகிதம் என்ன என்பது கண்டறியப்படவில்லை. எனினும் 2002 இல் குடிபெயர்ந்த மொத்த இந்தியர்களில் பெண்கள் 24 சதவிகிதமே. பங்கு பெற்ற 102 நேர்முகப் பேட்டியாளர்களில் 8 பேர் மட்டுமே பெண்கள் ஆவர்.

இத்தொகுப்பில் பெண்கள் பங்கு ஏன் குறைந்து காணப்படு கிறது. அயல்நாடு செல்லும் ஆண்கள் தம் மனைவியரை இந்தியாவி லேயே விட்டுச் செல்கின்றனர். அப்பெண்களின் அனுபவம் என்ன என வினா எழுப்பலாம். இவ்வினாக்களுக்கு இக்கட்டுரை விடையளிக் கிறது. சமூக வாழ்வில் பாலினம் ஒரு முக்கிய ஆதாரக் கோட்பாடு. அயல்நாடுகளுக்குக் குடிபெயர்தல் சமூக உறவுகளையே மாற்றி அமைக்கக்கூடிய சக்தி பெற்றது என்ற அடிப்படையில் ஆராயும் போது தகவல் தொழில்நுட்ப வல்லுநர்களின் வெளிநாட்டு மோகம் இந்திய நாட்டின் அன்றாட வாழ்வின் எல்லை வரம்புகளையே மாற்றி யமைக்கும் சக்தியாக உருவெடுத்துள்ளதாக இக்கட்டுரை மூலம் தெரிய வருகிறது. இந்தியாவில் நிலவி வரும் பாலின உறவு முறை, கலாச்சாரம், தகவல் தொழில் நுட்பத் துறைக்குத் தேவைப்படும் மனிதவள சக்தியை மலிவான விலையில் வழங்குவதோடு அத்தகு பணியாளர்கள் மிக இணக்கமான முறையில் பணியாற்றவும் துணை புரிகிறது. இவ்வாறு வேலை தேடி அலையும் ஒரு தகவல் தொழில் நுட்பக் குழுவினர் இந்தியாவில் சில பகுதிகளில் வரதட்சணை உயரக் காரணமாக இருப்பதும், அவ்வாறு உயர்பட்ச வரதட்சணை கொடுத்திட ஏதுவாக நல்ல வருவாய் ஈட்டித்தரும் தகவல் தொழில் நுட்பப் பணி தேடி நாடு பெயர்வதும் ஒரு நாணயத்தின் இருபக்கங்கள் போல அமைந்துள்ளன.

பாலினச் சிக்கல் என்பது ஆணுக்குப் பெண் எதிரி என்பதல்ல. தகவல் தொழில் நுட்பத் துறையில் பெண் பங்கேற்பு பெண்களைப் பலப்படுத்தும் என்பதுமல்ல. மாறாகத் தகவல் தொழில் நுட்பத்துறை ஆண்களின் ஏகபோக உரிமை, வரதட்சணை அதிகம் பெற ஒரு வாய்ப்பு என்பதுமல்ல. மாறாக ஒருதலைப்பட்சமான பாலின உறவு முறைகளால் இரு பாலாரும் பாதிக்கப்படுகின்றனர் என்பதே உண்மை. பெண்ணினத்தின் ஒரு பிரிவினர் அதிகாரம் பெற்று வளரும் போது வேறொரு பிரிவினர் பாதிக்கப்படுகின்றனர் என்பதே உண்மையான சமூகப் பரிமாணம். ஆகவே திருமணம் மற்றும் வரதட்சணை பெண்களை மட்டும் பாதிக்கும் சமூகப்பிரச்சினை - பாலினப் பிரச்சினை என்று நோக்காது அவை மொத்த சமூகத்தையே பாதிக்கும் பிரச்சினை என நோக்குதல் பாலினப் பிரச்சினையை முழுக்கப் புரிந்து கொள்ளத் துணை செய்யும்.

# தகவல் தொழில் நுட்பத்துறையில் குடிபெயர்தலும் பாலினமும்

மற்ற துறைகளில் பெண்கள் பணியில் இருப்பது அரிதாய் இருப்பது போலல்லாமல் தகவல் தொழில் நுட்பத்துறைப் பணிகளில் பெண்கள் ஏராளமானோர் பணியிலிருப்பதோடு அயல்நாட்டுப் பணிக்காகக் குடிபெயர்வோரில் பெண்களும் சுதந்திரமாக இயங்குவது குறித்தும் ஆராயப்பட்டுவருகிறது. ஆசிய நாடுகளிலிருந்து, குறிப்பாக இலங்கை, இந்தோனேசியா, பிலிப்பைன்ஸ் ஆகிய நாடுகளில் சட்டப் படியான முறையில் குடிபெயர்வோர் எண்ணிக்கை குறிப்பிடத்தக்க வகையில் அமைந்துள்ளது. இவர்களில் தகவல் தொழில் நுட்பத் துறையில் வேலைவாய்ப்புக் குறித்துப் பல ஆய்வுகள் மேற்கொள்ளப் பட்டிருப்பதோடு ஒப்பந்த ஊழியர்கள், திருப்பி அனுப்பப்பட்ட பெண்கள், விலைமாதராகத் தொழில் புரிவோர், விருந்து உபசரிப்பாளர்கள் குறித்தும் சில ஆய்வு முடிவுகள் வெளியிடப் பட்டுள்ளன. பெண் பயணிகள் குறித்தும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

பெண்கள் தன்னிச்சையாக வெளிநாடுகளுக்குச் சென்றாலும் தாய்நாட்டிலேயே விடப்பட்ட பெண்களின் அனுபவம் குறித்து ஆராய்வதும் பிரபலமடைந்துள்ளது. ஆண்கள் எந்த வயதிலும் வெளிநாடு செல்லலாம் என்ற நிலையிருக்கும் போது திருமணமாகாத இளம் வயது பெண்களே வெளிநாடு செல்லலாம் என்ற நிலையும் உள்ளது. கணவன்மார்களைவிட மனைவிமார்களே அதிக எண்ணிக்கையில் சொந்த நாட்டில் விட்டுச் செல்லப்படுகின்றனர். இதனால் தொழில் ரீதியில் பெண்களின் பங்கு அதிகப்பட்டு முடிவுகள் எடுப்பதில் பெண்களின் அதிகாரமும் கூடியது. கூடவே வேண்டாத தீய விளைவுகளும் ஏற்பட்டன. சமுதாய நாகரிகப் பழக்க வழக்கங்களில் காலம் காலமாக இருந்து வந்த ப்ரம்பரை நடைமுறைகள் மாற்றம் பெற்றன. உதாரணமாக வங்காளதேசத்திலிருந்து மத்திய கிழக்கு நாடுகளுக்குக் குடிபெயர்ந்த இஸ்லாமிய ஆடவர், புராதன இஸ்லாமியப் பழக்க வழக்கங்களைப் பின்பற்றியதால், அவர்களது குடும்பப் பெண்டிர் சமூகத்தால் ஒதுக்கிவைக்கப்பட்டார்கள். வாங்கும் திறன் உயர்வதின் பயனாகப் பாகிஸ்தானின் பஞ்சாப் மாநிலத்தில்

வரதட்சணை உயர்ந்துள்ளது. பெண்கள் விவசாயத்தில் ஈடுபடுவது குறைந்துள்ளது. பெண்கள் தனித்து வாழ்வதும் உயர்ந்துள்ளது.

வெளிநாடுகளில் குடிபெயரும் நிகழ்வுகளில் பெண்கள் அதிகப் பங்கு பெறுகின்றனர் என்பது குறித்து நிறைய விவரங்கள் இருக்க இந்த ஆய்வு அதற்கு எதிர்மாறாகப் பெண்கள் அதிகம் பங்கு பெறாதது குறித்து எடுத்துரைக்கிறது. இவ்வகையில் இந்தியாவிலும் உலக அளவிலும் பெண்களின் பங்கேற்பை அதிகப்படுத்துவது குறித்து அக்கறை செலுத்த வேண்டும். குடிபெயரும் தன்மை பெண்களிடையே குறைவாகக் காணப்படுகிறது. அதனால் தகவல் தொழில் நுட்பத்துறையில் பெண்கள் குறைவாக இருக்கின்றனர். மேலும் தொழில் இணக்கமும் பெண்டிரிடம் குறைவு.

இணைந்து செயல்படுதல், வெளிநாடு செல்ல வழி வகை தேடுதல், முடிவு செய்யும் திறன் மற்றும் பணமுடி அனுப்பும் வழக்கம் ஆகிய செயல்பாடுகளில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே வேறுபாடுகள் உள்ளன. மேலும் பெரும்பான்மையான தெற்கு ஆசிய, தென்கிழக்கு ஆசிய நாடுகளின் பெண்களை வெளிநாடுகளுக்கு அனுப்புவதையே தடை செய்து வைத்திருந்த காலமும் உண்டு.

பல இந்தியர்கள் வெளிநாடு சென்றதன் மூலம் தகவல் தொழில்நுட்பத் துறை வளர்ந்தது என்பதை விடவும் இந்தியாவிலும் இத்துறை விரைவாக உருவானது எனச் சொல்லலாம். 1970-ஆம் ஆண்டுகளில் தகவல் தொழில் நுட்பப் பிரிவில் ஏற்பட்ட வளர்ச்சிக்கு மென்பொருள் ஏற்றுமதி, குறிப்பாக, தகவல் தொழில்நுட்பப் பிரிவில் தொழில் வல்லுநர்கள் 70 சதம் பங்களித்துள்ளனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் நிலவும் 40, 50சதம் வளர்ச்சி விகிதத்தைத் தொடர்ந்து பராமரிக்க 2000-2005 ஆம் ஆண்டுகளில் சுமார் 2,00,000 இந்தியர்கள் அமெரிக்காவிற்குக் குடியேறுவார்கள் என ஒரு ஆய்வறிக்கை கூறியது.

உலகளாவிய தகவல் தொழில் நுட்பத் துறையில் இந்தியர்கள் நல்லதொரு நிலையில் இருப்பதற்குக் காரணம் என்ன? இந்தியர்களின் ஆங்கிலப் புலமை, உயர்கல்வி, ஆரம்பக் காலத்திலேயே மேற்கத்திய நாடுகளுடன் அவர்களுக்கு ஏற்பட்ட தொடர்பு, இணக்கமான மலிவான பணியாட்கள் ஆகியவையே ஆகும். குறிப்பிட்டுச் சொல்லப்போனால் அமெரிக்க நாட்டில் உள்ள எச்-113 பிரிவு தகவல் தொழில் நுட்ப இந்தியர்கள் மற்றவர்களைவிட 25 சதம் குறைந்த சம்பளம் பெறவும் பகுதி நேரப் பணிக்கு ஈடாகச் சம்பளம் பெறுவதை இழக்கவும் தயாராக இருக்கிறார்கள். அவ்வப்பொழுது தமது பணியைத் துறக்கவும் தயாராய்

இருக்கிறார்கள். உலக அரங்கில் ஏற்பட்டு வரும் நிலையற்ற சந்தைக்கேற்ப மிகுதிப் பணியாளர்களை வீட்டிற்கு அனுப்புவதும் இத்துறைக்குக் கட்டாயமாகும். எடுத்துக்காட்டாக அமெரிக்காவில் 2001-இல் சுமார் 8,50,000 வேலையாட்கள் தேவைப்படுவார்கள் என்ற கணிப்பு தவறாகி, சுமார் 3,50,000 நபர்கள் பணியிழப்புக்கும், சுமார் 6,00,000 நபர்கள் தொழில் நலிவால் சம்பள இழப்புக்கும் ஆளானார்கள். 1998-2000 ஆண்டுகளில் 20-க்கும் மேற்பட்ட தொழில் நிறுவனங்கள் பணியாளர் தேடி இந்தியாவிற்கு வந்திருக்கையில் 50,000 பணியாளர்களுக்கு அமெரிக்காவில் பணியிழப்பு ஏற்பட்டது. இந்நிகழ்வு எப்படி ஏற்படுகிறது?

நிறுவன வியாபாரம் என்ற உத்தியின் மூலம் இந்நிகழ்வு நடக்கிறது. ஒரு நிறுவனம் தகுதியுடைய பணியாளர்களைத் தெரிவு செய்து வாடிக்கையாளர்களின் தேவையைப் பூர்த்தி செய்கிறது. வழக்கமாகப் பணியாளர்கள் வாடிக்கையாளர்களிடம் ஒப்படைக்கப் படுவார்கள். ஆனால் நிறுவன வியாபார முறையில் பணியாளர்கள் வியாபாரப் பொருளாக ஆளெடுக்கும் நிறுவனப் பாதுகாப்பிலேயே வைக்கப்படுகிறார்கள். இதனால் எந்நேரத்திலும் பணி முறிவு செய்வது வசதியாய் உள்ளது.

அத்தகு நிறுவன வியாபார அமைப்புகள் 'விசுப்பலகை' என்ற முறையைப் பின்பற்றுகின்றன. இதன்படி வெளிநாடு செல்வோருக்கு உடனடி பணி கிடைக்காது. அவர்கள் வெளிநாடு சென்று காத்திருக்க வேண்டும். காத்திருக்கும் காலத்திற்கு அவர்களுக்குச் சம்பளம் ஏதும் கிடைக்காது அல்லது குறைந்தபட்ச தொகை கொடுக்கப்படும். நிறுவன வியாபார அமைப்புகள் பெரும் தொழில் நிறுவனங்களைச் சார்ந்திருக்கின்றன. இதனால் தகவல் தொழில் நுட்பப் பணியாளர் களுக்குப் பணி நிரந்தரம் இல்லை. அடிக்கடி நாடு விட்டு நாடு பணி தேடிச் செல்ல வேண்டிய கட்டாயமும் உள்ளது.

பெரிய மென்பொருள் சேவை நிறுவனங்கள் தங்கள் பணியாளர்களை வெளிநாட்டிற்குப் பணிநிமித்தமாக அனுப்பி வைப்பது "நிறுவன வியாபாரம்" என்பதிலிருந்து வேறுபட்டது ஆகும். இத்தகு பணியாளர்களுக்கு நிரந்தர ஊதியமும் கிடைக்கும். இந்த இருவகை வழிமுறைகளிலும் பெண்களுக்குரிய பங்கு கிடைப்ப தில்லை. ஏனெனில் பெண்கள் வெளிநாடு சென்ற பின் பணி தேடி காத்திருப்பது மிகச் சங்கடமானது. நான்கைந்து ஆண்கள் வேலை கிடைக்கும் வரை ஒன்று சேர்ந்து குறைந்த செலவில் ஒரே படுக்கை அறையை வாடகைக்கு எடுத்துத் தங்கலாம். ஆனால் பெண்கள்

இப்படித் தனியாகவோ, ஆண்களோடு சேர்ந்தோ தங்கியிருப்பதைச் சமூகம் ஏற்றுக் கொள்வதில்லை. துணிந்து தங்கியிருந்த ஒரு தனிப் பெண் ஆஸ்திரேலியாவில் தன் பெண்மையை இழக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டது. இச்செய்தி மிகக் கமுக்கமாக வைக்கப்பட்டது. இச்செயல் ஒரு குற்றமாகக் கருதப்படுவதற்குப் பதிலாக அப்பெண்ணின் முட்டாள்தனத்திற்குக் கிடைத்த பாடம் என்றுதான் இந்தியர்கள் கருதுகிறார்கள்.

வெளிநாடுகளில் படித்துப் பட்டம் பெற்ற இளைஞர்களுக்கு "நிறுவன வியாபார" ரீதியில் பணி கிடைப்பது எளிது. விசா எடுப்பது அவர்களுக்குத் தேவையில்லாதது. சிட்னி நகரில் உள்ள மென்பொருள் மாணவர்களில் 10 முதல் 20 சதம் நபர்கள் பெண்களே. இருப்பினும் அப்பெண்கள் ஆண்களுக்கு ஈடாக நிறுவன வியாபார முறையில் பணியில் சேருவதை விரும்புவதில்லை. பட்டம் பெற்ற பெண்கள் இந்தியா திரும்புகிறார்கள். அமெரிக்காவில் வாழும் இந்திய ஆடவர் ஒருவரை இந்தியாவில் திருமணம் செய்கிறார். பிறகு அந்தக் கணவரின் மனைவியாக, சார்ந்திருப்பவராக அமெரிக்கா திரும்புவதையே விரும்புகிறார்கள்.

நிறுவன வியாபார அமைப்புகளில் வெகு சில பெண்களே நேரிடையாகப் பணியாற்றி வந்தாலும், அத்தகு வியாபார அமைப்புகளை உருவாக்குவதில் பெண்கள் பெரும் பங்கு வகிக்கிறார்கள். சிட்னி நகரில் உள்ள அத்தனை நிறுவனங்களிலும் ஒன்றே ஒன்றுதான் பெண்களால் நடத்தப்படுகிறது. இதனால் பெண்கள் இலாயக்கற்றவர்கள் ஆகார். பெரும்பாலான பெண்கள் அரசுத்துறைப் பொது நிறுவனங்களில் பணியாற்றுகிறார்கள். எடுத்துக்காட்டாக மென்பொருள் தொழிலில் ஈடுபட்டுள்ள கிருஷ்ணா அவர்களின் மனைவியார் அதிக ஊதியம் வாங்கும் தனியார் துறை வேலையை விட்டுவிட்டு, குறைந்த ஊதியம் கிடைக்கும் அரசுப் பணியைத் தேடிக் கொண்டார். நிலையான ஊதியம் கிடைத்தால் எத்தகு இக்கட்டான சூழ்நிலையையும் எதிர்கொள்ளலாம் என்ற நினைப்பே இதற்கு காரணம். மேலும் மென்பொருள் தொழிலில் ஈடுபட்டுள்ள ஆண் எந்த நேரத்திலும் பணி செய்ய வேண்டிய கட்டாயம் இருப்பதால், அரசுப்பணியில் இருக்கும் பெண் திட்டமிட்டு அன்றாடப் பணிகளைச் செய்து முடிக்கவும், குழந்தைகளைப் பேணிக்காப்பதிலும் செலவிடலாம்.

நிறுவன வியாபார அமைப்புகளை உருவாக்கிப் பராமரித்தலில் பெண்கள் பெரும் துணையாக நிற்கிறார்கள். இத்தகு அமைப்புகளை

உருவாக்குவதில் இருவகை நோக்கங்கள் உள்ளன. ஒன்று அந்த நபர் பெரிய மென்பொருள் நிறுவனத்தில் பணியில் சேர வழிவகுத்துக் கொடுப்பது - மற்றொன்று அந்த நபரே கூட ஒரு தொழிலதிபராக வளர்ச்சி அடையலாம். பெரும்பான்மையான நிறுவன வியாபார அமைப்புகள் தங்கள் வாடிக்கையாளர்களின் மென்பொருள் வளர்ச்சித் திட்டங்களைச் செயல்படுத்தும் முயற்சியில் இறங்கித் தாங்களாகவே ஒரு பெரும் மென்பொருள் நிறுவனமாக வளர்த்துக் கொள்ள முனைகிறார்கள். நிறுவன வியாபார அமைப்புகளின் நிதிநிலையின் பொருட்டு அவை எந்தப் பணியாளரையும் முறையாக, நிரந்தரமாகப் பணியில் வைத்துக் கொள்ள இயலாது. ஆகவே தங்களின் பெரும் பணியினை வெளித் திறன் பெறுதல் (Outsourcing) பாணியில் தங்களது இந்திய வம்சாவளியினரிடத்தில் கொடுத்து முடித்துக் கொள்கிறார்கள். H-1B விசா பெற்றுச் செல்பவர்கள் நிரந்தரப் பணியாற்ற அனுமதிக்கப்படுவதில்லை. இதனால் அவர்கள் இத்தகு துணை ஒப்பந்தப் பணிகளில், வீட்டிலிருந்தபடியே பணியைத் தேடிக் கொள்கிறார்கள். இப்படி, பெண்கள் மறைமுகமாகத் தங்கள் கணவருக்கு உதவியாய் இருப்பதோடு, குடும்பப் பராமரிப்பிற்கு நிலையான வருவாய் ஈட்டித் தருவதில் துணைபுரிகிறார்கள்.

இப்படி, பெண்களின் பணி மிக முக்கியத்துவம் வாய்ந்ததாக இருப்பினும், தகவல் தொழில் நுட்பப்பணியில் ஈடுபட்டுள்ள பல இந்திய இளைஞர்கள் பெண்கள் வேலைக்குச் செல்வதை நாகரிகமாகக் கருதுவதில்லை. அவர்களுடைய மனப்பான்மை குடிபெயர்தல் மற்றும் குடும்பத் திட்டமிடலில் பிரதிபலிக்கின்றது. ஆஸ்திரேலியா நாட்டில் ஓரிரு ஆண்டுகள் பணியாற்றிய இந்தியர், இந்தியா திரும்பி, இந்தியப் பெண்களை மணம் முடித்து, பிறகு தங்கள் மனைவியுடன் அமெரிக்கா செல்லுகின்றனர். இதற்குக் காரணம் என்ன? அமெரிக்க நாட்டில் H-1B விசா பெற்ற ஆண் தன் மனைவியை H-4 விசா மூலம் எத்தருணத்திலும் அழைத்துச் செல்ல அனுமதிக்கப்படுகையில், ஆஸ்திரேலியாவில் இதே சலுகையைப் பெற ஆறுமாதங்கள் ஆகலாம். அதே நேரத்தில் மனைவிமார்கள் அமெரிக்க நாட்டில் பணியாற்ற அனுமதிக்கப்படுவ தில்லை - ஆனால் ஆஸ்திரேலியாவில் இவ்வசதி உண்டு. இதனால் ஆஸ்திரேலியாவைக் கவர்ச்சிகரமான நாடாக யாரும் கருதுவதில்லை. காரணம் ஆஸ்திரேலியாவில் கணவன் தனியாகவே சம்பாதிக்க முடியும். மனைவி வீட்டில் இருந்தபடியே குழந்தைகள், குடும்பத்தைப் பராமரிக்க முடியும். இந்த வகையில் அமெரிக்காவையே பலரும் விரும்புகின்றனர்.

தகவல் தொழில் நுட்பத்துறைப் பணியாளர் தேவைக்கேற்ப ஈடுகொடுத்துப் பராமரிப்பதில் பெண்கள் பெரும்பங்கு ஆற்றினாலும் அதனால் பெரும் தொல்லைகளுக்கும் ஆளாகுகிறார்கள். வெளிநாடு வாழ் கணவன்மார்கள் எதிர்கொள்ளும் பணி அழுத்தம் காரணமாக அவர்களால் குடும்பப் பெண்கள் கொடுமைக்கு ஆட்படுத்தப்படு கின்றனர். சான்றாக வியட்நாம் நாட்டின் ஹாங் காங் தடுப்புக் காவல் மையத்தில் காவலில் வைக்கப்பட்ட ஆண்களின் மனைவிமார்களும் மற்ற குடும்பப் பெண்களும் கொடுமைக்கு ஆளானார்கள். இஃது அவர்களது அதிகாரம் மற்றும் ஆணாதிக்கம் செல்லுபடியாக வில்லையே என்ற விரக்தியின் வெளிப்பாடே. தகவல் தொழில் நுட்பத் துறையில் சூழ்நிலை இன்னமும் மோசமானது. சான்றாகச் சான்பிரான்ஸிஸ்கோ நகரில் உள்ள தெற்காசியா நிறுவனம் ஒன்றிற்கு 2000-2001 ஆம் ஆண்டில் மட்டும் 1500 தொலைபேசி தகவல்கள், தாங்கள் குடும்பக் கொடூரங்களுக்கு உட்படுத்தப்படுவதாக வந்தன. H-4 விசா பெற்ற பெண்கள் திருமண முறிவு ஏற்பட்டவுடன் தங்கள் தாய் நாட்டிற்குத் திருப்பி அனுப்பப்பட்டார்கள். அமெரிக்க நாட்டில் வாழும் இந்தியர்களின் இத்தகு அவசர நிலை பெண்களை மிகவும் பலவீனப்படுத்தியுள்ளது. அமெரிக்காவில் குடியிருக்கும் ஒரு கணவன் தன் பணியை இழந்துவிட்டால், இந்தியாவில், ஆந்திராவில் குடியிருக்கும் மனைவி சபிக்கப்பட்டாள். கணவனுக்கோ, மாமி - மாமனாருக்கோ சங்கடம் வரும் போதெல்லாம், புதியதாக மணம் முடித்து வந்த மருமகளே காரணம் என்ற நம்பிக்கை இன்னமும் போனபாடில்லை.

இவ்வாறாக நிலையற்ற தொழில் நுட்பத்துறையில் பெண்களின் பங்கு மகத்தானதாக அமைந்திருக்கும். அதனால் அவர்கள் அனுபவிக்கும் துன்பங்களும் ஏராளம்.

தொழில் நுட்பத்துறையில் இந்திய வல்லுநர்கள் குறைந்த ஊதியத்திற்கும், பணி மாற்றத்திற்கும் தயாராய் இருப்பதற்குக் காரணம் அவர்கள் தங்கள் நாட்டில் மிகக் குறைந்த செலவில் அதற்கான கல்வித்தகுதியைப் பெறுகிறார்கள். இதற்கு இன்னுமொரு காரணம் இந்தியாவில் நிலவும் ஆண்-பெண் ஏற்றத் தாழ்வு மற்றும் மனைவிமார்களின் ஊதியம் பெறாத உற்பத்தித்திறனும் ஆகும். சான்றாக வீட்டு வேலையாட்களில் பெண்களே அதிகம். உலகிலேயே குழந்தைத் தொழிலாளர் எண்ணிக்கை இந்தியாவில் அதிலும் குறிப்பாக ஆந்திராவில்தான் அதிகம். ஆந்திராவில் உள்ள தகவல் தொழில் நுட்ப நிறுவனங்களில் தேநீர், சாப்பாடு வாங்கிக்

கொடுக்கவும், தரையைச் சுத்தம் செய்யவும் குழந்தைகளே பயன்படுத்தப்படுகிறார்கள். அதனால் சிலிக்கான் பள்ளத்தாக்கின் முதலீட்டுச் சாசனங்களில் தீண்டத்தகாத பெண் துப்புறவுப் பணியாளர் மற்றும் ஒரு தேநீர் வழங்கும் பையனின் பங்கு அதிகமா அல்லது உயர்சாதி மனிதன் மற்றும் வெள்ளைத் தோல் முதலாளிகளின் பங்கு அதிகமா என்பதைக் கணிப்பது மிகக் கடினம்.

தகவல் தொழில் நுட்பப் பணியாளர்கள் எளிதில் பணிமாறும் தன்மைக்குப் பாலினம் மற்றும் சீதனம் காரணிகளாக இருப்பதோடு சாதி உறவுகளும் பெரும் காரணமாய் அமைந்துள்ளன. ஆந்திராவி லிருந்து வெளிநாடு செல்லும் பெரும்பான்மையான பணியாளர்கள் கம்மா மற்றும் ரெட்டியார் சாதியைச் சேர்ந்தவர்கள். இவ்விரு சாதியினரும் கிராமப்புறங்களில் விவசாயம் செய்து வாழ்க்கை நடத்துபவர்களே. கடந்த ஒரு நூற்றாண்டில் இவர்கள் பெற்ற கல்வி ஒரு திருப்பு முனையாக அமைந்தது. 1920 வாக்கில் இவர்கள் பிராமணர் எதிர்ப்பு இயக்கத்தைத் தோற்றுவித்தார்கள். கல்வித்துறையில் பார்ப்பனர்களின் ஏகபோக ஆதிக்கத்தை ஒழிக்க இச்சாதியினரும் மேற்கத்திய நாடுகளில் உள்ளது போன்ற உயர்தரக் கல்வி நிறுவனங்களைத் தோற்றுவித்தார்கள். இவ்வாறு கல்விக் கூடங்களில் செய்யப்பட்ட பெரும் முதலீடுகளின் விளைவே, இச்சாதியினர் தகவல் தொழில் நுட்பத்துறையில் பெற்ற பெரும் பங்கிற்குக் காரணமாகும்.

ஆந்திராவில் அதிக வரதட்சணை கொடுக்கும் சாதியினர் கம்மா மற்றும் ரெட்டியார் சாதியினரே. இது அச்சாதியினர் அடைந்துள்ள உயர் கல்வித் தரத்திற்கு முரண்பாடானதாகக் கருதப்படக்கூடாது. வரதட்சணை என்பது தென்னிந்தியாவில் ஒரு புதிய தோற்றமாகும். முன்னதாகப் பெண்ணுக்குப் பரிசம் போடுவதே பழக்கத்தில் இருந்து வந்தது. ஆனால் நவீனகால வரதட்சணை ஆங்கிலேய ஏகாதிபத்திய அரசால், அவர்கள் அறிமுகப்படுத்திய பணப்புழக்கம், கல்வி மற்றும் அமைப்பு ரீதியான தொழில், ஆகியவை காரணமாகக் குறிப்பாக அரசுப் பணிகளில் நுழைவது அவ்வளவு எளிதல்ல என்கிற நிலையால் உருவாக்கப்பட்டது. அதற்கான உயர்கல்வித்தகுதியைப் பெற அதிக செலவு செய்வதோடு அரிதான அரசுப் பணியிடத்தை அடையக் கூடிய திறமையும் தேவை ஆகும். அதிக முதலீடு செய்து, அரிய வாய்ப்பை அடைந்த அத்தகு வாலிபர்களை அதிக விலை கொடுத்துத் தம்மகள்களுக்கு மணம் முடிக்க அறிமுகமானதே வரதட்சணை என்ற புதிய யுக்தி. இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பக் காலக் கட்டத்தில், கல்கத்தா பல்கலைக் கழகத்தில் சட்டம் படித்த பட்டதாரி ரூ.10,000/-

வரதட்சணை பெறும் நிலை உருவானது. பஞ்சாப் போன்ற வட மாநிலங்களில் குடும்பச் சொத்தில் பெண்களுக்குப் பங்கு இல்லாததும், ஆண்களே பொருளாதாரத்தின் காவலர்களாகக் கருதப்பட்டதும் ஆங்கிலேயே ஏகாதிபத்தியத்தின் விளைவுகளே.

மேற்கத்திய நாகரிகம் நவீன வரதட்சணை உட்புக வழிவகுத்துக் கொடுக்க, உலகமயமாதல் அக் கொடுமையைப் பரவலாக்க வழிவகுக்கிறது. உதாரணமாக ஆந்திராவில் ஒரு கம்மா அல்லது ரெட்டி குடும்பத்தில் ஒரு மகளுக்குத் தகவல் தொழில் நுட்பத்துறையில் பணி கிடைத்தால் அது அக்குடும்பத்திற்குப் பெரும் வரப்பிரசாதமாகக் கருதப்பட்டது. ஒரு நல்ல நிறுவனத்தில் பணிபுரியும் ஒரு ஆண் 8,00,000 முதல் 20,00,000 வரை வரதட்சணை கேட்கலாம். அதே ஆண் அமெரிக்காவில் பணி புரிந்தால் 50, 55 இலட்சம் வரை வரதட்சணை எதிர்பார்க்கலாம். இந்தப் போக்கு அத்தகைய குடும்பத்திற்கு அக்கம்பக்கத்தில் குடியிருப்போரின் கவனத்தையும் ஈர்த்தது. காரணம், அத்தகைய குடும்பம் தங்கள் பெண்ணுக்கு அதிக வரதட்சணை கொடுக்கத் தயாராக இருப்பதோடு தங்கள் மகனுக்கு அதைவிட அதிக வரதட்சணை கேட்டுப் பெற்றிடவும் தயாராக இருப்பதும்தான். இவ்வாறாகத் தகவல் தொழில் நுட்பப் பணியில் இருப்போர் செல்வந்த நிலையும், கௌரவமும் வளர வளரத் திருமணச் சந்தையில் அவர்களது விலையும் உயர்ந்து கொண்டே போகிறது.

வரதட்சணைப் பழக்கத்திற்கும், தகவல் தொழில் நுட்பப் பணிக்கும் இடையே உள்ள தொடர்பு என்ன என்பதைப் பார்ப்போம். மேற்கத்திய நாகரிகம் வளர்ந்த நிலையிலும் அதிகப்பட்ச வரதட்சணை வாங்கும் நிலையும் வளர்ந்துள்ளது ஆச்சரியப்படவைக்கும் ஒன்றுதான். தகவல் தொழில் நுட்ப வளர்ச்சி அயல் நாட்டு நாகரிகத்தில் உள்ள ஈடுபாட்டை வளர்த்திருந்தாலும், இந்தியக் கலாச்சாரத்தில், பழக்க வழக்கங்களில் உள்ள பற்றுதல் குறைந்தபாடில்லை. அயல்நாட்டில் பணிபுரியும் இந்திய மணமகன்களும், இந்திய நாட்டிலேயே வாழும் மணமகளையே திருமணம் முடிக்க விரும்புகின்றனர். அதுவும் தங்கள் சாதிக்குள்ளேயே பெண் எடுக்க விரும்புகிறார்கள். வேறு சாதியில் பெண் எடுத்தால் தங்கள் குடும்பம் சந்தேகக் கண்ணோடு பார்க்கப்படும். குடும்பத்தின் இதர பிள்ளைகளுக்குத் திருமணம் தடைபடும் என்ற நோக்கிலும் பார்க்கின்றனர். ஆனால் அதே சமயத்தில் பெண் கொடுக்க முன்

வருவோரில் யார் அதிகம் வரதட்சணை கொடுப்பார்கள் என்ற பட்டியலையும் பார்க்கத் தவறுவதில்லை.

அயல்நாடு குடிபெயர்தல் வரதட்சணையை உயர்த்தவே துணைபுரிகிறது. அயல் நாட்டுப்பயன் பொருத்தமுடைய பெண்களைத் தேடும் பட்டியலை நீளச் செய்வதுடன் பொருளாதார இலாபக் கணக்குகளைத் திருமணத்தின் மையப் பொருளாகப் பார்க்கவும் வழிகோலுகிறது. திருமணப் பொருத்தம் பார்க்க செய்தித்தாள்கள், திருமணமுகவு அமைப்புகள், கணினி போன்றவை குறிப்பிட்ட சாதியில் ஒரு பெண்ணைக் குறிவைக்கவே பயன் படுகின்றன. குறிவைக்கப்பட்ட பெண்ணிடமிருந்து எந்த அளவு வரதட்சணை கிடைக்கும் என்ற கணக்கே திருமணத்தை முடித்து வைக்க விடையாய் அமைகிறது.

அடிக்கடி இடம்பெயரும் ஒரு ஆண்மகனின் தகுதியைப் பொருத்து அவனது திருமண அங்காடி விலையும் கூடுகிறது. குடும்பக் கௌரவமும் உயர்கிறது. முதல் வருடத்தில் தான் வாங்கும் ஊதியம் முழுவதையும் தன் வீட்டுக்கு அனுப்பிவைக்கும் ஒரு ஆண், இரண்டாவது ஆண்டில் தான் அனுப்பும் பணத்திற்குக் கணக்குக் கேட்க ஆரம்பிக்கிறான். தன் சகோதரிகளின் திருமணம் என்றால் அதிக முன்னுரிமை கொடுத்து அதிகப் பணமும் அனுப்புகிறான். இதில் இருவகை இலாபம் இருக்கிறது. ஒன்று - இந்தியக் கலாச்சாரப்படி வீட்டில் உள்ள எல்லாப் பெண்களுக்கும் திருமணம் முடித்த பின்னர் ஆணுக்குத் திருமணம் முடிப்பது மரபு. இரண்டு - தங்கள் வீட்டுப் பெண்களுக்குத் தாங்கள் கொடுத்த வரதட்சணையைச் சொல்லித் தங்கள் பையனுக்கு அதிக அளவு வரதட்சணை பெற்றிட வழிகோலும் - மற்றும் குடும்பச் சுமைகள் எல்லாம் கழிந்துவிடும்.

குடும்பச் சுமைகள் எல்லாம் முடிந்த நிலையில், பெண் கொடுப்போரும் பையனின் குடும்பச் சொத்து, எதிர்கால வளர்ச்சி ஆகியவற்றைத் துல்லியமாகக் கணக்கிட்டு, அதிக வரதட்சணையை வழங்கிட வழிகோலும். ஆகவே பையன் வீட்டாரும் தங்கள் பெண்களின் திருமண விழாவினைத் தடபுடலாக நடத்தத் தயங்குவ தில்லை. இவ்வாறாகத் தகவல் தொழில் நுட்பப்பணியில் வேலை கிடைத்த ஒரு பையனின் சகோதரிக்கும் தகவல் தொழில் நுட்பப்பணியில் வேலை பார்க்கும் பையனையே திருமணம் முடிப்பது குடும்பக் கௌரவமாக வளர்ந்துள்ளது.

வரதட்சணை என்பது குடும்பக் கௌரவம் மற்றும் தகுதிக்கு ஒரு அறிகுறியாக வளர்ந்துள்ளது. மேலும் உயர்கல்வி பெற்றுத் தகவல் நுட்பத் துறையில் வேலை செய்யும் ஒரு பெண் எந்த அளவு வரதட்சணையையும் கொடுத்திடத் தயாராக இருக்கிறாள். குறிப்பாக, ஆந்திராவில் கம்மா சாதிப் பெண்கள் இவ்வகைப் பந்தயத்தில் கில்லாடிகள். கம்மா வகுப்புப் பெண்களுக்குக் குடும்பச் சொத்திலும் பங்கு உண்டு என்ற கலாச்சாரம் வளர்ந்துள்ளது. இதனால் கம்மா சாதிப் பெண்கள் தாங்கள் வரதட்சணையாக எடுத்துச் செல்லும் செல்வங்களைக் கடைசிவரை தங்கள் சொத்தாகவே ஆண்டு அனுபவித்து வருகிறார்கள். அவர்களின் கணவர் இச் செல்வத்தை வேறு தொழிலில் முதலீடு செய்தாலும் வரும் வருவாயில் தங்கள் பங்கைக் கேட்டுப் பெறத் தயங்குவதில்லை. திருமண முறிவு ஏற்பட்டாலும் தங்கள் பங்கு செல்வத்தைத் தங்களோடு திரும்ப எடுத்து வரவும் தயங்குவதில்லை. ஆகவே, கம்மா சாதியில், பொருளாதாரத் திட்டங்களில் பெண்களும் பங்கேற்பது, பெண்களின் அதிகாரப் பங்கேற்பைச் சுட்டுவதை விடவும், சாதிக்குள் அவர்களின் தகுதி நிலையைப் பறைசாற்றவே பயன்படுகிறது. இவ்வாறாக, கம்மா சாதியில் வரதட்சணை என்பது ஒரு கொடுமை இல்லை. தகுதியின் வெளிப்பாடே என்பது உண்மை. ஆனால் இந்தக் கலாச்சாரம் மற்ற கீழ்ச் சாதியினரை எந்த அளவு பாதிக்கிறது என்பதே சமூகச் சிந்தனைக்கு இங்கே உரித்தான பொருள்.

உலக அரங்குகளில் வேலை கிடைக்கக் கூடிய தகவல் தொழில் நுட்பத் துறையில் ஒருவரைத் தயார்படுத்துவதன் மூலம் அதிக வரதட்சணை பெறவும் அவர் தயார்படுத்தப்படுகிறார் என்பதே அடிப்படையான காரணம். ஒருவருக்கு ஆகும் கல்விச் செல வினங்களை வரதட்சணையாகத் திரும்பப் பெற்றுவிடலாம் என்பது அனைத்துப் பெற்றோர்களின் கணிப்பாகும். அதுவும் மருத்துவம், தகவல் தொழில் நுட்பத்தில் செய்யப்படும் முதலீடு வீணாவதில்லை. சில பெற்றோர் திருமண வாழ்வு செழிக்க வரதட்சணை கேட்கிறார்கள். சிலர் தங்களின் தேவைக்கேற்ப வரதட்சணை கேட்கிறார்கள்.

வரதட்சணைக் கூறுகளும் சமீப காலத்தில் மாறுபட்டு வருகின்றன. சாதாரணமாகத் தங்கம், ரொக்கப்பணம், வீட்டுத் தேவைக்கான சாமான்கள், அணிகலன்கள் வரதட்சணையாக வடஇந்தியாவில் தரப்பட்டு வந்த நிலை மாறி விலை மதிப்பு மிக்க பொருள்களும், அசையாச் சொத்துக்களும் வரதட்சணையாகத் தரப்படும் நிலை வளர்ந்துள்ளது.

ஹைதராபாத் நகரில் ஒரு பையனுக்கு 15 இலட்சம் வரதட்சணையாகத் தரப்பட்டுள்ளது. மேலும் 5,00,000 மதிப்புள்ள வீடும், அதே மதிப்புள்ள காரும் தரப்பட்டுள்ளது. அந்தத் திருமண ஜோடி அமெரிக்காவில் வசிப்பதால் வரதட்சணை வீட்டையும், காரையும் அவனது பெற்றோர்களே பயன்படுத்துகிறார்கள். பணத்தையோ, நகையையோ செலவு செய்வதைப் போல் இந்த அசையாச் சொத்தினை அவர்கள் விரயம் செய்துவிட முடியாது.

தகவல் தொழில் நுட்பப் படிப்பிற்கும், வெளிநாடு பயணத்திற்கும் கூட வரதட்சணை தரப்படுகிறது. பெண்ணைப் பெற்றவர் ஒரு பையனின் படிப்பிற்கும், வெளிநாட்டுப் பயணத்திற்கும் நிதி உதவி தருவதன் மூலம், அவனைத் தன் மருமகனாக ஊர்ஜிதம் செய்து கொள்கிறார். சில நிகழ்வுகளில் நிச்சயதார்த்தம் முடிந்து பையன் வெளிநாடு செல்வதும் உண்டு. ஆறுமாதக் காலத்தில் வெளிநாட்டுப் பணியைத் தேடிக் கொண்டு மீண்டும் தாய்நாடு திரும்பி மணம் முடித்து மனைவியுடன் வெளிநாடு செல்வதும் வழக்கமாகி உள்ளது. இவ்வகையில் உதவி பெறும் ஆண் கூடுதல் வரதட்சணை ஏதும் கேட்பதில்லை.

வரதட்சணை பெற்றுத் திருமணம் முடிப்பதின் விளைவுகள் சாதகமான முடிவுகளாக அமைவதும் இல்லை. உதாரணமாக, ஆந்திராவில் நரேந்திரா என்பவர் திருமண ஒப்பந்தத்தின் பேரில், தனது வருங்கால மாமனாரின் உதவியோடு வேலைதேடி வெளிநாடு சென்றார். ஆனால் 5 மாதங்கள் கடந்த பின்னரும் வேலை கிடைக்கவில்லை. இதற்கிடையில் இரு வீட்டாரும் திருமணத்திற்குக் கட்டாயப்படுத்தினார்கள். வேலை கிடைக்கவில்லை என்ற உண்மையைச் சொல்லவும் அவருக்குத் தயக்கம் - வேலை இல்லாத நிலையில் திருமணம் செய்து கொள்ளவும் தயக்கம். இப்படி இருதலைக் கொள்ளி நிலைக்கு அவர் ஆளானார். அதே போல, சித்தூர் வாழ் கட்டடப் பொறியாளர் ஒருவர் ரூ.7,00,000/- வரதட்சணை பெற்றுத் திருமணம் முடித்தார். திருமணம் முடிந்தசூட்டிலேயே அவரது சம்மந்தி வீட்டார் அவரை வெளிநாடு சென்று தகவல் தொழில் நுட்பத் துறையில் வேலை தேட வற்புறுத்தினார்கள். இதற்காக ரூ.5,00,000/-ஐ அவரது மைத்துனர்கள் கொடுத்து உதவினர். அவரும் தனது கட்டடப் பொறியாளர் பணியைத் துறந்தார். ஆனால் வெளிநாடு செல்லவும் இல்லை - மாற்றுப் பணியும் கிடைக்கவில்லை. இதனால் அவர் மன உளைச்சலுக்கு உள்ளானார். மாமனார் வீடு செல்லும் போதெல்லாம் வெளிநாடு போங்கள் - வேலை தேடுங்கள் என்ற

நச்சரிப்பு அதிகமானது. சில பொய் சொல்லியே அவரும், அவரது மனைவியும் தப்பி வந்தனர்.

வரதட்சணை என்பது வாழ்வில் உயர்வு பெறுவதற்கும் பயன்படுகிறது. பெண்களைவிட ஆண்களே நகரப் பகுதிகளுக்கும், வெளிநாடுகளுக்கும் குடிபெயரத் துணிகிறார்கள். பெற்றோர்களும் இந்தியக் கிராமியப் பெண்களையே மணம் முடிக்க விரும்புகிறார்கள். கிராமியப் பணக்காரக் குடும்பத்தில் பிறந்த பெண் நகரில் வாழும் ஆணைத் திருமணம் முடிக்கவே விரும்புகிறாள். அதிக வரதட்சணை கொடுத்தும் அத்தகு திருமணத்தை முடிக்க விரும்புகிறார்கள். இதனால் அமைப்புசாரா கிராமியப் பகுதி செல்வம், அமைப்பு சார்ந்த தொழில் நுட்பத் துறைக்கு மாற்றம் பெறுகிறது. பெண் வீட்டாரும் சமூக அந்தஸ்தில் உயர்வு பெறுகிறார்கள்.

உயர் சாதி வகுப்பைச் சேர்ந்த தகவல் தொழில் நுட்பப் பணியாளர்கள் வெகு சிலரே இருப்பினும், வரதட்சணைப் போட்டி மிக அதிகமாகவுள்ளது. இதனால், காலப்போக்கில் வரதட்சணை கேட்கும் போக்கு ஆதிதிராவிடர், மலை வாழ் சாதியினர் உட்பட்ட இதர நடுத்தர மற்றும் கீழ்ச் சாதி மக்களிடையேயும் மிக விரைந்து பரவியுள்ளது. கீழ்த்தட்டு மக்களிடையே இது சமுதாயக் கேடாகவே வளர்ந்துள்ளது. ஏனெனில், மேல் தட்டு மக்கள் தங்கள் வசதியை, செல்வத்தைப் பங்கிட்டுக் கொள்கிறார்கள். கீழ்த்தட்டு மக்களிடையே இப்பழக்கம் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வுக்கும் நீள்வதால் கொடூரமாகத் தொடர்கிறது.

செல்வந்தர்கள் செய்யும் முறைகளை ஏழை, எளிய மக்கள் பின்பற்றுவது எளிதல்ல. இரண்டாவதாக ஒரே தரமுடைய சாதியினரிடையே வரதட்சணை அளவினை உயர்த்திக் கொடுப்பதில் போட்டா போட்டி ஏற்படுகிறது. இதனால் கம்பு, ரெட்டி போன்ற சாதியினர் கம்மா சாதியினரை வெறுக்க ஆரம்பித்துள்ளனர். தகவல் தொழில் நுட்பத் துறையில் பணியாற்றும் சரவணா கான ரெட்டி கூறுகிறார்:

'என்னிடம் ரூ.100 இருந்தால் முதல் தர மது பானம் வாங்குவேன். இரண்டாம் தர மது பாட்டில்கள் நான்கு வாங்க மாட்டேன். ஆனால் ஒரு கம்மா இனத்தவர் என்ன செய்வார்? விருந்தினர் இருந்தால் 4 இரண்டாம் தர மதுபாட்டில்கள் வாங்குவார். தான் மட்டும் சாப்பிடுவதாயிருந்தால் முதல் தர மதுபானம் ஒரு பாட்டில் வாங்குவார். இது அவரது சுய நலத்தைக் காட்டுகிறது. வரதட்சணை

விவகாரத்திலும் இதே நிலைதான். ஒரு கம்மா இனத்துப் பெண் எடுத்துச்செல்லும் வரதட்சணை அப்பெண்ணுக்கு மட்டுமே சொந்தம். ஆனால் இதர சாதி பெண்ணுக்குக் கொடுக்கப்படும் வரதட்சணை சம்பந்தி வீட்டார் அனைவரின் சொத்தாக, எல்லோராலும் உபயோகப் படுத்தப்படுகிறது.'

செல்வந்தர்கள் வித்திட்ட வரதட்சணை முறை மக்களிடையே எதிர்பாராத தாக்கத்தையும் ஏற்படுத்தியுள்ளது. ஒரு வீட்டைப் பார்த்துப் பக்கத்து வீட்டுக்குள், பொறாமைப்படும் நிலையை ஏற்படுத்தியுள்ளது. " பக்கத்து வீட்டுப் பையன் நல்ல வேலையில், நல்ல சம்பளத்தில் இருக்கிறான். குடும்ப வசதி பெருகுகிறது. ஆகவே நீயும், தகவல் தொழில் நுட்பப் பணியைத் தேடு - பணத்தைச் சம்பாதி" என்ற போட்டி, பொறாமைக் குணம் வளர்ந்துள்ளது. ஒரே சாதிக்குள் யார் அதிகம் வரதட்சணை கொடுத்தார்கள் என்பது போட்டியின் மையக் கருத்தாகி, அவ்வகைச் செய்தி ஊர் மக்கள் அனைவருக்கும் தீப்போலப் பரவுதல் இயல்பாகிப் போனது.

ஆந்திராவில் லம்பாடா மலைவாழ் சாதியினரிடையேயும், தகவல் தொழில் நுட்பப் பணியில் சேரக் கூடிய அளவில் சிலர் உயர் கல்வி பெற்றிருக்கிறார்கள். இந்த மலை வாழ் சாதியினர் படுஏழையாய்இருப்பினும், அத்தகு வேலை செய்யும் பையனுக்கு 50,000, 1,00,000 ரூபாய் வரை வரதட்சணை வாங்குவது இயல்பாகிப் போனது. லம்பாடா பெண்கள்தான் ஆந்திராவில் விலைமாதர்களாக அதிகம்பேர் உள்ளனர். இவர்கள் வரதட்சணை கொடுத்துத் திருமணம் செய்து கொள்ளவே இத்தொழிலில் இறங்கியுள்ளனர். வரதட்சணை பெற்றுத் திருமணம் செய்து கொண்ட ஆண்கள் பின்னால் அவர்களது தொழிலைச் சொல்லி அவர்களைக் கைவிடுவதும் உண்டு. ஆண்கள் வேறொரு பெண்ணை வரதட்சணை பெற்றுக் கொண்டு திருமணம் செய்யத் தயங்குவதில்லை.

செல்வந்தர்கள் தங்கள் பெண்களின் எதிர்காலம் கருதி அதிக வரதட்சணையை அதையும் முன்வைப்பாக, முதலீடு செய்யத் தயங்குவதில்லை. இதைப் பின்பற்றும் ஏழைகள் எதிர்கொள்ளும் பிரச்சினைகளுக்கு அளவில்லை. ஏழைகள் தவணை முறையில் வரதட்சணை தருவதாக ஒப்பந்தம் செய்து கொள்கிறார்கள். திருமணம் முடிந்தபின் தரவேண்டிய தவணையைத் தருவதற்குத் தவறும் போது அப்பெண் வரதட்சணை கொடுமைக்கு உள்ளாக்கப்படுகிறாள். ஆந்திராவில் 1998-ஆம் ஆண்டில் மட்டும் சுமார் 500 வரதட்சணை சம்பந்தப்பட்ட இறப்புகள் பதிவு செய்யப்பட்டுள்ளன. இதனால்,

வரதட்சணை தொடர்புடைய வழக்குகளை விசாரிக்கவென்றே தனி நீதிமன்றங்களை அமைக்கலாம் என்ற கோரிக்கையும் ஆந்திராவில் முன் வைக்கப்பட்டுள்ளது.

இதுவரை வெளிவந்துள்ள கட்டுரைகள் அயல்நாடு, செல்வோரில் ஆண்-பெண் என இரு பாலாரையும் பிரித்தே பார்த்து வந்துள்ளன. ஆனால், இக்கட்டுரை சற்று வேறுபட்டு ஆண்களின் வாழ்வில், ஆணின், கல்வியில், அயல்நாட்டுப் பணி தேடுதலில் எவ்வகையில் பெண் உதவியாய், வாழ்க்கைத் துணைவியாய் இருக்கிறாள் என்ற நோக்கில் எழுதப்பட்டுள்ளது. குறிப்பாக, பெண் ஒரு நிரந்தர அரசுப் பணியில் எப்படி ஒத்தாசையாக இருக்கலாம் - ஒரு ஆணின் உயர் கல்விக்கும், அயல்நாட்டுப் பணி தேடுதலுக்கும் வரதட்சணை என்ற புதிய கருத்து எப்படி ஒரு கருவூலமாக அமைகிறது. உலக அளவில் பணிதேடும் இரு பாலாரின் நாடுவிட்டு நாடு தாவும் போக்கு எப்படி உள்ளூரில் சமூக நாகரிக மாற்றங்களை ஏற்படுத்தி வருகிறது. இம்மாற்றங்கள் ஒரே சாதியில், ஒரே வகுப்பாரிடையே ஆண்-பெண் சமூக உறவுகளை எவ்வகையில் பாதித்து வருகின்றன என்பதில் இக்கட்டுரை அதிக அக்கறையைக் காட்டுகிறது.

உலகச் சந்தையில், இந்தியா தாராளமயமாதலின் உண்மை நிலையைப் புரிந்து நடக்க வேண்டும் என்று கோருவோருக்கு இக்கட்டுரை ஒரு வழிகாட்டியாக அமையும். இக்கட்டுரை உலக மயமாதலின் தீய விளைவுகள் குறித்தும், அவற்றால் ஏற்படும் சமுதாயத் தாக்கங்கள் குறித்தும் எடுத்துச் சொல்கிறது. இவற்றை நாம் உதாசீனம் செய்யக் கூடாது. அப்படி உதாசீனம் செய்வது தொடர்ந்த சமச்சீர் வளர்ச்சிக்கு உதவியாக அமையாது. உலக அளவில், சமுதாயக் கட்டமைப்பில் விரைந்து ஏற்பட்டு வரும் பிரிவினைகள், அப்பிரிவினைகளால் சமூக வாழ்வில் ஏற்பட்டு வரும் சீரழிவுகள் இவற்றையும் கணக்கிலெடுத்துக் கொண்டு சமுதாய நோக்கோடு எந்தச் சமுதாயப் பிரச்சினையையும் நோக்குவதே முக்கியமானது, முதன்மையானது என்பதே இக்கட்டுரை எடுத்துச் சொல்ல விரும்பும் கருத்து.

# கற்பு

'கைபிடித்த கணவனைத் தவிரத் தெய்வம் வேறில்லை' என்று எண்ணி, அவனை வழிபட்டு வாழ்வதுதான் கற்பு. நாள்தோறும் வீடு பெருக்கி, பசுவின் சாணத்தைக் கரைத்து மெழுகிக் கோலமிட்டு, வீட்டு வேலைகள் அனைத்தும் செய்து, கணவனுக்கு உணவு சமைத்து, அவன் உண்டபின் உண்டு, அவன் உறங்கிய பின் உறங்கி, அவன் எழுவதற்கு முன் எழுந்து, அவனிட்ட கட்டளைகளை இன்முகத்துடன் நிறைவேற்றி, அவனுக்காகவே வாழ்வதுதான் கற்புடைய பெண்ணுக்கு அழகு என்கிறது அபிதான சிந்தாமணி.

ஆதிமனிதர்கள் கூட்டமாகச் சென்று, விலங்குகளை வேட்டை யாடினர். வேட்டை உணவை அங்கேயே அனைவரும் பகிர்ந்து கொண்டனர். ஒவ்வொரு கூட்டமும், ஒவ்வோர் இனக்குழுவாக உருவெடுத்தது. அந்த இனக்குழுவுக்கு ரத்த உறவே அடித்தளமானது. 'ஒவ்வொருவரும் அனைவருக்குமாக, அனைவரும் ஒவ்வொரு வருக்குமாக' என்னும் வாழ்க்கை முறையே ஒழுக்கமானது. குழுமணங்களும் பொதுமைப் பாலுறவும் நியதியாயின. பெற்றவள் பெருமைப்படுத்தப்பட்டாள். தாய் வழிச் சமுதாயம் மலர்ந்தது. இப்போதைய கற்பு குறித்த பிரக்ஞை அப்போது இல்லை.

கால ஓட்டத்தில் நாகரிக மாற்றம் நிகழ்ந்தது. வேட்டைச் சமுதாயம் வேளாண்மைச் சமுதாயமானது. கால்நடை வளர்ப்பில் ஆடவர் ஆதிக்கம் தலையெடுத்தது. ஆதிப்பொதுவுடைமைச் சமுதாயம் அழிந்து, தனிச்சொத்துரிமைச் சமுதாயம் தோன்றியது. தான் உழைத்துச் சேர்த்த சொத்து, தனக்கு மட்டுமே உடன்பட்டவளுக்குத் தன்னால் பிறக்கும் பிள்ளைகளுக்குப் போய்ச் சேர வேண்டும் என்ற உடைமை விருப்பம், ஆணின் உள்ளத்தில் உருவெடுத்தபோதுதான் கற்பு என்ற கருத்தேற்றத்துக்குக் கால் முளைத்தது. பெண்ணை அடிமைப்படுத்திய நிலவுடைமைச் சமுதாயத்தின் சிந்தனையில் விளைந்ததுதான் கற்பென்னும் சித்தாந்தம்.

தனிச்சொத்துரிமை வேரூன்றிய சமுதாயத்தில் தலைவன், தலைவி, மகன், மகள் ஒன்று சேர்ந்து வாழும் குடும்பம் பிறந்தது.

திருமணம் என்ற வாழ்க்கை ஒப்பந்தம் தனி மனித வாழ்வில் தவிர்க்க முடியாத இடத்தைப் பெற்றது. ஒருத்தி ஒருவனோடு மட்டுமே காலம் முழுவதும் உடன்பட்டு வாழ்வதே பெண் கற்பு என்று வரையறுக்கப் பட்டதே தவிர, ஒருவன் ஒருத்தியோடு மட்டும் உயிராகக் கலந்து இறுதி வரை வாழ்வதே ஆண் கற்பு என்று எந்த வரையறையும் தொன்று தொட்டு இன்று வரை கடைப்பிடிக்கப்படவில்லை !

ஓர் ஆடவன் பல பெண்களுடன் வாழ்ந்ததைப் போன்றே, ஒரு பெண் பல ஆண்களுடன் சேர்ந்து வாழ்ந்ததை மகாபாரதம் சொல்கிறது. துருபதனிடம் தர்மன், 'உடன் பிறந்த நாங்கள் ஐவரும் உங்கள் மகள் திரௌபதியை மணந்து வாழ விரும்புகிறோம்' என்று தெரிவித்ததும், அதிர்ச்சியுற்ற துருபதன், 'ஒரு பெண் பல ஆண்களை மணந்து வாழ்ந்ததை இதுவரை நான் கண்டதும் இல்லை, கேட்டதுமில்லை. ஒருத்தி பலருக்கு மனைவியாவது அதர்மமான பாவ காரியம். இதை என்னால் ஏற்க முடியாது' என்ற கோபத்துடன் மறுக்கிறான்.

'நீண்ட காலத்துக்கு முன் ஜடிலை என்பவள், ஏழு ஆண்களை மணந்து வாழ்ந்தாள். வார்ஷி என்பவள் ஒரே நேரத்தில், பத்து சகோதரர்களுடன் இல்லறத்தில் ஈடுபட்டாள். அதனால் நாங்கள் ஐவரும் திரௌபதியை மணப்பது தவறாகாது' என்று தன் பக்க நியாயத்தை நிறுவ முயல்கிறான் தர்மன். அப்போது வியாசர் குறுக்கிட்டு, 'மானிட மகளிர் ஒருவரை மணப்பதே நியதி. ஆனால், திரௌபதி இலக்குமியின் அம்சம். அவள் ஐவரை மணக்க வேண்டும் என்பது சிவன் விதித்த விதி. அதனால், தர்மன் சொல்வதை ஏற்கலாம். ஆனாலும், சாதாரண மனிதர்களுக்கு இது தர்மமாகாது' என்கிறார். அதன் பின் பாண்டவர் திரௌபதி திருமணம் நடந்ததாகப் பாரதம் சொல்கிறது.

'ஒருத்தி ஒருவனை மணந்து வாழ்வதே மானுட தர்மம்' என்று விளக்கிய வியாசர், ஒருவன் ஒருத்தியோடு மட்டுமே வாழ வேண்டும் என்று வேதம் சொன்னதாக விதி எழுதவில்லை. பெண் கற்புக் குறித்துப் பெருமையுடன் பேசும் தமிழர் சமுதாயமும், ஆண் கற்பைப் பற்றி அதிகம் சொல்லவில்லை. தொல்காப்பியர் காலத்திலேயே, ஒருவன் பல பெண்களுடன் தொடர்பு கொண்டு இருந்தது பற்றிய குறிப்புக் காணக்கிடைக்கிறது.

சிலப்பதிகாரத்தில், தன் கணவன் குற்றம் அற்றவன் என்று நிரூபிப்பதற்குக் கையில் சிலம்புடன், கண்ணில் நீர் வழிய, அரசவைக்குள் நுழைந்து, பாண்டியனிடம் தன் வரலாற்றை விளக்கும்

கண்ணகி, ஏழு கற்புடை மகளிரைப் பற்றிக் குறிப்பிடுகிறாள். கணவன் பிரிந்து சென்றதும், தன் முக அழகில் மாற்றான் ஈடுபாடு கொள்ளக் கூடாது என்பதற்காகத் தன் முகத்தைக் குரங்கு முகமாக மாற்றிக் கொண்டவளையும், கணவன் வரும் நாள் வரை கல்லுருவில் காத்துக் கிடந்தவளைப் பற்றியும் பெருமிதமாகப் பேசுகிறாள் கண்ணகி. ஆனால், மனைவியின் பிரிவில், அவளையே நினைத்து உருகி, அவளுக்காகவே கரைந்து போன கற்பார்ந்த ஆண்களின் பட்டியலை இளங்கோ அடிகளால் வெளிப்படுத்த முடியவில்லை.

'கற்புள்ள பெண் என்பதற்கு அடையாளம், அவளைப் பார்க்கும் எந்த ஆணின் நெஞ்சிலும் தவறான எண்ணம் தோன்றாமல் இருப்பதுதான்' என்கிறது மணிமேகலை. மருதி என்ற பார்ப்பனப் பெண் நீராடிய நிலையில், இளவரசன் சுகந்தன் அவளைக் காமத்துடன் நோக்குகிறான். 'மண்ணுக்கு மழை வளம் தரும் பெண்ணாக இருந்தால், அவள் பிறர் நெஞ்சு புகமாட்டாள். ஓர் ஆணின் இதயத்தில் காமம் கிளர்ந்து எழுவதற்கு நான் காரணம் ஆனதால், என் கற்பு களங்கம் உடையது' என்று மருதி மனம் கலங்குவதாக மணிமேகலை கூறுகிறது. பெண்ணுக்குக் கற்பின் பெயரால் இழைக்கப்பட்ட பெருங்கொடுமை அல்லவா இது !

பல பரத்தையருடன் ஓர் ஆண்மகன் உறவு கொண்டதை எதிர்த்து இலக்கியம் படைத்த முதல் மனிதர் திருவள்ளுவர். ஆணுக்கும் பெண்ணுக்கும் கற்பைப் பொதுவாக்கிப் பார்த்த முதல் புரட்சியாளர் அவர். அன்றைய ஆணாதிக்க சமூகத்தின் செல்வாக்கில், கணவனை மட்டுமே கடவுளாக வணங்கிய 'தெய்வக்கற்பு' பற்றி அவர் பேசினாலும், அடுத்தவர் மனைவியை நாடும் மனிதர்களை நல்வழிப்படுத்த 'பிறனில் விழையாமை'யும் பரத்தையர் தொடர்பைக் கட்டறுக்க 'வரைவின் மகளிரை'யும் அழுத்தமாக எடுத்துரைத்தார்.

ஆணின் கற்பை அறத்துடன் நெறிப்படுத்த அவர்தான் முதலில் முயன்றார். அவருடைய வழியில் பின்பு வந்து சேர்ந்தான் கம்பன். மருத நிலத்தையும், மக்கள் வாழ்க்கை முறையையும் 14 பாடல்களில் விரிவாக விளக்கும் கம்பன், மறந்தும் மருதத் திணைக்குரிய பரத்தையர் பற்றி ஒரு வார்த்தையும் பேசவில்லை.

ஆணுக்கும், பெண்ணுக்கும் புலனடக்கம் போதிப்பதற்காகவே இராமாயணத்தைத் தமிழில் தந்தவன் அவன். அறுபதாயிரம் மனைவியரோடு வாழ்ந்த தசரதனுக்கு மகனாகப் பிறந்த இராமன், ஒருத்திக்கு ஒருவனாக வாழ்ந்த சிறப்பைச் சொல்ல எழுத்தாணியைக்

கையில் எடுத்தான் கம்பன். அசோகவனத்தில் ஆற்ற முடியாத சோகத்தைச் சுமந்தபடி அமர்ந்திருந்த சீதையின் நெஞ்சில் நினை வலைகள் மோதுகின்றன. இராமனின் நற்பண்புகளை மனத்தில் அசை போடுகிறாள். கைபிடித்த மணநாளில், 'இந்த இப்பிறவிக்கு இரு மாதரைச் சிந்தையாலும் தொடேன்' என்று அவன் அளித்த சொல் வரத்தை அவள் சிந்தித்துச் சிலிர்க்கிறாள். ஒருவனும், ஒருத்தியுமாக வாழும் வாழ்க்கையை வலியுறுத்தவே கம்பன் காப்பியம் படைத்தான். ஆண் கற்பை அழுத்தமாகப் பேசியவன் அவன்.

'கற்பு நிலை என்று சொல்ல வந்தால், இருபாலார்க்கும் அதைப் பொதுவில் வைப்போம்' என்ற பாரதி, பெண்ணுக்குக் கற்பு விலங்கு பூட்டி, ஆண் மக்கள் பிற மாதருடன் நெஞ்சழிந்து நிற்பதைக் காணச் சகியாமல், கடுமையாக விமர்சனம் செய்தான். 'அட பரம மூடர்களே! ஆண் பிள்ளைகள் தவறினால், ஸ்திரீகள் எப்படிப் பதிவிரதைகளாக இருக்க முடியும்? கற்பனைக் கணக்குப் போட்டுப் பார்ப்போம். ஒரு பட்டணத்தில் லக்ஷம் ஜனங்கள். 50 ஆயிரம் பேர் ஆண்கள். 50 ஆயிரம் பேர் பெண்கள். அதில் 45 ஆயிரம் பேர் பரஸ்திரீகளை இச்சிப்பதாக வைத்துக் கொள்வோம். அதிலிருந்து குறைந்தபக்ஷம் 45 ஆயிரம் ஸ்திரீகள் பரபுருஷரின் இச்சைக்கிடமாக வேண்டும். இந்தக் கூட்டத்தில் 20 ஆயிரம் புருஷர்கள் தம் இச்சையை ஓரளவு நிறைவேற்றியதாக வைத்துக் கொள்வோம். எனவே குறைந்த பக்ஷம் 20 ஆயிரம் ஸ்தீரிகள் விபசாரிகளாக இருத்தல் அவசியமாகிறது.

அந்த 20 ஆயிரம் விபசாரிகளில் 100 பேர்தான் வீதியில் தள்ளப்படுகிறார்கள். மற்றவர்கள் புருஷனுடன் வாழ்கிறார்கள். ஆனால், அவளுடைய புருஷனுக்கு மாத்திரம் அவள் விபசாரி என்பது நிச்சயமாகத் தெரியாது. தெரிந்தும் பாதகமில்லை என்று சும்மா இருப்பாருமுளர். சீச்சீ! மானங்கெட்ட தோல்வி ஆண்களுக்கு' என்கிறான் பாரதி.

ஆணாதிக்கம், சுய நலமாகப் பெண்ணுக்குக் கற்பெனும் விலங்கு பூட்டி அடிமைப்படுத்தியது. அந்த விலங்கை உடைத் தெறியும் வேகத்தில், ஒழுக்கச் சிதைவுக்கு வாசற்கதவைத் திறந்து வைக்கப் பெண்ணியம் பேசுவோர் முனைதல் தகாது. 'பெண்கள் திருமணமாகும்போது கன்னித்தன்மை களையாமல் இருக்க வேண்டும் என்று சமூகம் எதிர்பார்க்கக் கூடாது' என்பது பெண்ணியத்தின் போர்க் குரல் அன்று. அது பண்பாட்டுப் பேரழிவின் பிரகடனம். வரம்பற்ற காமத்துக்கு வரவேற்பு விழா நடத்தும் திட்டம். இந்த மலிவான சீரழிவுச் சதிவலையில் இளைஞர் கூட்டம் சரிந்து விழலாகாது.

பெண்ணுரிமைக்காக வாழ்நாள் முழுவதும் போராடிய பெருமகன் தந்தை பெரியார் கூட, தாம் எழுதிய புரட்சிகரமான 'பெண் ஏன் அடிமையானாள்?' என்ற நூலில், மணமாவதற்கு முன்பே பெண் கன்னித்தன்மையை இழக்கலாம் என்று பரிந்துரைக்கவில்லை.

திருத்தப்படாத நிலம் களை மண்டிக் கிடக்கும். தடுக்கப்படாத வெள்ளம் தாளாத துன்பம் தரும். இரண்டு கரைகளுக்குள் அடங்கி நடக்கும் ஆறுதான் நாட்டுக்கு நன்மை பயக்கும். இறுக்கமாகக் கட்டப்பட்ட வீணையின் நரம்புகளில் இருந்துதான் இனிமையான இசை பிறக்கும். சுயகட்டுப்பாடுதான் நாகரிகத்தின் நல் அடையாளம். புலனடக்கம் கொண்ட ஆணும், பெண்ணும் உருவாக்கும் குடும்பத்தில்தான் இன்பமும், அமைதியும் இறுதி வரை நிலைக்கும். கணவனும், மனைவியும் ஒருவருக்கொருவர் உண்மையாக வாழ்வதற்குப் பெயர்தான் கற்பு.

கற்பு பெண்ணுக்கு மட்டும் என்பது, ஆணாதிக்கம் பூட்டிய அடிமை விலங்கு. அதையே ஆணுக்கும் சேர்த்து வரையறுத்து, ஒழுக்கப் பயிர் காக்கும் வேலியாக்குவோம் !

'கற்பு என்பது சொல் தவறாமை; அதாவது நாணயம், சத்தியம், கெடாமை, உறுதிப்பாடு, ஒப்பந்தத்திற்கு விரோதமில்லாமல் நடந்து கொள்ளுதல் என்கிற கருத்துக் கொண்டதாக உள்ளது. கற்பு என்பது பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்பட்டது என்பதற்குத் தக்க ஆதாரம் கிடையாது. ஆனால், அழிவில்லாதது, உறுதியுடையது எனப் பொருள் கொள்ளலாம். அழிவில்லாதது என்பதற்குக் கெடாதது, மாசற்றது என்று கொள்ளலாம். மாசற்றது அதாவது சுத்தம் என்கிற வார்த்தை ஆங்கிலத்தில் உள்ள Chastity என்ற கருத்தில்தான் உள்ளது. Chastity என்ற வார்த்தையின்படிப் பார்த்தால் அது Virginity என்பதே பொருளாகும். எனவே அதை அந்தப் பொருளின்படிப் பார்த்தால் ஆண், பெண் என இருபாலருக்கும் உரியதே. பொதுவாக மனித சமூகத்திற்கே உரியது. ஆனால் இடையில் பதிவிரதை எனப் பொருள் கொள்ளப் பட்டதால், பதியைத் தவிர வேறு யாரையும் கருதாதவள் என்கிற தவறான நிலைக்கு ஆளாக்கப்பட்டு அடிமையாக்கப்பட்டாள். ஆகவே, காமத்தையும் அன்பையும் குறிக்கும் காலங்களில் சமத்துவப் பொருள் கொண்ட நாயகன் நாயகி, தலைவன் தலைவி என்கிற வார்த்தைகளை உபயோகித்து விட்டுக் கற்பு என்கிற நிலைக்கு வரும்போது, அதைப் பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்படுத்தி, பதியாகிய எசமானனையே கடவுளாகக் கொள்ள வேண்டும் என்ற கருத்து திணிக்கப்பட்டது.

ஆண்கள் கற்புடையவர்கள் எனக் குறிக்க நமது மொழிகளில் தனி வார்த்தைகளே காணாமல் மறைக்கப்பட்டுக் கிடப்பதற்குக் காரணம், ஆண்களின் ஆதிக்கமே தவிர வேறில்லை. கற்புக்காகக் கணவனின் மிருகச் செயலையும் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்ற கொடுமை ஒழிய வேண்டும்.

இன்று நம்முடைய சமுதாயத்தில் இருக்கும் குறைகளுக்கும் அவமானத்துக்கும் நம்முடைய நம்பிக்கைகளே பெரிதும் காரணமாகும். அதுவும் நம் தாய்மார்களிடம் இவ்வளவு இருக்குமானால் பிறகு அவர்கள் வயிற்றில் பிறக்கும் பிள்ளைகளின் நிலை என்னவாகும்? எந்தச் சீர்திருத்தமும் பெண்களிடமிருந்து வந்தால் அதற்கு வலிவு அதிகம் என்றார்.

# பெண்ணியம்

## மகளிர் கருத்தரங்கு

அண்மைக்காலங்களில் பெண் விடுதலை குறித்துக் குறிப்பிடத்தக்க விழிப்புணர்ச்சி ஏற்பட்டுள்ளது. ஆனால் அறுபது அல்லது எழுபது ஆண்டுகளுக்கு முன்னர் இவ்வளவு பெரிய விழிப்புணர்ச்சி ஏற்பட்டிருக்க நியாயமில்லை. அத்தகைய நிலையில் ஈரோடு நகரத்தில் உண்மை நாடுவோர் சங்கத்தின் சார்பில் பெண்மணிகளே பொறுப்பேற்று, இலட்சுமி அம்மையார் தலைமை ஏற்று நடத்தி வைத்த, சடங்குகள் பற்றியதொரு கருத்தரங்குச் செய்திகளை 20.05.1929 ஆம் நாளிட்ட திராவிடன் இதழ் மிக விரிவாக வெளியிட்டது. சின்னத்தாயம்மாள் என்பவரின் சுவையான பேச்சில் சுயமரியாதை மணத்தின் அருமை உணர்த்தப்பட்டுள்ளது.

'நம் நாட்டில் கல்யாணம் என்பதன் பெயரால் சில சடங்குகள் உண்டு. அதுசமயம் பலரிடத்திலும் இரவல் வாங்கிய நகைகளைக் கொண்டு பெண்களை அலங்கரிக்கின்றனர். இவ்வாறு பாரத்தைச் சுமக்கச் சொல்லிப் பெண்களைக் கஷ்டப்படுத்தக்கூடாது. போதாக் குறைக்கு, பாரமான புடவைகளையும் கட்டிவிட்டு விடுகிறார்கள். இவ்வளவும் போதாதென்று மூச்சுவிட வழியில்லாது முக்காட்டுப் புடவை என்று ஒன்று போர்த்தித் திணற வைக்கிறார்கள். இது கொடுமையான காரியம். இதற்கெல்லாம் மணப்பெண் ஏதாவது சொன்னால் ஜனங்கள் இந்தப் பெண் அதிகப் பிரசங்கி; பெரியோர் வார்த்தைகளை நிராகரிக்கின்றது என்று பழி சுமத்துகின்றனர். மனையில் யக்ஞம் வளர்த்துப் புகையுண்டாக்கி அதிகக் கஷ்டத்துக் குள்ளாக்குகிறார்கள். இம்மாதிரியான சடங்குகளை ஒழித்து, தாய்மார்கள் அனைவரும் தங்கள் பிள்ளைகளுக்கு ஒரு கஷ்டமில்லாத செல வில்லாத - சுயமரியாதைத் திருமணம் செய்து வைக்கும்படி வணக்கத்துடன் கேட்டுக் கொள்ளுகிறேன்'.

மக்களுக்கு முற்போக்கை அளிக்கவல்ல சுயமரியாதைத் திருமணம் செய்ய வேண்டும். பெண்களாகிய நாமும் முன்னின்று பிரச்சாரம் செய்ய வேண்டும். இவ்வாறு வற்புறுத்தியவர் பங்காரு அம்மாள் என்பவராவர்.

'பெரியாரின் தங்கையார் கண்ணம்மாள் தனது உரையில் 'சீமந்தம் வளைகாப்பு என்பதன் பெயரால் கர்ப்பப் பெண்ணைப் பத்து நாள்கள் கஷ்டப்படுத்தும் கொடுமையைச் சொல்லி முடியாது. கர்ப்பஸ்திரிக்குப் பூ முடித்தல் என்பதன் பெயரால் ஊரிலுள்ள பூக்களையெல்லாம் சூட்டி, மேற்படி வாசனையால் தலைவலி வரச் செய்து விடுகிறார்கள். மேலும் பளுவான புடவைகள் கட்டி 2-3 மணி நேரம் மணை இருத்தல் என்று சொல்லியிருக்க வைக்கிறார்கள். இம்மாதிரியான கஷ்டமான அநாகரிகமான சடங்குகள் எதற்கு என்று கேட்டால் இவைகளெல்லாம் பெரியோர்கள் செய்தது; அதனால் அப்படியே நடக்க வேண்டும் என்று பதில் சொல்லிவிடுகிறார்கள். தற்கால நாகரிகத்திற்கு ஒவ்வாத சடங்குகளை ஒழிக்க வேண்டும். அனாவசியமானதும், அர்த்தமற்றதுமான சடங்குகளை ஒழித்து அதற்குச் செலவிடும் பணத்தை ஏழை மக்களுக்குப் படிப்பூட்டினால் மிகவும் நன்மையானதும் பயனுள்ளதானதுமாக இருக்கும்" என்று குறிப்பிட்டுள்ளார்.

பாப்பா அம்மாள் என்பவரின் உரை சென்ற நூற்றாண்டின் முற்பகுதியில் அடக்கப்பட்டுக் கிடந்த பெண்ணினத்தின் பாழ் நிலையைப் படம்பிடித்துக் காட்டுவதாகும், 'நாம் பெண்களைப் பொதுவாக உலக நடை இன்னதென்பதை அறியவொட்டாமல் நாசம் செய்கிறோம். பால்யத்தில் அவர்கள் வெளியே வந்து உலகானுபவத்தைச் சரியாக அறிந்து கொள்ளுமுன்னர் அவர்கள் பக்குவநிலை அடைந்து விடுகின்றார்கள். உடனே பெற்றோர்கள் அப்பெண்களை வீட்டிலேயே உட்கார அடைத்து வைத்து விடுகின்றார்கள். இவ்வாறு செய்வதாலும் பெண்கள் பெரும்பான்மையோர் நோய்வாய்ப்படுகின்றனர். எல்லா வற்றிற்கும் காரணம் வழக்கங்களே. எனவே சடங்குகளின் பெயரால் பெண் மக்கள் முன்னேற்றமடைவதை நாம் தடை செய்வது கூடாது. ஆங்கிலேயர்கள் வந்த பிறகு தான் நாம் ஏதாவது முன்னேற்றம் அடைந்திருக்கிறோம்".

இவ்வாறு முக்கால் நூற்றாண்டுக்கு முன்பே தன்மான இயக்கத்தின்பால் பற்றுக் கொண்ட மகளிர் எத்துணை முனைப்பாகவும் துணிவாகவும் தெளிவாகவும் கருத்துப் பரப்பல் செய்திருக்கின்றார்கள் என்பதும் பெரியாரின் மேற்பார்வையில் நடந்த திராவிட இதழ் அக்கருத்துக்களுக்கு எவ்வளவு முதன்மை தந்தது என்பதும் விளங்கும்.

## ஆண்களின் கற்பு நிலை

தமிழ்நாட்டில் பெண் கல்வி என்பது பெரியாரின் கொடை, பெண்களைப் பொறுத்தவரை ஆடவருக்குப் பணிப் பெண்ணாகவும் பிள்ளை பெறும் எந்திரங்களாகவும் காமக்கழிப்புக்குரிய

கருவிகளாகவும் மட்டுமே இருந்த நிலைமையைத்தான் நமது குமுக வரலாறு எடுத்துக் காட்டுகிறது.

பலதாரமணம் குற்றமாகக் கருதப்பெறவில்லை. மாறாகப் பெருமைக்குரிய ஒன்றாக ஏறு போல் பீடு நடை போடுவதற்குரிய கூறாக அக்காலத்தில் ஆண்களால் கருதப்பட்டது. இரண்டு அல்லது மூன்று மனைவியரோடு மட்டும் அவர்கள் நின்று விடுவதில்லை. அதன் நீட்சியாகக் காமக் கிழத்தியர் உறவும் மறுக்கப்படவில்லை.

இலக்கியங்கள் இதனை இழிவாகப் பார்க்கலாம். ஆனால் நடைமுறையில் வெறுத்தொதுக்கத்தக்க பண்புக்கூறாக இது பார்க்கப்படவில்லை. வன்மையாகக் கண்டிக்கப்படவுமில்லை. இதன் மறுபக்கத்தில் பெண் கற்பு மிகவும் வலியுறுத்தப்பட்டது. கற்பு தவறிய பெண்கள் தண்டிக்கப்பட்டார்கள்; கொடுமைப்படுத்தப் பட்டார்கள். இதைக் கண்டு சீறி எழுந்தான் பாரதி.

கற்பு நிலை என்று பேச வந்தால் இரு கட்சிக்கும் அதனைப் பொதுவில் வைப்போம் என்று இருபாலருக்கும் இருக்க வேண்டிய சமச்சீர் நிலையைப் பாரதி சுட்டிக் காட்டினான்.

## அரசு அலுவலகங்களில் பெண் கொடுமை

இன்றைய பொருளாதார நிலையில் குடும்பம் நடத்துவதற்குக் கணவனும் மனைவியும் சேர்ந்து சம்பாதிக்க வேண்டிய கட்டாயம் எழுந்துள்ளது. எனவே பெண்கள் வேலைக்குச் செல்ல வேண்டிய நிலைமை தவிர்க்க இயலாததாகி விட்டது. அவ்வாறு வேலைக்குச் செல்லும் பெண்கள் பல்வேறு விதமான கொடுமைகளுக்கும் கேலி கிண்டல்களுக்கும் ஆளாகுகின்றனர். இந்நிலைமையை உணர்ந்து இதனை மாற்றுவதற்கு இந்திய உச்சநீதிமன்றம் ஓர் ஆணையைப் பிறப்பித்தது. அதன்படி எல்லா அரசு அலுவலகங்களிலும் பெண் கொடுமையைத் தடுப்பதற்கான கண்காணிப்புக் குழுக்கள் ஏற்படுத்தப்பட வேண்டும் என உத்தரவிட்டது. அதனைத் தொடர்ந்து இந்திய அரசும், மாநில அரசும் இதற்கான ஆணையைப் பிறப்பித்துள்ளன. இக்கண்காணிப்புக் குழுவின் தலைவராகப் பெண் அலுவலர் ஒருவர் இருக்க வேண்டும். இக்குழுவில் பெரும்பான்மை உறுப்பினர்கள் பெண்களாகவே இருக்க வேண்டும்.

கேலிவதை, பாலியல் கொடுமைக்கு உள்ளாகும் பெண்கள் இக்குழுவிடம் தங்கள் புகார் மனுவை அளிக்கலாம். அதனைப் பெற்று, தவறிழைக்கும் ஆண் பணியாளர்களை இக்குழு விசாரித்து, உரிய நடவடிக்கை எடுப்பதற்கு வழிவகை செய்யவும், குற்றம் உறுதி செய்யப்பட்டால் உரிய விதிகளின் கீழ் ஒழுங்கு நடவடிக்கை மேற்கொள்ளப்படும். இக்கண்காணிப்புக் குழுக்கள் குற்றமனங்

கொண்ட ஆண்களிடையே ஓர் அச்சவுணர்வை ஏற்படுத்தக் கூடியன என்று சொன்னாலும் பெரிய அளவில் உணரத்தக்க மாற்றங்கள் இதனால் ஏற்படும் என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

உயர் பதவி வகிக்கும் ஆண் அதிகாரிகள் தங்கள் அதிகாரத்தைப் பயன்படுத்திப் பெண்களை அச்சுறுத்தித் தம் வயப்படுத்தும் நிலை இன்னும் முற்றாகக் களையப்படவில்லை என்றே சொல்ல வேண்டும்.

## இந்திய மனநிலையில் அமெரிக்கப் பெண்மணியா?

ஒரு பெண்ணுக்கு நேரக் கூடிய மிகப் பெரிய கொடுமை என்று சொல்லப்படுவது கணவன் செய்கிற நம்பிக்கை துரோகம். இன்னொரு பெண்ணுடன் கணவன் தொடர்பு வைத்திருக்கிறான் என்று தெரிந்தால் எந்தப் பெண்ணுக்கும் முதலில் தோன்றக் கூடிய உணர்ச்சி, அவமானம் பிறகு கோபம், ஆற்றாமை, துக்கம் எல்லாம் வரும். அதுவும் ஒரு தேசத்தின் முதல் பெண்மணியாக அமெரிக்க அதிபரின் மனைவியாக இருந்த ஒருவருக்கு அப்படி ஒரு அவமானம் நேர்ந்தது. உலகமே சிரித்த போது எப்படி இருந்திருக்கும்? அந்த மாதிரி ஒரு சந்தர்ப்பம் வந்தால் சராசரிப் பெண்கள் என்ன முடிவு எடுப்பார்கள்?

கணவனைப் பிரியலாம். நீதிமன்றத்துக்கு இழுக்கலாம். துணிந்து தனியே போய் வாழலாம் அல்லது வாழ்நாள் முழுவதும் மூக்கைச் சிந்திக்கொண்டு மூலையில் உட்கார்ந்து கொண்டும் இருக்கலாம்.

ஆனால் மோனிகா லெவின்ஸ்கி, பவுலா ஜோன்ஸ் வழக்கு ஆகியவற்றில் தம் கணவருக்கு ஏற்பட்ட அவமானத்தை, நெருக்கடியைப் புரிந்து கொண்ட கிளிண்டனின் மனைவியான ஹிலாரி தன் கணவர் மீது வெறுப்போ கோபமோ அடையவில்லை. இந்த மாதிரி நெருக்கடியான சிக்கலான நேரத்தில் மிகவும் பொறுப்புடனும், பொறுமையுடனும், பகுத்தறிவுடனும் நடந்து கொண்டு பெண்ணின் பெருந்தக்க யாவுள எனும் வள்ளுவத்திற்கு இலக்கணமானார். பெண்ணை மாண்புக்குரிய என மன்பதைக்கு உணர்த்தினார்.

## திருமணப் பொருத்தமா? காதல் பொருத்தமா?

வளர்ந்துவரும் சமுதாயத்தின் அடையாளமாகச் செல்பேசியில் அண்மை நாளாக வந்து கொண்டிருக்கிற ஒரு விளம்பரத்தைப் பாருங்கள். 'காதல் பொருத்தம் அறிய எஸ்.எம்.எஸ்.குறு வரி சேவை அனுப்புங்கள்' என்கிறது அந்த விளம்பரம். யாருக்கு எஸ்.எம்.எஸ். அனுப்ப வேண்டுமாம்? ஒருவர் யாரைக் காதலிக்கிறாரோ அவருக்கு அல்ல அல்லது அவரது தோழர்களுக்குக் கூட அல்ல. அது ஒரு எண்

சோதிட நிலையமாம். அந்த நிறுவனத்திற்கு எஸ்.எம்.எஸ். மூலம் உங்கள் பெயர், பிறந்தநாள் போன்ற தகவல்களை அனுப்ப வேண்டும். நீங்கள் யாரை உங்களின் காதல் துணையாகத் தேர்வு செய்ய விரும்புகிறீர்களோ அவரது பெயர், பிறந்த நாள் போன்ற விவரங் களையும் அனுப்ப வேண்டும். அந்தத் தகவல்கள் எண் கணித (நியூமராலஜி) அடிப்படையில் அலசப்பட்டு, உங்களுக்கு அவர் பொருத்தமானவர்தானா என்று தெரிவிப்பார்களாம். நீங்கள் அதற்கேற்ப முடிவு செய்து காதலைத் தொடரலாம் அல்லது அடுத்த ஆளைப் பார்க்கலாம். காதல் கை கூடுகிறதோ இல்லையோ மேற்படி நிலையத்திற்கும் உங்களது செல்பேசி நிறுவனத்திற்கும் வரும்படி கூடும்.

பாசம், பண்பு, அழகு, பழகும் தன்மை, நெருக்கமானசூழல் ஒத்த உணர்வுகள், மாறுபட்ட விருப்பங்களிலும் மதிக்கும் உடன்பாடு, உடல் குறைகளைக் கண்டு கொள்ளாத நேசம், படிப்பு, வேலை இப்படியாய்க் காதல் பொருத்தத்திற்கான பல அடிப்படைகளே உள்ளன. உங்களை வெல்லும் ஆற்றல் பெற்ற காதலுக்கான பொருத்தத்தை எண் சோதிடத்தால் கணித்துச் சொல்லக் கிளம்பியிருக்கிறார்கள் என்றால் பகுத்தறிவை மட்டுமல்ல உயரிய காதலையும் அல்லவா அவமானப்படுத்துகிறார்கள்.

காதல் உணர்வைக் காதல் கவிதைகளாகக் கொச்சைப் படுத்துகிற இது போன்ற எண் கணியங்களுக்கு அடிமையாகிப் போகிற படித்த பெண்களை இன்றைய நாளில் பரவலாகக் காண முடிகிறது. பெண் கல்வி வளர்ந்திருக்கிறதெனினும் மூடப்பழக்கங்களிலிருந்து பெண்களை விலக்கிவைக்க அது கற்றுக் கொடுக்கவில்லையென்றே கருத வேண்டியுள்ளது.

திருமணம் - உலக சித்தாந்தம்

தந்தை பெரியார் திருமணம் பற்றிப் பேசியதாவது -

பாமர மக்கள் கலியாணம் என்பதை வீட்டு வேலைக்கு ஒரு பெண் ஆள் (வேலைக்காரியை) வைப்பது போலவே கருதுகிறார்கள்.

புருஷன் அப்படியே கருதுகிறான். புருஷன் வீட்டாரும் அதுபோலவே தங்கள் வீட்டுவேலைக்கு ஒரு பெண் கொண்டு வருவதாகவே கருதுகிறார்கள். இது மாத்திரமா? பெண் வீட்டாரும் தங்கள் பெண்ணை வீட்டு வேலைக்கே தயார் செய்து விற்றுக் கொடுக்கிறார்கள்.

பெண்ணும் தான் ஒரு வீட்டுக்கு வேலை செய்யப் போவதாகவே கருதுகிறாள். பெண்ணின் கடமையும் சமையல் செய்வது, பாத்திரம் விளக்குவது, வீடு வாசல் கூட்டி மெழுகிச் சுத்தம்

செய்வது இவைகளோடு பிள்ளைகளையும் பெற்றுக் கொண்டு அவர்களை வளர்ப்பது ஆகியவைகளையே முக்கியமாய்க் கொண்டதாக இருக்கிறது. மதமும் சாஸ்திரங்களும் கலியாணத்தைப் பற்றி என்ன சொல்லுகின்றன என்று பார்த்தால் பெண் சுதந்திர மற்றவள்; அவள் காவலில் வைக்கப்பட வேண்டியவள் என்பது ஒரு புறமிருக்க, கலியாணம் செய்வதானது மனிதன் 'புத்' என்னும் நரகத்திற்குப் போகாமல் இருப்பதற்கு ஆகவும், பெற்றோர்களுக்கு இறுதிக்கடன், திதி முதலியவைகள் செய்ய ஒரு பிள்ளையைப் பெறவும் கலியாணம் செய்து கொள்ள வேண்டியது அவசியம் என்று கூறுகின்றன.

ஆகவே கலியாணம் என்பது ஒரு ஆணும் பெண்ணும் கூடி இயற்கை இன்பத்தை நுகரவும், ஒருவரை ஒருவர் காதலித்து ஒருவருக்கொருவர் வாழ்க்கைப் போட்டியில் ஏற்படும் சிரமத்திற்கு இளைப்பாறவும், ஆயாசம் தீர்த்துக் கொள்ளவுமே ஆணுக்கு ஒரு பெண்ணும் பெண்ணுக்கு ஒரு ஆணும் வேண்டியிருக்கிறது என்பதைப் பெரும்பாலோர் சிந்திப்பதேயில்லை.

கலியாணப் பொருத்தம் பார்க்க வேண்டிய பொறுப்பு மணமக்களுக்கே உண்டு என்பதையும் கருதுவதே இல்லை. கலியாணம், மணமக்கள் எத்தனத்தினாலேயே ஆக வேண்டியது என்பதையும் ஒப்புக் கொள்ளுவதே இல்லை.

கலியாணம் என்றால், 'அது தெய்வீகமானது', 'தெய்வ எத்தனமானது', 'தெய்வமே பொருத்தி வைக்க வேண்டியது' என்று கருதுவதும் கலியாணத்தில் எப்படிப்பட்ட பொருத்தம் பொருந்தாப் பொருத்தமானாலும், அதனால் எப்படிப்பட்ட துன்பமும் தொல்லையும் அனுபவமானதும் கண்கூடான பிரத்தியேக அனுபவமாய் இருந்தாலும் அதைத் தெய்வ எத்தனம், தெய்வ சித்தம் என்கின்ற பெயரால் அனுபவிப்பதும், அப்படி நினைத்துத் திருப்தியடைவதுமாய் இருக்கின்றன.

கலியாணம் என்றால் சுதந்திர வாழ்க்கை - சமத்துவ வாழ்க்கை என்று இருக்க வேண்டுமே ஒழிய அடிமை வாழ்க்கை மேல் கீழ் வாழ்க்கை என்று இருக்கக் கூடாது என்பதே எனது ஆசை. நாம் ஆயிரம் சமாதானம் சொன்னாலும், பெண்ணை அடிமையாகவே - ஒருவனுடைய சொத்தாகவே கருதுகிறோம் என்பதோடு, பெண்ணை நமது போகப் பொருளாகவே கருதுகிறோம். அதற்கு ஒரு தனி உயிரும் மனமும் இருப்பதாகக் கருதுவதில்லை. இது இன்று உலக சித்தாந்தமாய் இருக்கிறது.

குறிப்பிட்ட ஒரு தனிப்பட்ட மனிதனுக்குப் 'பெண்சாதி'யாய் இல்லாத - கல்யாணமில்லாத பெண்ணுக்கு மாத்திரம் சுதந்திரம் என்பது

சிறிதாவது உண்டு என்று சொல்லலாமே தவிர, மற்றபடி கலியாண மான பெண்கள் என்றால் அடிமைகளாகவே மதிக்கப்படுகிறார்கள். பெண் அடிமை என்பது மனித சமூக அழிவு என்பதை நாம் நினைக்காததாலேயே, வளர்ச்சி பெறவேண்டிய மனித சமூகம் பகுத்தறிவு இருந்தும் தேய்ந்து கொண்டே வருகின்றது. தாயின் குணம், தாயின் தன்மை பெரிதும் பிள்ளைக்குப் பிறவியிலேயே வருகின்றது என்பது யார் மறுக்க முடியும்- மக்களின் குணம் 100க்கு 90 பாகம் சரீர அமைப்பே பெரும்பாலும் காரணமாகும். ஆகையால், இந்த அடிமைப் பெண் சுதந்திர உணர்ச்சியுள்ள பிள்ளையைப் பெற முடியும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? கல்வி, அறிவு, செல்வம் ஆகியவை இல்லாத தாயானவள் நல்ல தாராள புத்தியும் சமத்துவ ஞானமும் திருப்தியான மனமும் உள்ள பிள்ளைகளை எப்படிப் பெறமுடியும் என்பதை உணர்ந்தோமேயானால், மனித சமூகம் சுதந்திரமாகக் கவலையற்று ஏன் வாழவில்லை என்பது தானாகவே விளங்கும் என்று கூறியுள்ளார்.

## திருமணம் ஏன்?

நிறுவனப்படுத்தப்பட்ட திருமண முறையைத் தந்தை பெரியார் தருக்க அடிப்படையில் ஆராய்ந்து வினாக் கணை தொடுக்கிறார்.

"இந்த உலகத்தில் சொத்தைப் பற்றியும், மேல் உலகம் என்பதில் மோட்சம் என்பதைப் பற்றியும் இலட்சியம் இல்லாவிட்டால் திருமணம் என்பதாக வாழ்க்கை ஒப்பந்தம் என்பதாகக் கூட எதுவும் தேவையில்லை. நாம் தேடிய சொத்துக்கு நாம் பெற்ற பிள்ளை வாரிசாக இருக்க வேண்டும் என்பதே திருமணத்தின் முக்கிய நோக்கமாகும். அதற்கும் அந்தந்தச் சமுதாயப்படி சொத்தை அனுபவிக்கச் சிலருக்கு ஆண் பிள்ளை வேண்டும். சிலருக்குப் பெண் பிள்ளை வேண்டும். தேவதாசிகளும், மருமக்கள் தாயம் உள்ளவர்களும் தங்கள் சொத்துக்குப் பின் சந்ததியாக உரிமைக்குப் பெண் குழந்தைகள் பெறவும், இல்லாமல் போனால் பெண் குழந்தையைத் தத்துக்கு எடுக்கவும் ஆசைப்படு கிறார்கள். மற்றவர்கள் - நம் போன்றவர்கள் - ஆண் குழந்தை பெறவும், பிறக்காவிட்டால் ஆண் குழந்தைகளைத் தத்து எடுத்துக் கொள்ளவும் செய்கிறோம். இதற்காகவேதான் திருமணம் பெரிதும் சடங்காக, ஒப்பந்தமாக, பதிவாக, சட்டத்திற்குள் அடங்கியதாகச் செய்ய வேண்டியிருக்கிறது. இந்த நிலை மாறிவிட்டால் திருமணம் என்கின்ற வார்த்தையே மறந்து போகும்.

அதனால் தான் நான் இந்த முறைகூட முடிந்த முடிவல்ல என்று அடிக்கடி சொல்லி வருகிறேன். இனி 40, 50 வருடங்களுக்குப் பின்பு (1944) அதாவது இந்தச் சொத்து முறைகள் மாறி, பொது உடைமை முறை வந்து தாண்டவமாடும்போது - இந்த முறைகூட இருக்காது

என்பதோடு, இதை ஒரு மூடநம்பிக்கை - காட்டுமிராண்டிக் கால முறை என்று சொல்ல வேண்டிவரும் என்பதோடல்லாமல், இன்று உங்களில் பலரால் 'புரட்சிக்காரன்' என்று கூறப்படுகின்ற என்னை ஒரு மூடநம்பிக்கைக்காரனாக "வைதிகப் பிடுங்கல் இராமசாமி என்று ஒருவன் இருந்தான்" என்று என்னை உங்கள் பிள்ளைகள், பேரன்மார்கள் சொல்லும்படியான நிலைகூட வந்துவிடும் என்று நான் சொல்லுவதுண்டு.

ஆகையால் திருமணத்திற்கு ஒரு கட்டுப்பாடுதான் இருக்க வேண்டியிருக்கிறதே ஒழிய, முறை ஒன்றும் இன்று தேவை இல்லை. கட்டுப்பாடே வேண்டாத காலம் வருமென்றால் முறை வேண்டிய காலம் எதற்காக வேண்டி இருக்கும்? ஒரு சமயம் கட்டுப்பாடு வேண்டியதில்லை என்கின்ற தன்மை நடைபெறக் கட்டுப்பாடும் முறையும் வேண்டியதாக இருக்கலாம்.

இன்று நாமாகிய திராவிடர்களுக்கு நம்மைப் பற்றிய சரித்திரமும் நம் நாட்டைப் பற்றிய தன்மைகளும்கூடத் தெரியவில்லை யானால், நம் திருமணத்திற்கு என்ன முறை சிறந்தது என்று எப்படிக் கண்டுபிடிக்க முடியாதோ? அப்படித்தான் ஒன்று இருந்திருந்தாலும் அதைப் பற்றி இன்று பேசுவது எப்படி அறிவுடைமையும் பொருத்த முடையதும் ஆகும்" என்று கூறியுள்ளார்.

## பெண்களுக்கு அதிகாரம் அளித்தலும் அதில் காந்தியின் பங்களிப்பும்

டாக்டர் சவிதா சிங் என்ற அறிஞர் கருத்துப்படி, இருபதாம் நூற்றாண்டு மக்கள் நூற்றாண்டு எனப் புகழப்படுகிறது. ஆனால் இம்மக்கள் கூட்டத்தில் பெண்கள் எங்கே இருக்கிறார்கள்? இருபத்தியோராம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாம் நின்று கொண்டிருக்கும்போது சற்றுப் பின்நோக்கிப் பார்த்தால் அதிகாரப் படுத்துவதிலும் சமூக, பொருளியல் மேம்பாட்டிலும் பெண்கள் உண்மையில் எங்கு இருக்கிறார்கள் என்ற கேள்வி எழுகிறது. ஒரு நூற்றாண்டுக் கால முன்னேற்றத்தைப் பார்த்தால் இந்திய சமூக அமைப்பு மதிப்புகள் அனைத்தும் ஆண்களை மய்யமாக வைத்து இயங்குவதும், பெண்கள் இந்த மதிப்புகளை எதிர்ப்பின்றி ஏற்றுக் கொள்ளுவதும் தெரியவரும்.

மேலும் இந்தியாவில் கடந்த இருபது ஆண்டுகளில் பெண்ணியம் வெறும் பாடமாகவும் கொள்கையாகவும் தான் இருந்து வருகிறது. அடிமட்டத்தில் உள்ள பெண்களின் பெரும் கவலைகளைக் காட்டிலும் உலகளவில் பெண்களின் சிக்கல்களைப் பற்றி அதிகமாகக் கவலைப்படுகிறது என்பதையே தீவிரப் பெண்ணியம் நமக்குக்

காட்டியுள்ளது. இந்தியாவில் உள்ள பெண்ணியவாதிகள் தங்களுக் கென்று உருவாக்கிக் கொள்ளும் திட்டம் கண்டிப்பாக ஐரோப்பாவை மையமாகக் கொண்டதாக இருத்தலாகாது. அதன் அடிப்படையானது, அமைப்பு எனக் கூறப்படுவதை உடைப்பதாகவும் செயல்பாட்டை நோக்கிச் செல்வதாகவும் இருக்க வேண்டும். பெண்களின் வாழ்வுக்கான போராட்டத்தை ஆய்வு செய்யவும் மதிப்பிடவும் இந்த அணுகுமுறை தேவை. பெண்களுக்கு எதிராக அதிகரித்து வரும் வன்முறைகள் பெண்களைத் தலைமையாகக் கொண்ட குடும்பங்கள் அதிகரித்து வருவதால் உண்டாகும் பொருளாதார, சமுதாய மற்றும் அரசியல் தாக்கங்கள் ஆகியவற்றினால் ஏற்படும் மாற்றங்களை ஆராய ஒரு முழுமையான செயல்பாட்டுத் திட்டம் தேவைப்படுகிறது.

பெண்களைக் கேவலப்படுத்தி அவர்களின் திறமைகளைக் குறைவாக மதிப்பிடும் செயல்களும் தொடருகின்றன. பெண்களுக்கு உரிமை வழங்கப்படுகிறது என்பதற்கு அடையாளமாகச் சில சலுகைகள் தரப்படுவது வழக்கமாகிவிட்டது. இருந்தாலும் ஆண் - பெண் வேறுபடுத்துதலுக்கு எதிராக 20 ஆம் நூற்றாண்டில் மிகக் கடுமையாகப் போராடிய பின்னும்கூடத் தேவையான சலுகைகள் சிறிதளவும் பெண்களுக்குக் கிடைக்கவில்லை.

மகாத்மா காந்தி பெண்களை அதிகாரப்படுத்துதல் என்ற இலக்கை அடைவதற்கான பாதையை நமக்குச் சுட்டிக் காட்டியுள்ளார். காந்தி என்றென்றும் பெண்ணினத்திற்குச் சேவை செய்ய வேண்டும் என்ற உணர்வு கொண்டவர்.

"பெண்கள் தங்கள் சங்கிலிகளை அணிகலன்கள் என்று தவறாக எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதில் இருந்து பெண்களை விடுவிக்கத் தீவிர எண்ணங்களைக் கொண்டுள்ளேன். கடவுள் விரும்பினால், என் ஆராய்ச்சிகள் முடிவடைந்த பின் ஒரு நாள் என் முடிவுகளில் சிலவற்றைப் பொதுமக்களின் முன் வைப்பேன் என நம்புகிறேன். பெண்களின் உண்மையான முன்னேற்றம் அவர்களின் சொந்த முயற்சியின் மூலம்தான் வரமுடியும் என்பதை என் அனுபவம் எனக்கு உறுதிப்படுத்தியுள்ளது" என்கிறார் காந்தி.

சென்ற நூற்றாண்டின் தொடக்கத்தில் எழுதப்பெற்ற காந்தியடிகளின் சத்திய சோதனை எனும் தன் வரலாற்று நூல் தலைசிறந்த நூல்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. இந்நூல் பெண்களின்பால் இயற்கையான நட்புணர்ச்சியை உணர்த்துகிறது. இந்த நட்புணர்ச்சி ஆண்-பெண் உறவுகளில் உள்ள நெகிழ்ச்சியற்ற தன்மையைக் குறைப்பதாக உள்ளது. அவர் தனது எழுத்துக்கள் மூலம், தனிப்பட்ட வாழ்க்கையை உலகுக்கு வெளிப்படையாகத் தெரிவித்தார். அறப்போராட்டம் என்ற கருத்து தன்னிடம்

வளர்ந்ததற்குத் தன் தாய், மனைவி, தென் ஆப்பிரிக்கக் கருப்பினப் பெண்கள் ஆகியோரின் தாக்கங்கள் காரணம் என்பதையும் ஒப்புக் கொண்டுள்ளார். இந்தியப் பெண்களுக்குப் புத்துயிர் கொடுக்க மகாத்மா காந்தி முயற்சிகள் மேற்கொண்டார்.

"நாம் கவனிக்க வேண்டிய செய்தி நம் பெண்களின் சீர் குலைவை நம் ஆண்களுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது தான். தனக்குத் தானே எடுத்துக் கொண்ட இந்த வேலையில் ஆண் எப்போதும் நீதியுடனும் பிரித்தறிந்து பார்க்கும் நோக்குடனும் நடந்து கொண்டதில்லை" என்று காந்தி கூறுகிறார்.

ஒரு நேரிய சமுதாயத்தைத் தோற்றுவிக்கத் தேவையானது பெண்களுக்குச் சமத்துவம் என்பதில் காந்தி கவனமாக இருந்தார். 19ஆம் நூற்றாண்டினர் பெண்களின் சிக்கல்களைப் புரிந்து கொண்டதைவிட ஒரு படி அதிகமாகவே பெண்களின் உரிமைக்காகக் காந்தி குரல் கொடுத்துள்ளார். பாரம்பரியக் குடும்ப அமைப்பில் பெண்களின் நிலை என்ற சிக்கலைப் பற்றித்தான் 19ஆம் நூற்றாண்டினர் அறிந்திருந்தனர். அடிப்படை ஏற்றத்தாழ்வு பற்றியும் சமுதாய, பொருளாதார, அரசியலில் பெண்களுக்கு இழைக்கப்படும் அநீதியைப் பற்றியும் காந்திக்கு முன் சமுதாயச் சீர்திருத்தவாதிகளில் ஒரு சிலர் மட்டுமே கவலை தெரிவித்தனர்.

பொருளாதார அதிகாரம் அல்லது அரசியல் அதிகாரம் ஆகியவற்றைப் பற்றிப் பேசும் முன் நம் பெண்களுக்கு மனத்தெம்பு தன்னம்பிக்கை, பல நூற்றாண்டுகளாக இருந்து வரும் அடிமைத் தனத்தினால் உண்டானஅடிமை மனப்பான்மையில் இருந்து விடுபடத் தன்மான உணர்ச்சி ஆகியவை தேவை என்பதைப் புரிந்து கொண்டார். பெண்களின் நிலைமை மாற வேண்டுமென்றால் கல்வி, சமுதாயச் சீர்திருத்தம், ஆகியவை இம் மண்ணின் அறிவுக்கு ஏற்றதாக இருக்க வேண்டும் என்பதைக் கண்டு கொண்டார்.

## பெண்களைத் துணைவர்கள் என்றார்

காந்தியின் மனதில் பெண்கள் பற்றிய சிந்தனைகள் எங்கிருந்து எந்தச் சூழ்நிலையில் உருப் பெற்றன என்பதை ஆராய்ந்து பார்த்தால் அவரிடம் படிப்படியாக மாறுதல்கள் ஏற்பட்டதைக் காணலாம். உள்சூழல், புறச்சூழல் இடையேயான செயல்பாடுகளும் இவை அவர் மீது ஏற்படுத்திய தாக்கத்தையும் புரிந்து கொள்வது மிக அவசியமாகும். 1898 ஆம் ஆண்டு காந்தி முதன் முதலில் பெண்களைத் துணைவர்கள் என்று கூறினார்.

அவர் 1906ஆம் ஆண்டு பிரம்மச்சரிய விரதம் பூண்டது தன் மனைவி உட்பட்ட அனைத்துப் பெண்களையும் புரிந்து கொள்ளவும்

அவர்களுக்கு மதிப்புக் கொடுக்கவும் எடுத்துக் கொண்ட அடுத்த முயற்சி எனக்கருதலாம். காந்தியை மிகவும் கவர்ந்த நிகழ்வு இங்கிலாந்து நாட்டுப் பெண்கள் நடத்திய பெண்களுக்கு வாக்குரிமை கோரும் போராட்டம் ஆகும்.

தெருக்களில் ஏற்பட்ட அவமானங்களையும் காவல் துறையின் கொடுமைகளையும் மனத்தெம்புடன் எதிர்த்துப் போராடிய இப் பெண்களின் அச்சமின்மையால் கவரப்பட்ட காந்தி வருங்காலச் சந்ததியினர் இதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இவர்கள் செயலைத் தான் பாராட்டியதை "தி இந்தியன் ஒப்பீனியன்" என்ற நூலில் பதிவு செய்துள்ளார்.

"இரண்டு செய்திகள் தற்போது இங்கிலாந்தில் பெரிதும் விவாதிக்கப்படுகின்றன. அது பெண்களுக்கு வாக்குரிமை வேண்டும் என்ற போராட்டம் தான். இந்தக் கோரிக்கையை அரசு ஏற்றுக் கொள்ளவில்லை". காந்தி எப்போதும் பிறரிடம் இருந்து கற்றுக் கொண்டே இருந்தார். ஆனால் இந்தப் படிப்பினைகளைச் செயல் படுத்தும் போது அதற்கு அவரே சொந்தமாகப் பெயரிட்டார். தற்காலத் தேவைக்கேற்ப அவற்றை மாற்றினார். அவர் தனது பொது வாழ்க்கையின் தொடக்கத்திலேயே "நான் இவ்வுலகத்திற்குக் கற்றுக் கொடுக்க ஒன்றுமில்லை, உண்மையும் அறவழியும் மலைகளைப் போலப் பழமையானவை" என்று உலகத்திற்கு அறிவித்தார்.

உள்ளுணர்வை வெளிக்காட்டுவது முகச்சுளிப்புடன் பார்க்கப் பட்ட காலத்தில் காந்தி தனது உள்ளுணர்வை மக்களிடம் வெளிப்படுத்தினார். மிகச் சிறுவயதில் கஸ்தூரிபாய், காந்தியின் வாழ்க்கையில் தாக்கம் விளைவிக்கக் கூடியவராய் நுழைந்தார். கஸ்தூரிபாய் என்ற இளம் பெண் தனக்கென்று சொந்தக் கருத்துகள் கொண்ட பெண்ணாக உருவெடுத்தமையைக் காந்தியின் தன் வரலாற்று நூலில் காணலாம். பிடிவாதமிக்க கணவனை அவரது இயல்புகளைச் சகித்துக் கொண்டு அவரிடம் அன்பு செலுத்தி அவரைக் கவனித்துக் கொண்டு அவரின் வியப்பையும் பாராட்டு தலையும் சம்பாதித்தவர் கஸ்தூரிபாய். எப்போது? இவர்கள் இருவரின் தனிப்பட்ட எண்ணங்கள், பொது எண்ணங்கள் ஒன்றாகி இவர்களை அன்பின் உச்சிக்கு எடுத்துச் சென்றது என்பது இருவருக்கும் தெரியாது.

## பெண்களை மதிக்கும் பண்பு

தன் தாயும் மனைவியும் 19ஆம் நூற்றாண்டுக் குசராத்தியக் குடும்பங்களின் சுரண்டல்களை அமைதியாக எப்படி எதிர்த்து நின்றார்கள் என்பதைக் காந்தி கவனிக்கத் தவறவில்லை. அவர்களிடம் இருந்து அறப்போராட்ட முறையைக் கற்றுக் கொண்டார். ஆங்கிலேயரின் சுரண்டல்களை எதிர்த்துப் போராடும் போது

அவர்களின் வலிமையைப் பணிய வைக்க இந்த ஆயுதத்தை நன்றாகப் பயன்படுத்தினார். அவர்தன் வாழ்க்கையில் பின்னாளில் வெளிப் படுத்திய பெண்களை மதிக்கும் பண்பும் அவர்களின் சிக்கல்களைப் புரிந்து கொள்ளும் தன்மையும் அவர் தன் தாயிடமும், மனைவியிடமும் இருந்து பெற்றது தான்.

கஸ்தூரிபாய், காந்தி இருவரும் இறுதியாகச் சிறை வைக்கப் பட்டது பூனாவில் உள்ள ஆகாகான் அரண்மனையில்தான். இங்குக் காந்தி கஸ்தூரிபாய் அவர்களுக்கு ஆசிரியராகவும் அன்புக் கணவராகவும் இருந்தார். மனைவி கஸ்தூரிபாய்க்குத் தாம் கடமைப் பட்டிருப்பதை அவர் ஒப்புக் கொண்டார். காந்திக்கு, பெண் என்றும் மனைவி என்றும் விளங்கிய கஸ்தூரிபாய் போகப் போக ஓர் இந்தியப் பெண்ணாகத் தெரிந்தார்.

## விடுதலைப் போராட்டத்தில் பெண்கள்

நம்நாட்டு அறிஞர்கள் கூட காந்தியின் பெண்ணுரிமை பற்றியும் சமூகப் புரட்சியில் அவருடைய பங்களிப்புப் பற்றியும் மிகச் சிறிய அளவில் தான் அறிந்துள்ளனர். இந்தச் சிறிய அளவிலும் பெண்ணியவாதிகளின் விருப்பு வெறுப்புகளும் ஊகங்களும் தான் அதிகம் வெளிப்படுகின்றன. இந்தியப் பெண்கள் இயக்கத்துக்குக் காந்தியின் பங்களிப்பு என்பதில் அவர்களிடையே கருத்து வேறுபாடு கள் உள்ளன. காந்தி, தேசியப் போராட்டத்தின் தலைமையை ஏற்றுக் கொண்ட நாளிலிருந்து பெண்கள் உரிமைக்காக அவர் குரல் கொடுத்தது கேள்விக்குள்ளாக்கப்படுகிறது. பெண்கள் வீடுகளில் இருந்து வெளி வந்து இந்திய விடுதலைப் போராட்டத்தில் பங்கேற்க வேண்டும் என்று அவர் விடுத்த வேண்டுகோள் வெற்றி பெற்றுப் பெண்களைப் பொது வாழ்வில் பெருமளவில் பங்கேற்கும்படி ஊக்குவித்தது. இந்த வேண்டுகோள் சர்ச்சைக்குரியதாய்க் காட்டப் படுகிறது.

காந்தி, இந்தியப் பெண்கள் விழிப்புணர்விற்காக ஆற்றிய பங்கைப் பற்றிய இந்தத் தவறான புரிதல்களுக்குக் காரணம் இவற்றைப் பற்றிய ஆவணங்களும் எழுத்துகளும் மிகக் குறைவாக இருப்பதுதான். கிடைக்கப்பெறும் தன் வரலாறு, வாழ்க்கை வரலாறு நூல்களும் தத்தம் கருத்துக்களை மையமாக வைத்தே எழுதப்பட்டிருக்கின்றன.

## காந்தியின் அணுகுமுறை

பெண்களைப் பற்றிய காந்தியின் அணுகுமுறை அவரது மனிதத்தன்மையின் ஒரு பகுதியாக அல்லது ஓர் ஆணின் விட்டுக் கொடுத்தல் உடன்பாடாகத்தான் காட்டப்படுகிறது. அவரது தலை முறையில் பரவலாக நிலவிய பெண்களின் பங்களிப்புப் பற்றிக்

குறுகிய எண்ணங்களை உண்மையில் அவை போக்குபவைகளாக இல்லை; பெண்களைப் பற்றிய காந்தியின் கருத்துக்களும், அவை புரட்சிக்கு ஆற்றிய பங்களிப்பு ஆகியவை உண்மையான ஆய்வுகளின் அடிப்படையில் கூறப்படவில்லை. முயற்சியை என்றும் கைவிட வில்லை.

காந்தியை ஆய்வு செய்த ஆய்வாளர்களில் பெரும்பாலானோர் அவர் அரசியல் செயல்திட்டங்களை வகுப்பதில் தலைசிறந்தவர் என்பதை ஒப்புக் கொண்டுள்ளனர். பெண்களுக்குப் புத்துயிர் கொடுப்பது என்பது அவரது செயல் திட்டத்தில் ஒரு முக்கிய அம்சமாகும். எனவே அவர் தனது திட்டங்களில் பெண்களுக்காகத் தனிக்கவனம் செலுத்தினார்.

காந்தியின் முயற்சி அவரைப் பெண்களுக்கு மிகவும் வேண்டியவராக ஆக்கியது. இந்தியப் பெண்களை அவருடைய வேண்டுகோளுக்குச் சிறப்பான முறையில் செயல்பட வைத்தது. இவர்களில் பல பெண்கள் விடுதலைப் போராட்டத்தில் ஈடுபடத் தங்களுடைய குடும்பங்களை, பெற்றோர்களை, கணவர்களை எதிர்க்க வேண்டியிருந்தது.

## வன்முறையற்ற போராட்டம் பெண்களை ஈர்த்தது

'புத்தருக்குப் பிறகு காந்தியைப் போல வேறெந்தத் தனி மனிதனும் கோடிக்கணக்கான மக்களைக் கட்டுப்படுத்தவும் அவர்களின் எதிர்காலத்தை மாற்றியமைக்கவும் இல்லை' என்று கமலாதேவி சட்டோபாதியா எழுதினார். "இந்தியாவில் பெண்களின் விழிப்புணர்வுக்குப் பல காரணிகள் பங்களித்தன. ஆனால் வெள்ளையர்களுக்கு எதிரான தனது போராட்டத்தின் போது பெண்களுக்குக் காந்தி வன்முறையற்ற போராட்ட முறையை வகுத்தளித்தார். இதன் ஆற்றல்போல் வேறெந்தப் பங்களிப்பின் ஆற்றலும் இல்லை. அது நூற்றுக்கணக்கில் பெண்களை அவர்களின் பாதுகாப்பான இல்லங்களில் இருந்து வெளிக் கொண்டுவந்து எதிர்கொள்வதில் ஆண்களுக்குச் சமமாகப் பெண்களும் திறன் கொண்டவர்கள் என்பதை மெய்ப்பித்தது. ஆயுதம் இல்லாமல் எதிர்ப்பது ஆயுதத்துடன் போராடுவதைப் போலவே பயனளிப்பதுடன் மட்டுமல்லாமல் எதிர்ப்பவர்களையும் எதிர்க்கப்படுபவர்களையும் செயல்படுபவர்களாக மாற்றியது என்பதை உணர்த்தியது. எப்படி இருந்தாலும் இந்தியாவைக் காப்பது என்பதில் பெண்களுக்கு ஒரு நிச்சயமான இடத்தைக் கொடுத்துள்ளது" என்று இராஜகுமாரி அமிரித் கௌர் நம்பினார். காந்தி இந்த மாற்றங்களைக் கொண்டு வரவில்லையென்றால் நான் இன்றிருக்கும் நிலைமையில் இருந்திருக்க முடியாது என்று சொந்தத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பெண்கள் அமைப்பின் தலைவர் அலா ஆரபாட் கூறுகிறார்.

## சமையல், பரிமாறுதல், சுத்தப்படுத்துதல் வேலைகளை இருபாலருமே செய்தனர்

பெண்களின் சிறப்பான குணங்களுக்கு அவர் தெளிவான முக்கியத்துவம் கொடுத்தாலும் ஆண்களைப் பற்றியும் பெண்களைப் பற்றியும் பழமையான ஒரே மாதிரியான கருத்துகளை அவர் நம்பவில்லை. உண்மையில் காந்தி ஆண் பெண் குணங்களைப் பற்றியும் அதனால் சமூகத்தில் அவர்கள் பெற்றிருக்கும் இடத்தைப் பற்றியும் நிலவிய ஒரே வகையான பழங்காலக் கருத்துகளை உடைப்பதை வேலையாகக் கொண்டார். பெண்கள் உள்ளார்ந்த வலிமையையும் துணிவையும் வளர்த்துக் கொள்ளவும் தம்மை நிலை நிறுத்திக் கொள்ளவும் அவர்களுக்கு உதவினார். அவருடைய ஆசிரமத்தில் பழமையான வழக்கங்கள் அடிப்படையில் ஆண்களுக் கும் பெண்களுக்கும் வேலைகள் பிரித்துக் கொடுக்கவில்லை. நாள்தோறும் செய்ய வேண்டிய வேலைகளான சமையல், பரிமாறுதல், சுத்தம் செய்தல் ஆகியவற்றை இருபாலருமே செய்தனர்.

நாட்டு விடுதலை என்ற பெரும் இயக்கத்துடன் பெண்களின் சமூக விடுதலைக்கான போராட்டத்திலும் பெண்களை ஈடுபடுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன் காந்தி அவர்களை ஒத்துழையாமை இயக்கத்தில் பங்கேற்க வைக்க முயற்சிகள் எடுத்தார். ஆனால் அவர் கூறிய இந்த ஈடுபாடு நேரடியானது இல்லை. ஒரே இரவில் நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நிலவி வரும் மனநிலையை உடைத்தெறிவது எளிதல்ல என்பதை அவரைக் காட்டிலும் வேறெவரும் தெளிவாக அறிந்திருக்க முடியாது. படிப்படியான வளர்ச்சிப் பாதையின் மீதுதான் அவர் நம்பிக்கை வைத்திருந்தார். காந்தி மிகவும் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்துதான் சமூகத்தில் பெண்களின் பாரம்பரியப் பங்கை எதிர்த்து அறை கூவல் விடுக்காமலேயே பெண்களை இவ்வியக்கத்தின் முக்கியச் சமூக அடிப்படையாக ஆக்கினார்.

## உப்பு அறப்போரில் பெண்கள்

உப்பு அறப்போராட்டத்தின் போது பெண்களைப் பற்றிய காந்தியின் எண்ணங்கள் ஒரு பெரும் மாற்றத்திற்கு உட்பட்டன. இம்முறை காந்தி பொது வாழ்க்கை எனும் அரங்கினுள் பெண்களைக் கொண்டுவருவதற்கு ஏற்றவாறு அவர்களை நேரடியாக ஈடுபடச் செய்தார்.

உப்பு அறப்போராட்டத்தின் முதல் நாளான 1930-ஆம் ஆண்டு ஏப்பிரல் 6-ஆம் நாள் மாலை இப்போராட்டம் ஒரு மக்கள் இயக்கமாக மாறி நாடு முழுவதும் பரவியது.

"இந்தக் குறுகிய காலத்தில் பெண்கள் தங்களின் தன்னலமற்ற உழைப்பினால் சாதித்தது எனது எதிர்பார்ப்பை விட மிகவும் அதிகமானது" என்று காந்தி அனைவரிடமும் ஒப்புக்கொண்டு, "இந்நாட்டின் பெருமையை இந்தியப் பெண்கள் அதிகரித்துள்ளனர். அனைவருடைய பார்வையையும் அவர்கள் ஈர்த்தனர். உலகமே அவர்களுடைய நாட்டுப்பற்றை வியப்புடன் பார்க்கிறது. ஆனால் இந்தப் பாராட்டு அவர்களின் வருங்கால வேலைகளை மேலும் நம்பிக்கையுடனும் ஆர்வத்துடனும் அவர்கள் செய்ய ஊக்குவிக்க வேண்டும்" என்றும் கூறினார்.

## பெண்களின் பங்களிப்பு அங்கீகரிக்கப்படவில்லை

பெண்களிடம் இருந்து எதிர்பார்க்கப்படும் பெரும் தியாகங்களின் சிறப்புகளை அவர் தெரிந்தே வைத்திருந்தார். பொதுப் பொறுப்புகளைப் பெண்கள் ஏற்கக் கூடாது என்பதை நோக்கி வேண்டுமென்றே எடுக்கப்படும் கட்டாயப்படுத்தும் முயற்சிகளை அவர் எதிர்த்தார். 'முடிவெடுக்க முடியாதவளாய் ஆண்களைச் சார்ந்தவளாய்ப் பெண் இருப்பாளேயானால் அவள் எப்படி ஒவ்வொருவருக்கும் உணவு அளித்து, மெல்லிய தோள்களில் குடும்பத்தைச் சுமந்து வீட்டை நடத்துகிறாள்? என்று காந்தி கேட்டார். சமுதாயத்திற்கு அவள் ஆற்றிய பங்களிப்புகள் என்றுமே அங்கீகரிக்கப்படவில்லை என்பதுதான் காந்தியின் வருத்தம்.

ஆங்கிலேயர்களிடம் இருந்து மட்டுமல்ல நாமாக உண்டாக்கிக் கொண்ட பல அடிமைத்தனங்களில் இருந்தும் இந்தியாவை மீட்க மகாத்மாகாந்தி ஒரு இணையற்ற நாகரிகமான திட்டமிட்ட நடவடிக்கையை வழிநடத்தினார். மனித நேயத்திலும் வெளிப்படைத் தன்மையிலும் இந்தத் திட்டமிட்ட நடவடிக்கைக்கு இணையாக வரலாற்றில் வேறெதுவும் இல்லை. இவை பல இந்தியப் பெண்கள் அரசியல் அரங்கில் நுழைய ஊக்கப்படுத்தியது. ஆனால் இந்த அரசியல் போக்கு நெடுங்காலம் நீடிக்கவில்லை. அதன் பிறகு அரசியல் கொள்கையற்ற செயல்பாடுகள், அதிகாரத்திற்கான போட்டி என்று வேகமாகச் சீர்கெட்டுள்ளது.

மேன்மை உண்டாக்கக் கூடிய தேசிய இயக்கம் ஒன்றும் இப்போது இல்லை.. மகாத்மா காந்தியும் இல்லை. இந்தியப் பெண்கள் தங்கள் பாதையைத் தெரிவு செய்ய வேண்டிய நிலையிலேயே இன்னும் இருக்கிறார்கள். அறியாமையுடன் படிப்பறிவில்லாது, அடிபட்ட, காயம்பட்ட, சுரண்டப்பட்ட பெருங் கடலைப் போன்ற பெண்கள் கூட்டத்தினிடையே ஆண்களுக்குச் சமமான நிலையினை அடைந்த பெண்களும் இருக்கிறார்கள் . இந்த முரண்பாட்டை எப்படி விளக்குவது?

## காந்தியின் ஊக்குவிக்கும் தலைமை

காந்தியின் உயர்ந்த ஊக்குவிக்கும் தலைமை ஆயிரக் கணக்கான பெண்களை அவர்களுடைய வீட்டின் நாலு சுவரைத் தாண்டி வருமாறு ஊக்கப்படுத்தியது. அவருக்குப் பிறகு, நிலைக்கக் கூடிய தலைமை இல்லாததால், பெண்களுக்குச் சம உரிமைகளும் சம நிலையும் கொண்ட அவரது தன்னாட்சிக்கான போராட்டத்திற்கு உந்துதல் இல்லாமல் போய்விட்டது. அவருக்குப் பிறகு அவரது இடத்தை நிறைவு செய்ய யாரும் இல்லை. பெண்கள் மறுபடியும் பின் நிலைக்குத் தள்ளப்பட்டனர். காந்திக்குப் பிறகு, தந்தை பெரியார், திரு.வி.க. முதலான மிகச் சிலரே பெண்கள் ஒதுக்கப் படுவதைக் கவனத்தில் எடுத்துக் கொண்டனர். பெண்களுக்குப் புதிய, மேற்பட்ட வாய்ப்புகளை உண்டாக்கும் துணைத் திட்டங்கள் இல்லை. அவர்களை ஒருமுகப்படுத்தும் திட்டங்களும் இல்லை. மனத்தளவிலும் உடலளவிலும் அணியப்படுத்துதலும் பயிற்சியும் பெண்களுக்குத் தேவைப்படுகின்றன. சமுதாயத்தின் அனைத்துத் தரப்பினராலும் அனைத்து நிலைகளிலும் அவர்களுக்கு ஒரு துணை புரியும்சூழல் கொடுக்கப்பட்டால்தான் இந்த ஏற்பாடுகள் நிகழமுடியும். துணை புரியும்சூழல் என்பது ஆண் - பெண் சிக்கலை உணர்ந்திருப்பது தான்.

## பெண் அரசியல்வாதிகள் குறைவு

ஒரு நூற்றாண்டுக் கால வாக்குரிமைக்குப் பிறகும் பெண்கள் வாக்களிப்போர் எண்ணிக்கையில் பாதியளவு இருந்தாலும், பொதுவாகப் பெண் அரசியல்வாதிகளின் எண்ணிக்கை ஏமாற்றம் தரக்கூடிய அளவு குறைவாக இருப்பினும் தற்போதைய நிலைமை சற்று மாறி உள்ளது. அண்மைக் காலமாக, பெண்கள் அதிக எண்ணிக்கையில் அரசியலில் ஈடுபட்டு அரசுப் பதவிகளும் பெற்றுச் சிறப்பாகவே செயல்படத் தொடங்கி உள்ளனர். அண்மையில் தமிழ் நாட்டில் நடைபெற்ற உள்ளாட்சித் தேர்தல்களே இதற்குச் சான்றாகும். ஆயிரக்கணக்கில் பெண்கள் உள்ளாட்சி அமைப்புகளில் பொறுப்புகளை ஏற்றுக் கொண்டுள்ளனர். இது வரவேற்கத் தக்க ஒரு மாற்றமாகும்.

## பெண்ணடிமையால் சமுதாயத்துக்கு உண்டாகும் இழப்பு

இல்லங்களைத் தவிர்த்து வேறிடங்களில் பெண்களுக்கு வாய்ப்புகள் தர மறுக்கப்படுகின்றன. பெண் என்று அவர்களின் மீது மோசமான ஒரு அடிமைத்தனம் திணிக்கப்படுகிறது. பெண்களைப் பொது அரங்கிற்கு வெளியிலேயே வைத்திருக்க வேண்டும் என்ற விருப்பத்தினால் பெண்களுக்கு எதிராகத் தொடரும் இந்த ஒருதலைப்பட்ட விருப்பு வெறுப்பினால் சமுதாயத்திற்கு இழப்பு உண்டாகிறது. நமது சமுதாயம் குழந்தை பெறுவதும் மனித இனத்தைக்

கவனிப்பதும் பெண்களிடம் மட்டுமே ஒப்படைக்கப்பட்ட பணி என்பதைப் போல எண்ணிக் கொண்டு இருக்கிறது. பெண்களின் முதன்மையான வேலை இல்லங்களை உருவாக்குதல்தான் எனத் தொடர்ந்து வலியுறுத்தப்படுகிறது. மேலும் அனைத்துச் சமுதாயக் கட்டமைப்புகளும் ஆண்களுக்கான அளவுகோல்களைக் கொண்டு தான் இயங்கியுள்ளன.

## ஆண்-பெண் சமநிலைக்குப் புதிய அமைப்பு தேவை

நிதி நிலைக் கட்டாயங்கள் சமூக மதிப்புகளின் கீழும் பெருளாதாரம் அரசியலின் கீழும் இயங்காத வரையில், பெண்களின் தனிப்பட்ட, கூட்டு உரிமைகள் மதிக்கப்படாத வரையில் புதிய உலகப் பொருளாதார அமைப்பைப் பற்றிய பேச்செல்லாம் வெறும் பிதற்றலாகவே இருக்கும். இந்தப் புதிய அமைப்பு புதிய மக்களாட்சி நிறுவனங்களின் மீது உண்டாக்கப்பட வேண்டும். இது பன்னாட்டுச் சமூகத்தின் அரசியல் அதிகாரத்தைச் சாராதிருக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக ஆண் பெண் சமநிலை என்பதைக் கொண்டு உருவாக்கப்பட வேண்டும். எனவே இப்போது தேவைப்படுவது இங்கும் அங்கும் ஒத்துப் போதல் அல்ல. அமைப்பை முழுமையாக மாற்றுவதே ஆகும்.

## உலகமயமாக்கலின் பாதிப்பு

உலகமயமாக்குதலின் தாக்கத்தால் பெண்களை விற்பது, வாங்குவது, விபச்சாரம், பெண் சிசுக் கொலை மற்றும் பெண் கருக்கலைத்தல் வரதட்சணைக் கொடுமை, வீட்டு வன் முறைகள், கொடுமைப்படுத்துதல், வரதட்சணைக் கொலை போன்றவை அதிகப்படுகின்றன. இதனால் ஏழைப்பெண்கள் மிகவும் பாதிக்கப் படுகிறார்கள். தற்போதைய வளர்ச்சியின் உண்மையான நிலையும் கண்கூடாகத் தெரியும் அறிகுறியும் என்னவென்றால் ஆண் பெண் குழந்தைகளின் பிறப்பு விகிதம் குறைந்துள்ளதுதான். மிகவும் கவலை தரக்கூடிய புள்ளி விவரங்கள் நமக்குக் கிடைக்கின்றன. ஒட்டுமொத்த ஆண் பெண் விகிதம் அதிகரித்திருக்கிறது. இருந்தாலும் இப்போது 1000 ஆண்களுக்கு 933 பெண்கள் இருக்கிறார்கள். 6 வயதுக்குட்பட்ட குழந்தைகளில் ஆண்-பெண் விகிதம் 1991-ஆம் ஆண்டு 1000 ஆண் குழந்தைகளுக்கு 945 பெண் குழந்தைகள் என்றிருந்தது. ஆனால் 2001-ஆம் ஆண்டு அது 927 எனக் குறைந்துவிட்டது.

## பாரதியும் பெண் விடுதலையும்

பெண்விடுதலை பற்றிய தெளிவான கருத்து பாரதிக்கு உண்டு. ஒருபுறம், பெண்ணினத்தை விழிப்புறச் செய்து கொண்டும் மறுபுறம் சமுதாயத்தின் மனப்போக்கினைத் திருத்திச்

செப்பமாக்குதலில் முனைந்தும் நின்றவன் அவன். குழந்தை மணத்தைத் தடைசெய்தல், விரும்பியவனை மணக்கும் உரிமையைப் பெண்ணுக்கு அளித்தல், மணமுறிவு-விதவை மறுமணம் ஆகியவற்றை ஆதரித்தல் போன்ற வற்றோடும் கூட,

"பிதுரார்ஜிதத்தில் பெண்குழந்தைகளுக்குச் சமபாகம் கொடுக்க வேண்டும். விவாகமே இல்லாமல், தனியாக இருந்து வியாபாரம், கைத்தொழில் முதலியவற்றால் கௌரவமாக ஜீவிக்க இடம் கொடுக்க வேண்டும்.

பெண்களுக்கு ஆண்களைப் போலவே உயர்தரக் கல்வியின் எல்லாக் கிளைகளிலும் பழக்கம் ஏற்படுத்த வேண்டும்.

தகுதியுடன் அவர்கள் அரசாட்சியில் எவ்வித உத்தியோகம் பெற விரும்பினாலும் அதைச் சட்டம் தடுக்கக்கூடாது.

தமிழருக்கு சுயராஜ்யம் கிடைத்தால் அப்போது பெண்களுக்கும் ராஜாங்க உரிமைகளிலே அவசியம் பங்கு கொடுக்க வேண்டும்" எனும் பாரதியின் கருத்துகள் பெண்ணிய நோக்கிலான பெண் விடுதலைக்குப் பெரிதும் அரணாக அமைந்துள்ளன. பெண்களுக்குக் கல்வி வேண்டும் தான். அதேசமயம் எவ்விதமான கல்வி தரப்பட வேண்டும்? என்றும் ஆரம்பப் பள்ளி ஆசிரியைகளாகவும் மருத்துவச் செவிலிகளாகவும், கொண்டான் குறிப்பறிந்து நடக்கக்கூடிய இல்லத் தலைவிகளாகவும், பெண்கள் விளங்குவதற்குத் போதுமான அளவு கல்வியைத் தந்தாலே போதுமானது என்றும் இருந்த சமுதாயச்சூழலில் பெண்களுக்கு உயர்கல்வி வேண்டும் என்று உறுதியாகச் சொன்னவன் பாரதி (ஒருவன்தான்)? மணம் செய்து கொள்ள விருப்பமில்லையானால் ஒரு பெண் தனித்துத் தன்காலில் நின்று வாழ முடியும், வாழ வேண்டும் என்று வகுத்துக் காட்டியவனும் அவன்தான். சொத்தில் பெண்ணுக்கும் சம உரிமை, கல்வி, வேலை வாய்ப்பு உரிமைகள் பற்றிய பாரதியின் கருத்துக்கள் பெண் விடுதலை குறித்த அவனது தெளிவுக்குத் தக்க சான்றுகளாம்.

## பெரியாரும் பெண் விடுதலையும்

பெண் விடுதலை வேண்டும் என மேடைகளில் பேசியும், குடியரசு ஆகிய நாளிதழ்களில் எழுதியும் வந்ததோடல்லாமல் அதனைச் செயல்வடிவாக்குவதற்கும் கடுமையாகப் போராடியவர் தந்தை பெரியார்.

"தகுதிக்கேற்ப விரும்பும் தெரிவு செய்யும் சுதந்திரத்தையும் பொருளாதாரச் சுதந்திரத்தையும் பெண்கள் பெற வேண்டும்.

மகப்பேறு தொடர்பான எந்தவொரு விஷயத்திலும் முடிவெடுக்கும் உரிமை பெண்களுக்கு உண்டு."

என்று தந்தை பெரியார் குறிப்பிடுகிறார்.

சுருங்கக்கூறின், ஆண்களைப் போன்று குடும்பநல, சமூக வாழ்வியல் உரிமைகளையும் சமூக மதிப்பையும் பெண்கள் அனுபவிப்பதுதான் பெண்ணிய நோக்கிலான பெண் விடுதலை ஆகும்.

இதனைப் பெற, சிதறிக் கிடக்கும் பெண்களை ஓர் அமைப்பின்கீழ் ஒன்று திரட்டிப் பெண்மைச் சக்தியினைக் கூட்டி யெடுத்துப் பேரியக்கமாக உருக்கொடுத்துப் போராடி வருகிறது பெண்ணியக்கம். பெண் விடுதலை என்பது பெண்களாலேயே பெறப்பட வேண்டிய ஒன்றாகும் என்பது இவ்வியக்கத்தின் அடிப்படைக் கருத்தாகும்.

பெண்ணியக்கக் கருத்துக்களினால் ஈர்க்கப்பெற்று, வாழ்வில் ஆண்களுக்கு நிகரான சமவாய்ப்புகளைப் பெண்களும் பெற்றாக வேண்டும் என நம்புகிறவராகவும், குடும்ப அமைப்பில் வழிவழி மரபாகப் பெண்கள் வகித்துவரும் பொறுப்புகளைப் பயன் மதிப்பிடுகிறவராகவும், பெண்களின் குடும்பப் பங்குகளுக்குக் குடும்பத்திலும் சமுதாயத்திலும் தகுந்த சிறப்பும் மதிப்பும் கிடைத்திட நல்லாதரவு தருபவராகவும் இருக்கிற ஆண் அல்லது பெண், பெண்ணியக் கோட்பாட்டாளராவார்.

அந்த வகையில் பாரதியும், பாவேந்தர் பாரதிதாசனும் அவருக்கு அரசியல் குருவாக அமைந்த ஈ.வெ.ரா. பெரியாரும் பெண்ணியக் கோட்பாட்டாளர்களே.

பெண் விடுதலை பற்றிய கனவுகள் பல கண்டவன் பாரதி. பெண்ணடிமை நீங்கவும் பெண் விடுதலை பெறவும் கருத்துகள் பல உரைத்தவர் பெரியார். பாரதியின் கனவுகளுக்கும் பெரியாரின் கருத்துகளுக்கும் தம் படைப்புகளில் உருவம் கொடுத்தவர் பாவேந்தர் பாரதிதாசன். பாரதி - பெரியார் ஆகியோரின் கருத்துகளால் தாக்கம் பெற்றவர் இவர்.

ஆடை அணிகலன், ஆசைக்கு வாசமலர் தேடுவதும், ஆடவர்க்குச் சேவித்திருப்பதுவும் அஞ்சுவதுமான பெண்கள் நிலையை அடியோடு மாற்றி அமைத்திடவென்றே பெண் பாத்திரங்களைப் படைத்தார் பாவேந்தர் என்றும், நம் பெண்கள் வெறும் போகப் பொருள்களாக ஆகக்கூடாது, அவர்கள் புது உலகம் சித்தரிக்க

வேண்டும் என்ற தந்தை பெரியாரின் கருத்தோட்டங்களுக்கு ஏற்பப் பாவேந்தர் தமது பெண் பாத்திரங்களைப் படைத்துள்ளார். தனிப்பாடல்கள், கதைப்பாடல்கள், நாடகம் என்ற பல்வேறு வடிவங்களிலும் பெண்ணுரிமைக்கும் பெண் விடுதலைக்கும் சிறப்பிடம் கொடுத்தவர் பாரதிதாசன். பாரதியாரைப் போல உரைநடையிலும் பெண் சமத்துவத்தைப் பாரதிதாசனும் வலியுறுத்தி யுள்ளார் என்றும் அறிஞர்கள் கூறும் கருத்துக்கள் பெண்ணிய நோக்கில் இன்று மீளாய்வுக்கு உரியன.

## பெண் பாத்திரங்கள்

இலக்கியப் படைப்பாளர்கள் தங்களின் படைப்புகளில் ஆண் பாத்திரங்களைச் சித்திரிப்பதற்கும் பெண் பாத்திரங்களைச் சித்திரிப்பதற்கும் இடையே பெருத்த வேறுபாடு உண்டு.

நல்லவர்கள், தீயவர்கள், உத்தமர்கள், ஊழல் பேர்வழிகள், இனிய பண்பினர், குரூர இயல்பினர், தத்துவவாதிகள், யதார்த்த வாதிகள் என்று வெவ்வேறு விதமான பண்புகள் கொண்டவராக ஆண் பாத்திரங்கள் உருவாக்கப்படுகின்றனர்.

பெண் பாத்திரங்களைப் படைக்கும் போது மட்டும் திருமணம் என்பதை அடிப்படை அளவையாகக் கொண்டு மணமாகாத இளம்பெண், மனைவி, தாய், விதவை என்ற நான்கு பிரிவுகளில் அடக்கிவிடுகின்றனர். இந்நான்கு பிரிவுகளைச் சார்ந்த ஒவ்வொரு பெண் பாத்திரத்திற்கும் என்று திட்டவட்டமான படிமம் உண்டு. பண்புகளும் இப்படிமத்தோடு பொருத்தும் வகையில் வரையறுக்கப் பட்டவைதாம். இந்நான்கு பிரிவுகளுக்குள்ளும் உள்ள ஓர் ஒற்றுமை கற்பு எனும் கோட்பாட்டின் கீழ் இவையாவும் கட்டுண்டு கிடப்பதேயாகும்.

பாவேந்தரது படைப்புகளும் இந்நிலைக்கு விதிவிலக்கல்ல.

கற்பு பற்றிய கோட்பாடு என்பது ஒரு பருப்பொருளின் மாசினைக் குறிப்பதாக இருந்து, பின்னர், கணவனுக்கு உண்மை யுள்ளவளாக நடந்து கொள்ளும் மனைவியின் ஒழுக்கம் என்பதாகவும், அவ்வொழுக்கமும் உடல் ஒழுக்கம் என்பதாகவும் இணைத்து நோக்கிய மனப்போக்கின் விளைவு ஆகும்.

ஒரு பெண்ணின் மதிப்பை - வாழ்வை - கற்பு எனும் அளவையால் சோதித்துப் பார்ப்பதையும், மயிர் நீப்பின் உயிர் வாழாக் கவரிமான் போல, சந்தர்ப்பசூழ்நிலை காரணமாகக் கற்பைப் பறிகொடுக்க நேர்ந்தபோதும் அப்பெண் உயிர்வாழ அருகதையற்றவள்

என விதிக்கும் மரபையும் பாரதியோ பெரியாரோ ஏற்றுக் கொள்ளவே இல்லை. அவ்வாறு கற்பு என்பது ஒழுக்கம் என்ற பொருளில் வலியுறுத்தப்படுமானால் அஃதை ஆணுக்கும் பெண்ணுக்கும் பொதுவானதாகவே கொள்ள வேண்டும் என்றனர்.

இக்கருத்தைப் பாவேந்தரும் தமது பாடல் ஒன்றில் வெளிப்படுத்தி உள்ளார்.

> " பெண்களிடம் கற்பை எதிர்பார்க்கும் ஆண்கள்
> பெண்களைக் கற்பழித்துத் திரியலாமோ?
> பெண்களுக்கும் ஆண்களுக்கும் கற்பு பொதுவன்றோ
> மாதர்கட்கொரு நீதியோ"

என உலகப் பெண்களை விளித்துப் பேசியுள்ளார்.
(பூம்புகார் பிரசுரம்: 1977:161 மற்றும் 162)

எனினும் பாவேந்தர் தமது படைப்புகளில் கற்பை உயிராகப் போற்றும் பெண் பாத்திரங்களையே படைத்துள்ளார்.

சமூகப் படிநிலை அமைப்பில் வசதி படைத்த நடுத்தரப் பிரிவு மக்களிடம்தான் கற்பு என்னும் கருத்து ஒரு 'கோட்பாடாக உருப்பெற்று, கட்டுப்பாடுகள் பலவற்றைப் பெண்களுக்கு மட்டுமே விதித்து வீட்டுடன் அவர்களை நிறுத்தி வைத்தது. சாதாரணப் பாட்டாளி மக்கள், ஏழை எளியவர், அன்றாடக் கூலிகளின் வாழ்வில் இவ்வளவு கடுமையான கட்டுப்பாடுகள் இல்லை. தமிழ்ச் சமுதாயத்தில் கற்பிழந்த அல்லது கற்பைப் பறிகொடுத்த பெண்ணொருத்தி உயிர் வாழவும் தகுதியற்றவள் ஆவாள். பெரும்பாலும் இப்பெண்கள் தங்களுக்குத் தாங்களே நெருப்பிட்டுக் கொளுத்திக் கொண்டு மடிகின்றனர். ஏனெனில் உடல் மாசினை எரித்துத் தூய்மையாக்க வல்லது நெருப்பு என்ற நம்பிக்கை காலம் காலமாக மரபில் ஊறிப்போயிருப்பதுதான்.

அயலான் நாட்டில் அந்நியன் வீட்டின் கீழ்மகன் ஒருவனால் வஞ்சகமாக நஞ்சிடப்பெற்று உணர்வு மயங்கிய நிலையில் தமிழ்மகள் சுப்பம்மாள் கற்பழிக்கப்பட்டாள். நினைவு திரும்பியதும் கற்பழித்தவனைத் தேடிப் போய் கட்டாரியால் குத்திக் கொன்றாள். சுப்பம்மாளையும் அவள் கணவன் திம்மனையும் அரசனின் சேனை சுற்றி வளைத்தது. சிப்பாய்கள் சிலரைக் கொன்ற திம்மனும் இறுதியில் கொல்லப்படவே, சுப்பம்மாள் சிறைப்பிடிக்கப்பட்டு, அந்நாட்டு மன்னவன் முன்னிலையில் கொண்டு வந்து நிறுத்தப்படுகிறாள். அவளைச் சிறுகச் சிறுகச் சித்திரவதை செய்து கொல்லச் சொல்லி ஆணையிடுகிறான் மன்னவன்.

அவளோ தன் மூச்சினை உள் நிறுத்தி மரணத்தை ஏற்கிறாள். ஆனால் பாவேந்தர்.

"மூளுதடா என் நெஞ்சில் தீ ! தீ உன்றன்
முடிவேக மூளுதடா அக்கொடுந்தீ
என்ற திர்ந்தாள் திசையதிர்ந்து போகும் வண்ணம் !
எல்லாரும் சுப்பம்மா நிலைமை தன்னை
ஒன்றுபடப் பார்த்திருந்தார் ! அவளுடம்பில்
ஒளி கண்டார்".

என்று ஒளிப் பிழம்பின் வடிவமாகச் சுப்பம்மாளின் முடிவைக் காட்டி, அவளது உடற்களங்கத்தை நெருப்பால் நீக்க முயன்றுள்ளார். (பாரி நிலையம் 1980:111-112) பாவேந்தர், கற்பிற்சிறந்த பெண்ணையே பெண் என்று கருதியுள்ளார்.

'"பெண்ணென்றால் அவளல்லவா பெண்? உலகில்
பெண்ணென்றால் அவளல்லவோ பெண்.
கண்ணவன் மாமியார்க்கே காப்பவள் ம்மாமனார்க்கே
காண நல்ல நகை வேண்டாம் கற்பொன்றே அவள் பூண்டாள்
ஆணழகன் வீட்டினுக்கே அறம் வளர்க்கும் திருவிளக்கே"

என்று புகுந்த வீட்டில் பம்பரமாகச் சுழன்று கணவனின் உறவினரை அன்புடன் பேணுவதும், கணவனின் குறிப்பறிந்து பணிவிடைகள் புரிவதும், கற்பை அணிகலனாகப் பூண்டுள்ளதுமான மரபுவழிப் பெண்மை எனும் படிமத்தையே பெண் பாத்திரங்களாகப் பாவேந்தர் படைத்துள்ளார். கற்பே உயிர் என வலியுறுத்தப்படுவதாலேயே இப்பெண்கள், குடும்பம் வீடு என்ற வரையறைக்குள் வளைய வருகின்றனர்.

## மணமாகாத இளம் பெண்கள்

பாவேந்தரின் படைப்புகளில், மணமாகாத இளம் பெண்கள் பள்ளிக் கல்வியும் மனத்துணிவும் கொண்டவர்களாகச் சித்திரிக்கப் பட்டுள்ளனர். அவர்கள் விரும்பியவனை மணப்பதற்குப் பெற்றோரிடம் போராடக்கூடிய உரிமை உணர்வும் பெற்றவர்கள். மிகத் தெளிவாகவே உரிமை முழக்கம் செய்கின்றனர்.

"சஞ்சீவி பர்வதத்தின் சாரலில்" வரும் வஞ்சி, "பெண் என்றால் சொன்னபடி கேட்க வேண்டும்" என்ற மரபினை உடைத்தவள்.

"பெண்ணுக்குப் பேச்சுரிமை வேண்டாம் என்கின்றீரோ?
மண்ணுக்கும் கேடாய் மதித்தீரோ பெண்ணினத்தை?

பெண்ணடிமை தீருமட்டும் பேசுந்திருநாட்டு
மண்ணடிமை தீர்ந்து வருதல் முயற்கொம்பே"

என்று ஆணித்தரமாகப் பேசுகிறாள். அப்பாவிக் குப்பனுக்கு நாட்டின் நிலையினை உணர்த்திய வஞ்சி, செயலளவில் ஏதும் சாதித்தாளா என்றால் இல்லவே இல்லை.

"மூடப்பழக்கம், முடிவற்ற கண்ணுறக்கம்
ஓடுவதென்றோ? உயர்வதென்றோ? நானறியேன்"

எனக் குப்பன் பெருமூச்சு விடுவதுடன் வஞ்சியின் பங்கு முடிந்து விடுகிறது. முடியரசைக் குடியரசாக மாற்றிட விரும்பும் அரசு குடும்பத்தைப் பெண் பாத்திரங்களும் தத்தமது காதல் வெற்றியே வாழ்வின் இலட்சியம் என்று போராடுகின்றனர்.

## மனைவி

வீடுதான் ஒரு பெண்ணின் இயங்குதளம் என்பது. இன்றைய சமூகச்சூழலைப் பின்னணியாகக் கொண்டுள்ள பாவேந்தரின் படைப்புகளில் அழுத்தம் பெற்றுள்ளது. பண்புள்ள மனைவி குடும்பத்தின் விளக்காவாள் என்பது அவரது கருத்து. குடும்ப விளக்காக அமையும் இவரது பெண்பாத்திரங்கள் கல்வியும் திறமையும் சமூக அக்கறையும் கொண்டவர்களாக இருந்தும், கணவனுக்குப் பின்னிருந்து அவனது வெற்றிகளுக்கு ஊக்கமும் உறுதுணையுமாய் அமைந்து கடமை ஆற்றுகின்ற இரண்டாம் இடச் சமூக மதிப்புப் பெற்றவர்களேயாவர். இவரே ஒரு பாத்திரத்தின் வாயிலாகக் குடும்ப விளக்கும் குண்டுக்கல்லும் என்ற தமது கவிதையில் குறிப்பிட்டுள்ளது போன்று, அதில் வரும் தில்லைக் கண்ணம்மா திருக்காமு முதலியாருக்கு அசல் அடிமை (பூம்புகார் பிரசுரம்:1978:101). குடும்ப விளக்குகள் எல்லாருமே அசல் அடிமைகள் தாம். பெண்மை எனும் பேராற்றல் இங்குக் குடும்ப எல்லைக்குள் சிறைப்பட்டு, சமூக அளவில் தன் சக்தியை வெளியிட இயலாமல் ஒடுங்கிப் போயிற்று.

குடும்ப அமைப்பில் கணவன் ஆளுபவனாகவும் மனைவி அடிமையாகவும் உழல்வதைப் பின்னாளில் பாவேந்தர் மனம் ஒப்பவில்லை என்பதை அவரது "துணைவன் இலக்கணம்" எனும் கவிதை சுட்டிக்காட்டுகிறது. விருந்துவர இன்னும் அரைமணி நேரம்தான் இருக்கிறது என்று அப்போதுதான் வந்து சொன்னான் கணவன். அதற்குள் சமையல் முடிந்தாக வேண்டுமே. இருவருமாகச் செய்கின்றனர். கணவன் அடுப்பு மூட்டுகிறான். சமையலைத் தொடங்குகிறாள் மனைவி. அம்மியில் மிளகாய்ப் பொடியை வைத்து அரைக்கின்றான் கணவன். குழம்பு வைத்து முடிக்கிறாள் மனைவி. வாழையிலை நறுக்கி, கூடம் பெருக்கி, பாய் இட்டு, நீர் வைத்து, கை

துடைக்கத் துணியும் வைத்துப் பாடிக்கொண்டே குரல் கொடுக்கின்றான் கணவன். எல்லாம் ஆயிற்று என்கிறாள் மனைவி.

"அரைமணி அளவில் சோறுகறி ஆக்கிய
உன்றன் திறமை உவமை இல்லாதது"

"ஆடவர் உலகே ஆடவர் உலகே
எனக்கெனத் துணைவரைப் போல நின்ற
மனைவிமார்க்கு நீ துணைபுரிந்து வாழ்கவே"

என்று வேண்டுகோள் விடுக்கின்றாள் மனைவி (பூம்புகார் பிரசுரம் 1977:178).

குடும்ப அமைப்பில் கணவனுக்கும் மனைவிக்கும் உரியதான மரபுவழிப்பட்ட வேலைப் பிரிவுகள் "குடும்ப விளக்கில்" அப்படியே பின்பற்றப்பட்டன. குடும்ப வாழ்வில் சமத்துவம் என்பது காலப் போக்கில் கவிஞர் பெற்ற கருத்து நிலை வளர்ச்சி. எனினும், குடும்ப விளக்காகவே திகழ வேண்டும்.

"பெண்கள், அவர்களுக்குக் குண்டுக்கல்லாகத்
திகழ வேண்டாம் குடும்ப ஆடவர்கள்"

என்று பாவேந்தர் கொண்டுள்ள முடிவான கருத்து - பெண் பாத்திரங்களைப் பொறுத்த மட்டிலும் அவரது மரபுவழிச் சிந்தனையின் விளைவே என்பது தெளிவாகிறது.

## தாய்

பாவேந்தர் படைப்புகளில் "தாய்" என்ற படிமமும் மரபு வழிப்பட்டதேயாகும் அது புனிதமானது: உணர்வுப்பூர்வமானது: தியாக வடிவினது.

"அன்னையும் ஆசானும் ஆருயிரைக் காப்பானும்
எனும்படி அமைந்தீர் இப்படியே பெண்ணுலகம் ஆகும்
நாள் எந்நாளோ? அந்நாளே துன்பமெலாம்
போகுநாள்: இன்பப் புதியநாள் என்றுரைப்பேன்.
அன்னையெனும் தத்துவத்தை அம்புவிக்குக் காட்டவந்த
மின்னே, விளக்கே, வரிநிலவே வாழ்த்துகின்றேன்"

என்று வீரத் தாயாக விஜயராணியைப் படைத்துள்ளார் பாவேந்தர். (செந்தமிழ் நிலையம் 1988) குடும்ப விளக்கில்,

"பாடம் சொல்லப் பாவை தொடங்கினாள்
அவள் வாத்திச்சி: அறை வீடு கழகம்
தவழ்ந்தது சங்கத் தமிழ்ச்சுவை"

என்று அன்னையே அன்புப் படிவமாகவும், அறிவூட்டும் நல்லாசானாகவும், கண்போல் கணவனையும் குழந்தைகளையும்

காப்பவளாகவும் தமிழ் நெஞ்சம் கொண்டவளாகவும் படைத்துக் காட்டியுள்ளார் (பாரி நிலையம் 1972:8).

## கைம்பெண்

கைம்பெண்களின் நிலை கண்டு வருந்தி, அந்நிலையை மாற்றிடக் கைம்பெண் மறுமணத்தை ஆதரித்து, அவர்களுக்காகக் குரல் கொடுத்துள்ளார் பாவேந்தர். பெரியார் ஒரு முறை, "ஒரு ஜீவனைப் பட்டினியாகப் போட்டுக் கொல்வதிலும் ஒரு பெண்ணை விதவையாக வைத்துச் சாகாமல் காப்பாற்றுவது கொடுமையல்லவா" என்று விதவையின் துயரத்தை எடுத்துரைத்தார். (சிந்தனையாளர் கழக வெளியீடு, 1947 : 140). அவர் வழியில் பகுத்தறிவுக் கருத்துக்களைப் பரப்பிய பாவேந்தரும், கைம்பெண்ணுக்கு மறுமணம் செய்துகொள்ள உரிமை வேண்டும் என்னுமிடத்தில் "பசியாத நல்வயிறு பார்த்த துண்டோ" என வாழ வேண்டும் எனும் விருப்பம் இயல்பானதொன்றே என்பதைக் காட்டியுள்ளார்.

## பெண் விடுதலை

'பெண் விடுதலை' என்பது பற்றிப் பாவேந்தரும் சிந்தித்திருக் கிறார். ஆணுக்குப் பெண் நிகர் என்பதை ஏற்றுக்கொண்டுள்ளார்.

"ஆண் உயர்வென்பதும் பெண் உயர்வென்பதும்
நீணிலத் தெங்கணும் இல்லை.
வாணிகம் செய்யலாம் பெண்கள் - நல்
வானூர்தி ஓட்டலாம் பெண்கள்"

என்று பாடியுள்ளார். எனினும் (இசையமுது: முதல் தொகுதி, 1977:52) சிறந்த இல்லத் தலைவியராகும் தகுதிக்கும் தமது பெண் பாத்திரங்களை அவர் உருவாக்கியுள்ளார்.

"பெண்ணுக்கு நீதி" எனும் கவிதையில்,

"கற்றவளே ஒன்று சொல்வேன் ! உன்
கண்ணைக் கருத்தைக் கவர்ந்தவன் நாதன்
கனத்தஉன் பெற்றோரைக் கேளே ! – அவர்
கல்லொத்த நெஞ்சையுன் கண்ணீரினாலே
நனைத்திடுவாய் அதன் மேலும்! அவர்
ஞாயம் தராவிடில் விடுதலை மேற்கொள்!"

என்று பாடியுள்ளார் (செந்தமிழ் நிலையம், 1988:117).

பெண்கள் விடுதலை என்ற பாடலில், ஒரு கூட்டுக் குடும்ப அமைப்பில் மனைவி படும் பாட்டினைப் படைத்துக்காட்டி,

"பெண்டாட்டி என்ற பெயரடைந்த நாள் முதலே
ஒண்டொடிக்கும் சொத்தில் ஒரு பாதி உண்டுரிமை"

எனும் நிலை வந்தால் பெண் விடுதலை சாத்தியமாகும் என்ற கருத்தினைப் பெறவைத்துள்ளார். (பூம்புகார் பிரசுரம், 1977:158).

சொத்துரிமை கிடைப்பதன் மூலம் பெண்ணுக்குப் பொருளாதாரச் சுதந்திரம் கிட்டும் என்பதை விடவும் கணவன் வீட்டார் படுத்தும் பாடுகளிலிருந்து கிடைக்கும் விடுதலைக்குப் பாவேந்தர் அதிக முக்கியத்துவம் கொடுத்தார் எனலாம்.

## முடிவாக

பாவேந்தரின் பெண் பாத்திரங்கள், ஏனைய இலக்கியப் படைப்புகளிற் போலவே மணமாகாத இளம்பெண், மனைவி, தாய், கைம்பெண் என்ற நான்கு பிரிவினராகப் படைக்கப் பெற்றுள்ளனர்.

பெண்ணுக்குப் பேச்சுரிமை, கல்வியுரிமை, மணவுரிமை, சொத்துரிமை போன்றவற்றை இவர் வலியுறுத்தியுள்ளார்.

மனைவி, தாய் என்ற குடும்பப் பங்குகளில் மரபு வழிப் பெண்மை எனும் படிமத்தையே இவர் போற்றியுள்ளார்.

பாரதியிடமும் பெரியாரிடமும் பெண்விடுதலை பற்றிய சிந்தனைத் தெளிவைப் பெருமளவில் பாவேந்தரிடமும் காணலாம் (பாவேந்தர் பாரதிதாசன் நூற்றாண்டு விழா மலர் (1991).

## திரு. வி.க.வும் பெண் மக்களும்

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நிலவிய சமுதாய நிலையை ஒட்டியும், விடுதலைப் போராட்ட உணர்வுகளை யொட்டியும் நவசக்தி இதழில் நம் நாட்டுப் பெண்களைப் பற்றிய தம் கருத்தைப் பின்வருமாறு தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் பதிவு செய்துள்ளார். (நவசக்தி. 26.11.1920, 10.12.1920)

"உலகம் பெண் மக்களாலும் ஆண் மக்களாலும் ஆக்கப் பட்டிருக்கிறது. உயர்திணை அஃறிணை என்னும் இரண்டு உலகத்திலும், பெண்பால் ஆண்பால் உண்டு. பெண்ணின்றி ஆணில்லை: ஆணின்றிப் பெண்ணில்லை. இவ்வாறாக ஆண் மக்களுக்கு உயர்வும் பெண் மக்களுக்குத் தாழ்வும் பல இடங்களில் எப்படி ஏற்பட்டன? உரிமை என்பது பெண் மக்களுக்கும் ஆண் மக்களுக்கும் பொது.

மேல் நாட்டுப் பெண்கள் பல்துறை பற்றிக் கிளர்ச்சி செய்து உரிமை பெற்றுக் கொண்டார்கள். இப்பொழுது அரசியல்

இயக்கங்களிலுந் தலைப்பட்டுக் கடனாற்றி வருகிறார்கள். மேல் நாட்டில் பெண் மக்கள் ஆண் மக்களைப் போல் கல்வி பயில்கிறார்கள். தொழில் செய்கிறார்கள். பொது இயக்கங்களிலெல்லாம் சேர்ந்து உழைக்கிறார்கள். அந்நாட்டில் பெண் மக்களுக்கெனச் சில அமைப்புகளுண்டு. அந்நாட்டுப் பெண்மக்கள் தேசபக்தியிலும் இனப்பற்றிலும் தலைசிறந்து வாழ்கிறார்கள். தங்கள் தேசமும் இனமும் எல்லாத் தேசங்களிலும் எல்லா இனங்களிலும் சிறந்து விளங்க வேண்டுமென்ற எண்ணம் அப்பெண் மக்களுக்குக் கருக்குழியிலேயே ஊறிவிடுகிறது. தேசப்பற்றும் இனப்பற்றும் அவர்கள் வாழ்க்கையாகப் பரிணமிக்கின்றன. கடவுள் நினைவு அவர்கள் உள்ளத்தில் உதயமாவது அருமை. அவர்கள் எவ்வித இழிதொழிலும் உயர்தொழிலும் செய்வார்கள்.

யுத்த காலத்தில் இங்கிலீஷ் பெண்மணிகளும் பிரஞ்சு மாதர்களும் காட்டிய அருஞ்செயல்கள் வருணிக்கற்பாலனவல்ல. தேசத்தின் மீது கொண்ட கழிபெருங் காதலால், சில பெண்மணிகள், ஆண் வேடந் தரித்துப் போர்க்களம் புகுந்த செய்தியைப் பத்திரிகைகளில் வாசித்தோம். இன்னுஞ் சின்னாளில் மேல்நாட்டுப் பெண்மக்கள் மந்திரி பதவி முதலிய சீரிய பதவிகளையும் பெறுவார்கள். ஆண் மக்கள் உதவியின்றித் தாங்களே வாழ்க்கைக்கு வேண்டுவன வற்றைச் சேமித்துக்கொள்ளும் அறிவையும் ஆற்றலையும் அந்நாட்டுப் பெண் மக்கள் பெற்றிருக்கிறார்கள்.

நமது நாட்டில் பழம் பெருமை பேசிப்பேசி வாசா கைங்கர்யஞ் செய்வோர் பலருளர். இவர் தம் கைங்கர்யத்தால் ஒரு பயனும் விளையாது. உயரிய குணத்தோடு தற்பொழுது வாழும் மேல்நாட்டுப் பெண்மணிகளின் வரலாறுகளை அறிஞர்கள் கூறி மகிழ்வெய்துங் காலத்து நம்மவர்களில் சிலர் நமது நாட்டிலும் பண்டைநாளில் இத்தகைய பெண்மணிகள் எத்துணையோபேர் இருந்தார்கள் என்று கூறித் தமக்குள் நிறைவெய்துகிறார். இது அறிவுடைமையோ? நேயர்களே ! யோசியுங்கள்.

பெண் மக்கள் நலனை நாடுபவர்போல நடித்து, அவர்கள் வழக்க ஒழுக்கங்களைப் பாழ்படுத்துஞ் சில ஆசார சீர்திருத்தக் காரர்களும் உள். அவ்வநாசார சீர்திருத்தக்காரர்களால் நமது நாடே கெட்டு வருகிறது. அன்னார் கூட்டுறவால் நம் மாதரசிகளின் இயற்கைக் குணங்களும் அழிந்து வருகின்றன. தேசப்பற்றை விளைவியாப் பாடசாலைகளுக்குப் பெண் மக்களை ஏன் அனுப்புதல் வேண்டும்? ஆண் மக்களிடையே தேசபக்தி வளர்ந்து வருவதுபோல் பெண் மக்களிடையே அப்பக்தி வளர்ந்து வருதல் வேண்டும். நமது நாட்டு ஜனத் தொகையில் பாதிக்கு மேல் பெண் மக்கள் தொகை. ஆண்

மக்களினும் பெண் மக்கள் நீண்ட காலம் ஜீவிக்கிறார்கள். கூரிய மதியும் சலிப்பிலா உறுதியும் நம் பெண்பாலருக்கு உண்டு. ஜனத் தொகையிலும், கொழுமதியிலும் பிற திறனிலும் மிகுந்து விளங்கும் பெண்பாலரை, பிராணிகள் போல் வளரவிடுவது, ஆண் மக்களின் அறியாமையையும் வன்னெஞ்சையும் புலப்படுத்துகிறது.

நமது நாட்டுப் பெண்மக்கள் - ஏறக்குறைய எல்லாரும் - பிற நாயகனைத் தீண்டலாகாதென்ற ஓர் அறத்தை மட்டும் சிறப்பாகக் கொண்டொழுகுவதில் கண்ணுங் கருத்துமாயிருக்கின்றனர். இவ்வியல்பை நாம் குறை கூறவில்லை. இவ்வொன்றே போதும் என்றிருத்தல் கூடாது. இவ்வொன்றுடன் வேறு பல இயல்புகளும் அரும்புதல் வேண்டும். அவைகள் உரிமை வேட்கையை எழுப்பும் ஆண் மக்களுக்கு அடிமைப்பட்டு வாழ நாம் படைக்கப்பட்டோம் என்ற உணர்வுடன் எத்துணையோ பெண் மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். ஆண் மக்களுக்கு வேலை செய்து கருக்கழிக்கும் இயந்திரங்களாக நம் பெண்மணிகள் வாழ்ந்து வருவதை நோக்குழி உள்ளம் உருகுகிறது. ஆண் மக்களைப் போன்ற அறிவும் ஆற்றலும் உடைய பெண் மக்கள் ஏன் அடிமை உணர்வுடன் வாழ்தல் வேண்டும்? நம் பெண்மணிகள் நாயகன்மாரிடத்திலும், மாமிமாரிடத்திலும், மற்றவரிடத்திலும் படும் பாட்டிற்கு அளவேயில்லை. விதவைகளில் எண்ணிறந்தோர் அடைந்துவருந் துயரங்களை எழுதவுங் கை நடுங்குகிறது. தற்கால நாகரிகத்துறையில் இறங்கி ஆடல் புரியும் நாய்கிமார் சிலரால் சில நாயகன்மாரும் துன்பப்பட்டு வருந்துகிறார். நமது நாட்டுப் பெண்மக்களின் மூடச் செயல்களால் விளையுந் துன்பங்கள் எண்ணிறந்தன. அவைகளை அறியாத இந்தியர் இல்லை என்று கூறலாம்.

நம் பெண்மணிகளிடையே கமழ்ந்துகொண்டிருந்த தெய்வ மணமும் அருகிவிட்டது. அவர்கள் எண்ணங்கள் கட்டுப்பட்ட எல்லைக்குள் நின்று தவிக்கின்றன. அவர்களுக்குத் தேமென்ற நினைவு தோன்றுவதில்லை. உண்பதும், உறங்குவதும், ஆடை தரிப்பதும், அணிபூண்வதுமே தங்கள் கடமை என்று அவர்கள் நினைத்து விடுகிறார்கள். நம் பெண் மக்கள் அறியாமையை வருணிப்பதற்கு ஒருநாள் போதாது. அறியாமைக்குக் காரணம் கல்வியின்மையாகும். கல்வியால் நம் மாதர்கள் எல்லா நலனையும் பெறுவார்கள். நமது நாட்டுக் கல்வியும் அதனை அழகு செய்யத்தக்க பிறநாட்டுக் கல்வியும் பெண் மக்களுக்குப் போதிக்கப்படல் வேண்டும். கல்வியறிவால் சகோதரிகள் தங்கள் உரிமையை விரைவில் பெறுவார்கள்.

நம் பெண் மக்கட்கென ஏற்பட்டுள்ள பாடசாலைகளை நரகக் குழிகளுக்கு ஒப்பிடலாம். முதலாவது மூலாதாரப் பாடசாலைகளை

எடுத்துக் கொள்வோம். அவைகளில் நம் குழந்தைகளுக்குத் தீக்கிளர்ச்சி எழுப்பக்கூடிய பாடல்களும் ஆடல்களும் போதிக்கப்படுகின்றன. பின்னை வாழ்க்கைக்கு வேண்டற்பாலனவாய கல்வித் துறைகள் குழந்தைகளுக்குப் போதிக்கப்படுவதில்லை. குழந்தைகள் வீட்டிலிருந்து தொந்தரவு கொடாத ஒரு பயனையே பெற்றோர்கள் பெறுகிறார்கள். குழந்தைகள் அடையும் பயன் என்ன?

ஆண் மக்களை ஈசுவர பக்தர்களாக்கவும் தேச பக்தர் களாக்கவும் பெண் மக்கள் உதவி இன்றியமையாதது. ஆதலால் பெண் மக்களுக்கு நாட்டுக் கல்வி போதிக்கப்படல் வேண்டும். பெண் மக்கட்கென நாட்டுப் பாடசாலைகள் அமைத்து விடும் ஒரு செயலால் மட்டும் அவர்களுக்குப் போதிய கடனைச் செலுத்திவிட்டதாக நம்மவர்கள் கருதிவிடலாகாது. நம் பெண் மக்கள் பெரிதும் ஆண் மக்கள் வருவாயையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆண் மக்கள் வருவாய்க்கு முட்டு நேருங்காலத்துப் பெண் மக்கள் எப்படியாவது குடும்பத்தை நடத்தும் ஆற்றலுடையவர்களாயிருத்தல் வேண்டும். பெண் மக்களையும் பலதுறைத் தொழில் முறைகளில் பயிற்சி செய்விக்க முயலல் வேண்டும். கல்வித்துறைகளையும் தொழில் முறைகளையும் போதிக்கப் பெண் மக்கட்கெனத் தனித்தனிக் கூடங்கள் ஏற்படுத்தல் வேண்டும். அவைகள் பெண் மக்கள் பார்வையிலேயே விடப்படல் வேண்டும்.

ஒவ்வொரு பெண் மக்களும் தன்னையும் தன்னைச் சார்ந்துள்ள குடும்பத்தையும் போஷிக்கத்தக்க அறிவையும் தொழிலையும் பெறுமட்டும் மணஞ் செய்துகொள்ளலாகாது. குடும்பப் பொறுப்பை உணராத இளம் பெண்கள், மணஞ் செய்து கொள்வதும் அவள் வாழ்க்கை நடத்தப் புகுவதும் போற்றத்தக்கனவல்ல. கல்வியறிவு பெறாமலும், கைத்தொழில் பயிலாமலும் வயதை யடைந்து வாழ்க்கைத் துணையாய் ஒருவனுக்கு அமரும் பெண்மகளின் வாழ்வு இரங்கற்குரியதே. நாயகன் உத்தியோகத் தினின்றும் விலக்கப்படினும் நோய்வாய்ப்படினும் அல்லது மரணமடையினும் நாயகி, எவர் உதவியையும் நாடாது, எவர்மாட்டும் அணுகாது தன் கல்வியறிவால், கைத்தொழிலால் தன் வயிற்றை வளர்த்துக் கொள்ளத்தக்க நிலையில் இருத்தல் வேண்டும். அவள் அண்ணன் வீட்டை அடைவதும், அண்ணி கையை எதிர்பார்ப்பதும் மைத்துனன் வீட்டை நண்ணுவதும், மற்றவர் வாயிலேறுவதும் இழிவு இழிவு !!

ஆண் மக்களைப் போலவே பெண் மக்களும் கடவுளால் படைக்கப்பட்டவர்கள். பெண் மக்களுக்கும் கைகால்களிருக்கின்றன. மூளையிருக்கிறது. எல்லா அங்கங்களையுமுடைய பெண் மக்கள் ஏன் வயிற்றுக்கு மற்றவர்களை எதிர்பார்த்தல் வேண்டும்? பெண் மக்கள்

தங்கள் வாழ்நாளில் குடும்பத்தையும் தேசத்தையும் நடத்தும் அறிவாற்றல் பெறுமாறு தாய் தந்தையர்கள் அவர்களைப் பயிற்சி செய்வித்தல் வேண்டும்.

பல பெண் பாடசாலைகளில் ஆண்பாலர் ஆசிரியராக இருக்கிறார். காரணம், பெண் ஆசிரியர் தொகை பெருகாமையேயாம். பெண் பாடசாலைகளில் பெண்பாலர் ஆசிரியராயிருத்தல் நல்லது. கல்வியறிவுடைய சில பெண் மக்கள் ஆசிரியத் தொழில் செய்ய நாணமுறுகிறார்கள். அவர்கள் நாணமுறுவதால் அவர்களுக்கோ தேசத்துக்கோ நன்மை விளையப் போவதில்லை. பெண் மக்களுக்குப் பெண் மக்கள் போதிக்க ஏன் நாணமுறல் வேண்டும்? பெண் ஆசிரியர் தொகை பெருகப் பெருக எல்லாம் ஒழுங்குபெறும். புத்தகம் வெளியிடல் பத்திரிகை நடத்தல் முதலிய தொழில்களிலும் பெண் மக்கள் வாழ்க்கை நடத்தலாம்.

பெண் மக்களுக்கெனச் சங்கீத பாடசாலைகள் வேண்டும். இந்தியர் உலகத்துக்குதவிய இன்பத்துறைகளுள் சங்கீதமும் ஒன்று. பண்டைய நாகரிகச் சங்கீதவளங் குறைந்து கொண்டு வருகிறது. பண்டை இசைக் கருவிகளை வாசிப்போர் அரியராயினர். சங்கீதம் பெரிதும் பெண் மக்களாலேயே வளர்க்கப்பட்டு வந்தது. சங்கீதத்துக்கென ஓர் இனம் ஒதுக்கப்பட்டிருப்பதும், அவ்வினம் மணம் புரியாது தீயொழுக்கத்துக்கிரையாவதும் வெறுக்கத்தக்கன. பெண் மக்கள் சங்கீதப் பயிற்சியாலும் தங்கள் வாழ்க்கையை நடத்தலாம்.

சித்திர மெழுதல், படமெழுதல், தையல்வேலை முதலிய தொழில்களை நன்றாகப் பெண் மக்கள் கற்றுக் கொண்டு காலங் கழிக்கலாம். தையல் தெரிந்த பெண் மக்கள் வீட்டில் தையல் கூலி கிடைக்கும். படமெழுதுந் தொழிலில் பெண் மக்கள் ஏராளமான பொருள் சேர்க்கலாம். சில வீடுகளில் ஏழைப் பெண் மக்கள் இலை தைத்தும், அப்பஞ் சுட்டும் வயிறு வளர்த்து வருகிறார்கள். வேறு பல குற்றேவல் செய்துங் காலங்கழிக்கிறார்கள். இச்சிறு தொழில்களால் சிறு ஊதியம் பெற்று வருந்துவதைப் பார்க்கிலும், கடவுள் அளித்த அறிவைக் கொண்டு பேர் ஊதியம் அளிக்கத்தக்க சீரிய தொழில்களை ஏன் பெண்மணிகள் செய்தல் ஆகாது? அத்தொழிலிலும் பெண் மக்கள் ஏராளமாகப் பொருள் சேர்க்கலாம்.

நமது நாடு விதவைகளை நாளுக்கு நாள் பெருக்கி வருகிறது. நமது நாட்டில் விதவைமார்கள் எவ்வாறு பாவிக்கப்படுகிறார்கள் என்பதை இங்கே விரித்துக் கூற வேண்டுவதில்லை. அவர்கள் சிறுமையை வருணிக்க வேண்டுவதும் அநாவசியம். அவர்கள் துக்கம் ஒழிய வேண்டுமானால், அவர்கள் நூல் நூற்றல் துணி நெய்தல் முதலிய தொழில்களைப் பயில்வதும் நலம்.

பெண் மக்களைத் தொழில் புரியுமாறு கூறுவது இழிவு என்று சிலர் நினைக்கலாம். பழைய காலத்துப் புராணங்களை வாசித்துப் பார்த்தால், நம் பெண் மக்கள் என்னென்ன தொழில் செய்தார்கள் என்பது புலனாகும். கிராமங்களில் நம் பெண்மணிகள் கழனிகளில் வேலை செய்கிறார்கள். நூல் நூற்கிறார்கள். வேறு பல தொழில்களும் செய்கிறார்கள். அத்தொழில்களோடு தற்காலத்துக்கு வேண்டற் பாலனவாய தொழில்முறைகளையும் பயில்வது நலந் தருவதாகும்.

பெண் மக்கள் சோம்பேறிகளாகக் காலங் கழித்தலாகாது. அவர்கள் உலகம் மிகச் சுறுசுறுப்பாக இயங்குதல் வேண்டும். அவர்கள் சுறுசுறுப்பு, ஆண் உலகத்தையும் எழுப்பும், திருத்தும். மேல்நாட்டில் செல்வநிலைக்குப் பெண் மக்கள் உழைப்புங் காரணமாயிருக்கிறது. ஆதலால் பெண் மக்கள் தொழில்புரிவது இழிவாகாது. பெண் மக்கள் கல்வியறிவின்றியும் தொழில் ஞானமின்றியும் வளர்வது மரம் வளர்வதுபோலாகும். மரத்தைப் போல வளர்ந்து வரும் பெண் மக்களால் குடும்பம் வறியநிலை அடைந்துகொண்டே போகும். கல்வியறிவில்லா ஒருத்தி நாயகன் வருவாய் நிலையைக் கவனிப்ப தில்லை. தன் நாயகன் கடன்பட்டோ பிச்சையெடுத்தோ மான மிழந்தோ தனக்கு நகை வாங்கிப் பூட்டவேண்டுமென்றே அவள் கருதுகிறாள். இவ்வறியாமையுடைய பெண் மக்கள் தொகை நமது நாட்டில் நிரம்பியிருக்கிறது. பொருள் அருமையும் பொருளாதார நிலையும் அவளுக்குத் தெரிந்திருக்குமாயின் அவள் புருஷன் மானத்தைப் போக்கடிக்கமாட்டாள். மூடப் பெண் மக்களால் குடும்பங்கள் வறுமையால் பீடிக்கப்படுகின்றன. நாயகன் வருவாய்க்குத் தக்கவாறு செலவு செய்பவளே சிறந்த வாழ்க்கைத் துணை என்று திருவள்ளுவர் கூறியிருக்கிறார். குறள் முதலிய நூல்களை நம் பெண் மக்கள் பயின்று அறிவு வளம் பெறாமையால், நமது நாடே சிறுமையுற்று நலிகிறது.

பெண் மக்கள் போதிய பொருளாதார அறிவு வாய்க்கப் பெறுவார்களாயின், அவர்களும் தேசத் தொண்டில் தலைப்படுவார்கள். பொது நலத்தின் பொருட்டு, நாயகனுக்கு ஏதாவது இடையூறு நேருங்காலத்து, நாயகியின் உதவியும் உற்சாகமும் துணை செய்யும். பெண்மக்கள் உள்ளத்தில் தேச பக்தி பதியுமாயின், அவர்கள் தங்கள் நாயன்மார்களைத் தேசத் தொண்டில் ஈடுபடுமாறு தூண்டுவார்கள். தங்கள் சொற்படி நாயன்மார்கள் நடவாவிடின் தாங்கள் அவர்களோடு ஒத்துழைக்க மறுத்துவிடுவார்கள். பெண் மக்களில் தேசத் துரோகிகள் குறைந்துபோவார்கள். ஆதலால் பெண் மக்களும் எல்லாத் துறைகளிலும் தலைப்பட்டு உழைத்தல் வேண்டும்"

(திரு.வி.க.வின் தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு)

## பார்வையற்ற பெண்கள் எதிர்நோக்கும் சிக்கல்கள்

தற்சார்பும், பிறர் வியக்கும்படியான செயல் திறன்களும் மட்டுமே பார்வையற்றோர் சமுதாயத்தில் அங்கீகாரம் பெறுவதற்கான சிறந்த வழி முறைகள். பார்வை அற்ற ஆண்களைக் காட்டிலும் பெண்கள் சந்திக்க நேரும் சிக்கல் பல. இன்றைய சமூகவியல் சார்ந்து தீர்வு கோரி அவை முன் வைக்கப்பட வேண்டியவை.

கிராமங்களில் பெண்களுக்குக் கல்வி வாய்ப்புகள் என்பது இன்னமும் அரிதாகவே உள்ளது. அந்த வகையில் பெரும் எண்ணிக்கையில் பாதிக்கப்படுகின்றனர். இதை மீறிப் பள்ளிப் படிப்பைத் தொடங்குபவர்களும் பள்ளி இறுதி வகுப்புக்கு மேல் தொடர இயலவில்லை. அதற்குள் அந்தப் பெண்கள் பருவமடைந்து விடுவதால் தொலை தூரத்துக்கு அனுப்பிப் படிக்க வைக்கப் பெற்றோர்கள் தயங்குகின்றனர். அவர்களுக்கும் துணிச்சல் வருவ தில்லை. ஒரே குடும்பத்தைச் சார்ந்த இரண்டு பார்வை அற்றவர்களில் ஆண் படித்துப் பட்டம் பெற்று இருந்தாலும், பெண்ணைப் படிக்க வைக்காத நிலை இருக்கிறது.

ஆள்பாதி, ஆடைபாதி என்பார்கள். பார்வையற்ற பெண் களுக்கோ ஆடையின் இடத்தைக் கல்விதான் நிரப்ப வேண்டி இருக்கிறது. மற்றப் பெண்களைப் போலப் படிக்காவிட்டாலும் ஏதோ ஒரு வகையில் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளுவது எங்களைப் பொறுத்தவரை சாத்தியமே இல்லை. தாங்கள் பட்டம் பெற்றுப் பணி செய்தால்தான் ஓரளவு மதிப்பேனும் சமுதாயத்தில் பெற முடிகிறது.

"நாங்கள் பிறரைச் சார்ந்தே கல்வி கற்க வேண்டி இருப்பதால் அவ்வப்போது பல இடங்களுக்கும் சென்றுவர வேண்டி இருக்கிறது. ஒழுங்குபடுத்தப்படாத பாலியல் கவர்ச்சியின் விளைவுகள் எங்களைப் பாதித்து விடுமோ என்ற அச்சம் எங்களுக்கு இருப்பதால் தாராளமாக வெளியில் சென்று வர இயலவில்லை. ஓர் குறிப்பிட்ட இடத்திற்குப் போக வேண்டும் என்று தானியில் (ஆட்டோ) ஏறிக் கொண்ட எங்களுக்கு நாங்கள் சொல்லுகிற இடத்திற்குத்தான் வண்டி செல்லுகிறதா என்று அறிய முடிவதில்லை" என்று கூறும் கல்வியியல் பயிற்சி மாணாக்கியான உஷா, பார்வையற்ற பெண்களுக்குத் திருமணம் நடக்காததன் காரணத்தையும் விளக்குகிறார். இதிலும் ஆண்களுக்கும், பெண்களுக்கும் பார்வையற்றவர்களாக இருந்தாலும் கூடப் பாலியல் ஏற்றத்தாழ்வு என்பது இந்தச் சமூகத்தில் தவிர்க்க முடியாமல் இன்னும் இருந்து வருகிறது என்று வருந்திக் கூறுகிறார். அவர் மேலும் கூறுகையில், "மிகப்பல பார்வையற்ற பெண்களுக்குத் திருமணங்களே நடப்பதில்லை. கணிசமான பெண்கள் பார்வை அற்ற ஆண்களுடன் திருமணம் செய்து கொண்டு இனிதாக வாழ்க்கை

நடத்துகிறார்கள். பார்வை அற்ற ஆண்களைப் பார்வை உள்ள பெண்கள் வாழ்க்கைத் துணையாக்கிக் கொள்ளுவதுபோல, பார்வை அற்ற பெண்களை மணக்க ஆண்கள் முன்வருவது இல்லை.

குடும்பக் கடமைகளை இவளால் செய்ய முடியாது என்றே தீர்மானமாக நினைக்கிறார்கள். சமைக்கத் தெரியாது என்றும் அடுப்பைப் பற்ற வைக்கச் சொன்னால் வீட்டைக் கொளுத்தி விடுவாள் என்றும் சொல்லி அறுத்து விடுகிறார்கள்".

உண்மையில், எத்தனையோ பெண்கள் பார்வை உள்ளவர் களைப் போலவே, சமைப்பது உள்ளிட்ட எல்லாப் பணிகளையும் எந்தக் குறையும் இன்றிச் செம்மையாகச் செய்து வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர். ஒரு பார்வையற்ற பெண் தவறி எதையாவது கீழே போட்டுவிட்டால் கவனக்குறைவேயின்றிக் கண் தெரியாததால் ஏற்படுவது அல்ல. பலர் தாம்பத்யம் தொடர்பாகக் கேள்வி எழுப்பு கின்றனர். பார்வையின்மை எந்த வகையிலும் அதற்குத் தடைஅல்ல என்பது நன்றாகச் சிந்தித்தால் புரியும். இல்லற வாழ்விலும், இன்ப வாழ்விலும் கணவனைப் புரிந்து கொண்டு அவனோடு இணைந்து அவற்றை அனுபவிக்கும் செயல்களில் எல்லாம் எந்த விதமான தடையும் கிடையாது.

பார்வையின்மையை ஒரு பரம்பரை நோயாகக் கருதி, பார்வையற்ற பெண்களை மட்டும் இன்றி அவர்களின் சகோதரி களையும் கூட மணந்து கொள்ள மறுப்பது வேதனைக்குரியது. இது ஒரு நோய் அல்ல, வழிவழி வருவதற்கு வாய்ப்பில்லை.

பார்வையற்றோர் மீது சமுதாய விழிப்புணர்வு தேவைப் படுவது போலவே பார்வையற்ற பெண்கள் பல விஷயங்களில் விழிப்புணர்வு கொள்ள வேண்டியுள்ளது. பயமின்றி, மன தைரியத் தோடு உலகத்துடன் இணைந்து வாழ அவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும். கல்வித் தரத்தை உயர்த்திக் கொள்வதன் மூலம் இதற்கான தன்னம்பிக்கையை அவர்கள் பெறலாம்.

## கற்பு பற்றிப் பெரியார் கருத்து

"கற்பு என்ற வார்த்தையைப் பகுபதமாக்கிப் பார்ப்போமானால், கல் என்பதிலிருந்து வந்தாலும், அதாவது படி-படிப்பு என்பது போல் கல்-கற்பு என்கின்ற இலக்கணம் சொல்லப்பட்டு வருகிறது. அன்றியும், 'கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை' என்கிற வாக்கியப்படி பார்த்தால் கற்பு என்பது சொல் தவறாமை. அதாவது, நாணயம், சத்தியம், ஒப்பந்தத்திற்கு விரோதமில்லாமல் என்கின்றதான கருத்துகள் கொண்டதாக இருக்கும்.

அதைப் பகாப்பதமாக வைத்துப் பார்த்தால், மகளிர் நிறை என்று காணப்படுகின்றது. இந்த இடத்தில் மகளிர் என்பது பெண்களையே குறிக்கும் பதமாக எப்படி ஏற்பட்டது என்பது விளங்கவில்லை. நிறை என்கின்ற சொல்லுக்குப் பொருளைப் பார்த்தால் அறிவின்மை, உறுதிப்பாடு, கற்பு என்கின்ற பொருள்களே காணப்படுகின்றன. கற்பு என்பது பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்பட்டது என்பதற்குத் தக்க ஆதாரம் கிடைக்காவிட்டாலும், அழிவில்லாதது, உறுதியுடையது என்கின்ற பொருள்களே காணக் கிடக்கின்றன.

அழிவில்லாதது என்கின்ற வார்த்தைக்கு, கிரமமான கருத்துப் பார்க்கும்போது, இந்த இடத்தில் சுத்தம் அதாவது கெடாதது, மாசற்றது என்பதாகத்தான் கொள்ளலாம். இந்தச் சுத்தம் என்கின்ற வார்த்தையும், கெடாதது என்கின்ற கருத்தில் தான் ஆங்கிலத்தில் காணப்படுகிறது. அதாவது, சேஸ்டிடி (Chastity) என்கின்ற ஆங்கில வார்த்தைப்படி வர்ஜினிட்டி (Virginity) என்பதே பொருள் ஆகும். அதை அந்தப் பொருள்படிப் பார்த்தால் இது ஆணுக்கென்றோ, பெண்ணுக்கென்றோ சொல்லாமல் பொதுவாக மனித சமூகத்திற்கே - எவ்வித ஆண், பெண் புணர்ச்சி சம்பந்தமே சிறிதும் இல்லாத பரிசுத்தத் தன்மைக்கே உபயோகப்படுத்தி இருக்கிறது என்பதைக் காணலாம். ஆகவே, கற்பு என்பது பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்பட்டதல்ல என்பதும், அதுவும் ஆணோ, பெண்ணோ ஒரு தடவை கலந்த பிறகு எவ்வளவு சுத்தமாயிருந்தாலும் கற்பு போய்விடுகிறது என்கின்ற கருத்துக் கொள்ளக்கூடியதாயுமிருக்கின்றது. ஆனால், ஆரிய பாஷையில் பார்க்கும்போது மாத்திரம் கற்பு என்கிற வார்த்தைக்கு அடிமை என்ற கருத்து நுழைக்கப்படுகின்றது என்பது எனதபிப்பிராயம். அதாவது பதியைக் கடவுளாகக் கொண்டவள், பதிக்கு அடிமையாய் இருப்பதையே விரதமாகக் கொண்டவள், பதியைத் தவிர வேறு யாரையும் கருதாதவள் எனப் பொருள் கொடுத்திருப்பதுடன் பதி என்கிற வார்த்தைக்கு அதிகாரி, எஜமான், தலைவன் என்கின்ற பொருள் இருப்பதால் அடிமைத் தன்மையை இவ்வார்த்தை புலப்படுத்து கின்றது.

ஆனால், தலைவி என்ற பதத்திற்கும், நாயகி என்ற பதத்திற்கும் மனைவி என்று பொருள் குறிக்கப்பட்டிருப்பதாலும், அது அன்பு நிலையில் மாத்திரம் ஆணையும், பெண்ணையும் குறிக்கின்றதே யொழிய, வாழ்க்கையில் கட்டுப்பட்ட பெண்களுக்குத் தலைவி என்கின்ற வார்த்தை, அதன் உண்மைக் கருத்துடன் வழங்கப்படு வதில்லை. நாயகன் - நாயகி என்கின்ற சமத்துவமுள்ள பதங்களும் கதைகளிலும் புராணங்களிலும் ஆண் - பெண் இச்சைகளை உணர்த்தும் நிலைகளுக்கே மிகுதியும் வழங்கப்படுகின்றன. ஆகவே,

காமத்தையும் அன்பையும் குறிக்கும் காலங்களில் சமத்துவப் பொருள் கொண்ட நாயகர் - நாயகி, தலைவர் - தலைவி என்ற வார்த்தைகளை உபயோகப்படுத்திவிட்டு, கற்பு என்ற நிலைக்கு வரும்போது அதைப் பெண்களுக்கு மாத்திரம் சம்பந்தப்படுத்தி, பதி ஆகிய எஜமானனையே கடவுளாகக் கொள்ள வேண்டுமென்ற கருத்து கொள்ளப்பட்டிருக் கின்றது.

இந்த இடத்தில் நமது திருவள்ளுவரின் நிலைமையும் எனக்குச் சற்று மயக்கத்தையே தருகிறது. அதாவது, குறளில் வாழ்க்கைத் துணை நலத்தைப் பற்றிச் சொல்ல வந்த 6-ஆம் அத்தியாயத்திலும், பெண்வழிச் சேறல் என்பதைப் பற்றிச் சொல்ல வந்த 9-ஆவது அத்தியாயத்திலும் மற்றும் சில தனி இடங்களிலும் பெண்கள் விஷயத்தில் மிக்க அடிமைத் தன்மையையும், தாழ்ந்த தன்மையையும் புகுத்தப்பட்டிருப்பதாகவே எண்ணக் கிடக்கின்றன. தெய்வத்தைத் தொழாமல் தன் கொழுநனாகிய தன் தலைவனைத் தொழுகின்றவள் மழையைப் பெய்யென்றால் பெய்யும் என்றும், தன்னைக் கொண்டவன் என்றும் இம்மாதிரியான பல அடிமைக்குகந்த கருத்துகள் கொண்ட வாசகங்கள் காணப்படுகின்றன. இவ்விஷயத்தில் மாறுபட்ட அபிப்பிராயம் கொள்ளுவோர் மேற்கண்ட இரண்டு அத்தியாயங்களையும் 20 குறளையும் உரைகளைக் கவனியாமல் மூலத்தை மாத்திரம் கவனிக்கும்படி வேண்டுகிறேன். அப்படிப் பார்த்த பிறகு, இந்த இரண்டு அதிகாரங்களையும் அதாவது "வாழ்க்கைத் துணைநலம்" அதிகாரமும், "பெண் வழிச் சேறல்" அதிகாரமும் குற்றமற்றது என்பதாக யார் வந்து எவ்வளவு தூரம் வாதிப்பதானாலும், கடைசியாக, திருவள்ளுவர் ஒரு ஆணாயில்லாமல் பெண்ணாயிருந்து இக்குறள் எழுதியிருப்பாரானால் இம்மாதிரிக் கருத்துக்களைக் காட்டியிருப்பாரா? என்பதையாவது கவனிக்கும்படி வேண்டிக் கொள்ளுகிறேன். அதுபோல், பெண்களைப் பற்றிய தர்மசாஸ்திரங்கள் என்பதும், பெண்களைப் பற்றிய நூல்கள் என்பதும் பெண்களால் எழுதப்பட்டிருக்குமானாலும் அல்லது கற்பு என்கின்ற வார்த்தைக்குப் பெண்களால் வியாக்கியானம் எழுத ஏற்பட்டிருந்தாலும் கற்பு என்பதற்கு, "பதிவிரதம்" என்கின்ற கருத்தை எழுதியிருப்பார்களா? என்பதையும் யோசித்துப் பார்க்கும்படிக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

கற்பு என்பதற்குப் "பதிவிரதம்" என்று எழுதிவிட்டதன் பலனாலும், பெண்களைவிட ஆண்கள் செல்வம், வருவாய், உடல் வலிவு கொண்டவர்களாக ஆக்கப்பட்டுவிட்டதனாலும், பெண்கள் அடிமையாவதற்கு, புருஷர் மூர்க்கர்களாகிக் கற்பு என்பது தங்களுக்கு இல்லை என்று நினைப்பதற்கும் அனுகூலம் ஏற்பட்டதே தவிர வேறில்லை.

தவிர, புருஷர்கள் கற்புடையவர்கள் என்று குறிக்க நமது பாஷைகளில் தனி வார்த்தைகளே காணாமல் மறைபட்டுக் கிடப்பதற்குக் காரணம் ஆண்களின் ஆதிக்கமே தவிர வேறில்லை.

இந்த விஷயத்தில் உலகத்தில் ரஷியா தவிர, வேறு நாடோ, வேறு மதமோ, வேறு சமூகமோ யோக்கியமாய் நடந்து கொண்டிருக் கிறது எனச் சொல்ல முடியாது. உதாரணமாக அய்ரோப்பிய தேசத்தில் பெண்களுக்குப் பலவிதச் சுதந்திரங்கள் இருப்பதுபோல் காணப் பட்டாலும் புருஷன் பெண்சாதி என்பதற்காக ஏற்பட்ட பதங்களிலேயே உயர்வு தாழ்வுக் கருத்துகள் நுழைக்கப்பட்டிருப்பதுடன், சட்டங்களும் புருஷனுக்கு அடங்கி நடக்க வேண்டியதாகவே ஏற்பட்டிருக்கின்றன. மற்றும் சில சமூகங்களில் பர்தா என்றும் கோஷா என்றும், முகத்தை மூடிக் கொண்டு வெளியில் போக வேண்டியவர்கள் என்றும், ஏற்படுத்தப்பட்ட கொள்கைகளும், புருஷன் பல பெண்களை மணக்கலாம், பெண்கள் ஏக காலத்தில் ஒரு புருஷனுக்கு மேல் கட்டிக் கொண்டு வாழக் கூடாது என்ற கொள்கையும் நம் நாட்டில் ஒரு தடவை புருஷன் பெண்சாதி என்கின்ற சொந்தம் ஏற்பட்டுவிட்டால், பிறகு அந்தப் பெண்ணுக்குச் சாகும்வரைக்கும் வேறு எந்தவிதச் சுதந்திரமும் இல்லையென்றும், புருஷன் அப்பெண்ணின் முன்பாகவே பல பெண்களைக் கட்டிக் கொண்டு கூடி வாழலாம் என்றும், புருஷன் தன் மனைவியைத் தன்னுடைய வீட்டில் வைத்துக் கொண்டு அவளுடன் ஒன்றித்து வாழாமலிருந்தும்கூட மனைவி புருஷனைச் சாப்பாட்டிற்கு மாத்திரம் கேட்கலாமொழிய இன்பத்திற்கோ, இச்சையைத் தீர்ப்பதற்கோ அவனைக் கட்டுப்படுத்த உரிமை இல்லை என்று கட்டுப்பாடுகள் இருந்து வருகின்றன.

இந்நிலை சட்டத்தாலும், மதத்தாலும் மாத்திரம் ஏற்பட்ட தென்று சொல்வதற்கில்லாமல் பெண் சமூகமும், ஒப்புக் கொண்டு, இந்நிலைக்கு உதவி புரிந்து வருவதானாலும் இது உரம் பெற்று வருகிறதென்றே சொல்ல வேண்டும். அநேக வருடப் பழக்கங்களால் தாழ்ந்த சாதியார் எனப்படுவோர் எப்படித் தாங்கள் தாழ்ந்த வகுப்பார் என்பதையும் ஒப்புக் கொண்டு, தாமாகவே கீழ்ப்படியவும், ஒடுங்கவும், விலகவும் முந்துகின்றார்களோ, அதுபோலவே, பெண் மக்களும் தாங்கள் ஆண் மக்களின் சொத்துக்களென்றும், ஆண்களுக்குக் கட்டுப்பட்டவர்களென்றும், அவர்களது கோபத்திற்கு ஆளாகக் கூடாதவர்கள் என்றும் நினைத்துக் கொண்டு, சுதந்திரத்தில் கவலையற்று இருக்கின்றார்கள். உண்மையாக, பெண்கள் விடுதலை வேண்டுமானால், ஒரு பிறப்புக்கொரு நீதி வழங்கும் நிர்ப்பந்தக் கற்பு முறை ஒழிந்து, இரு பிறப்பிற்கும் சமமான சுயேசைக் கற்பு முறை ஏற்பட வேண்டும். கற்புக்காகப் பிரியமற்ற இடத்தைக் கட்டி அழுது கொண்டிருக்கச் செய்யும்படியான நிர்ப்பந்தக் கல்யாணங்கள் ஒழிய வேண்டும்.

கற்புக்காகப் புருஷனின் மிருகச் செயலைப் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டும் என்கின்ற கொடுமையான மதங்கள், சட்டங்கள் மாய வேண்டும்.

கற்புக்காக மனத்துள் தோன்றும் உண்மை அன்பை, காதலை மறைத்துக் கொண்டு, காதலும், அன்பும் இல்லாதவனுடன் இருக்க வேண்டும் என்கின்ற சமூகக் கொடுமையும் அழிய வேண்டும்.

எனவே, இக்கொடுமைகள் நீங்கின இடத்தில் மாத்திரமே மக்கள் பிரிவில் உண்மைக் கற்பை, இயற்கைக் கற்பை, சுதந்திரக் கற்பைக் காணலாமே ஒழிய நிர்ப்பந்தங்களாலும், ஒரு பிறப்புக்கொரு நீதியாலும், வலிமை கொண்டவன் வலிமையற்றவனுக்கு எழுதி வைத்த தர்மத்தாலும் ஒருக்காலும் காண முடியாது என்பதுடன், அடிமைக் கற்பையும், நிர்ப்பந்தக் கற்பையும்தான் காணலாம். அன்றியும், இம்மாதிரியான கொடுமையைவிட வெறுக்கத்தக்க காரியம் மனித சமூகத்தில் வேறொன்று இருப்பதாக என்னால் சொல்ல முடியாது" என்று தமது அறிவியல் கண்ணோட்டத்துடன் பெரியார் விளக்கியுள்ளார்.

# முடிவுரை

இதுகாறும், பெண்ணியம் பற்றியும், அதில் உள்ளடங்கும் எண்ணற்ற, பல்வேறுபட்ட, சிக்கல்களைப் பற்றியும் விரிவாக, பல்வேறு கோணங்களில் ஆராய்ந்தோம். குறிப்பாக, 1991-ஆம் ஆண்டு முதல் கடைபிடிக்கப்பட்டுவரும் புதிய பொருளாதாரக் கொள்கை (உலகமயமாக்கல், தாராளமயமாக்கல், தனியார்மய மாக்கல்), கணினி தொழில் நுட்பப் புரட்சி, செய்தித் தொடர்புத் துறையில் ஏற்பட்டுள்ள வியத்தகு மாற்றங்கள் ஆகியன காரணமாக இந்தியப் பெண்ணினத்திற்கு மேலும் சில புதிய பரிமாணங்கள் சேர்ந்துள்ளன.

தொன்றுதொட்டு இந்தியப் பெண்கள் போராடி வருகின்ற மனு தருமம் சார்ந்த, ஆண் ஆதிக்கக் கருத்துகளோடு அண்மைக் காலப் புதிய சிக்கல்களும் அவற்றுடன் சேர்ந்து இந்தியப் பெண் குலத்திற்குப் பெரும் அறை கூவலாக அவை உருவெடுத்துள்ளன என்றால் இது மிகையாகாது.

'பெண்கள்' என்று எடுத்துக் கொண்டால், இந்தியா மட்டு மல்ல, உலகம் முழுவதுமே அவர்களை ஆணுக்குச் சமனற்றவர் களாகவேதான் பார்க்கிறது. வேண்டுமானால் இந்தச் சமனற்ற தன்மையின் அளவில், வீதத்தில் (Percentage) சற்று வேறுபாடு நாட்டுக்கு நாடு காணப்படலாம். உரிமைகளின் பிறப்பிடமாகவும், மிக முன்னேறிய நாடாகவும் கருதப்படும் அமெரிக்காவில் கூட இதுவரை ஒரு பெண் குடியரசுத் தலைவராகத் தெர்ந்தெடுக்கப்படவில்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. பெண்ணடிமைத் தனம் பெண்களின் தாழ்நிலை, ஆணாதிக்கம் என்பனவெல்லாம் எல்லாச் சமூகங்களிலும் பல்வேறு தன்மைகளில் இருந்தே தீருகின்றன.

பெண்ணியச் சிக்கல்களைப் புரிந்து கொள்ளவும் அவற்றைப் பற்றி விவாதிக்கவும், தீர்வு காணவும், தேவைப்படுகின்ற சட்டங்கள் இயற்றவும் தற்போது வேண்டுவது உரிய மனமாற்றம் (Attitudional change) ஒன்றேயாகும். இந்த மனமாற்றம் தானே ஏற்படாது; ஒரே நாளில் ஒரே இரவில் ஏற்படாது. ஒருவரால் ஏற்படாது. ஆதலால் ஒட்டுமொத்த உலக சமுதாயங்களிலும் உலக மாந்தர் அனைவரிடமும் பரந்த அளவில் இந்தப் புதிய மனமாற்றமானது ஏற்பட்டேயாக வேண்டும். அது எவ்வாறு அமைய வேண்டும் என்று சிந்தித்துப்

பார்த்தால், உலகப் பேராசான்களாகிய திருவள்ளுவர், புத்தர், காந்தியடிகள், தந்தை பெரியார், அன்னை தெரசா முதலான சான்றோர்களின் கருத்துகளின் அடிப்படையில்தான் இந்த மனமாற்றம் அமைந்திடல் நலமாகும் எனத் தெற்றெனப் புலனாகிறது. இதே கருத்து இந்நூலில் பல்வேறு இடங்களில் சுட்டிக் காட்டி வலியுறுத்தப் பெற்றும் உள்ளது.

கற்பு என்கிற தலைப்பில், விரிவாகச் சிந்தித்து எழுதிய தந்தை பெரியார், கற்பு என்பது ஆணுக்கும் பெண்ணுக்கும் பொது நீதியாக வைக்கப்படல் வேண்டும் எனவும், அதனைப் பெண்களுக்கு மட்டுமே உரிய கட்டுப்பாடாக வைக்கக்கூடாது எனவும் தெளிவுபடுத்தி உள்ளார். மேலும் பெண்களின் கற்பு பற்றி ஆண்கள் தான் வரையறை வகுத்துள்ளார்களே தவிர அதுபற்றிப் பெண்கள் யாரும் வரையறை வகுத்திடவில்லையே? ஏன்?

பெண்களுக்கான சட்டங்களை இயற்றும் கடமையில் ஆண்களே இடம் பெறுகின்றனரேயன்றி, பெண்களுக்கு அதில் உரிய பங்கு அல்லது இடம் அளிக்கப்படுகிறதா? அவ்வாறு அளிக்கப்பட வில்லையெனில் அது சரியாகுமா? நியாயமாகுமா? சமத்துவமாகுமா? என்றெல்லாம் அறிவுசார்ந்த, தருக்க அடிப்படையிலான நியாயத்தின் பாற்பட்ட கேள்விக் கணைகளைத் தந்தை பெரியார் அடுக்கடுக்காகத் தொடுத்தார். இந்தக் கேள்விகளுக்கு அறிவு நாணயத்தோடு கூடிய விடை எவரிடமிருந்தும் வரவில்லை. பெண்களில் பெரும்பகுதி யினரும் தங்கள் தாழ்நிலை பற்றி வினா எழுப்ப இயலாதவர்களாக, உரிமை உணர்ச்சி அற்றவர்களாக இருந்து வந்திருக்கின்றனர். இந்தக் கேள்விகளுக்கு விடை காணாத நிலையில் நாம் பேசக்கூடிய கற்பானது உண்மைக் கற்பாக, இயற்கைக் கற்பாக, சுதந்திரக் கற்பாக இருக்க முடியாது என்று பெரியார் கூறுகிறார்.

பெண்கள் எதிர்கொள்ளும் சிக்கல்கள் மிகவும் நுணுக்க மானவையும், கவனமாகக் கையாள வேண்டியவையும் ஆகும். பெண்களுக்கு விடுதலை வேண்டும் என்று கூறுகிறோம். ஆனால் அந்த விடுதலையானது எப்படிப்பட்டது என்பதை மிகுந்த பொறுப்புணர்ச்சியோடு ஆழ்ந்து சிந்திக்க வேண்டும். கல்வி, வேலை வாய்ப்பு, உணவு, உடை, சொத்துரிமை, இல்லறம், கணவர் தேர்வு, முக்கியச் சிக்கல்களில் முடிவெடுத்தல் ஆகியவற்றில் அவர்களுக்கு முழுமையான சுதந்திரம் வழங்கப்படல் வேண்டும்.

இவற்றை வலியுறுத்தும்பொழுது, ஒரு பெண்ணோ ஆணோ தம்முடைய மனம் போனபோக்கில் எல்லாக் கட்டுப்பாடுகளையும், வரையறைகளையும் உடைத்தெறிந்து, கண்மூடித்தனமாக, தான் தோன்றித் தனமாக நடந்து கொள்ள அனுமதி அளிக்க வேண்டும் என வாதாடுவதாகப் பொருளன்று.

ஒரு கட்டுப்பாட்டுக்கும் வரையறைக்கும் உட்பட்ட சுதந்திரம் தான் பயனளிக்கும். நட்டு வைக்கப்பட்ட செடிகளுக்குப் பாதுகாப்பாக வேலி அமைக்கப்படாவிட்டால் அந்தப் பயிர் பாழ்பட்டுப் போவது எவ்வளவு உறுதியோ, அதே நீதி ஒரு பெண்ணுக்கோ ஆணுக்கோ பொருந்தக் கூடியதாகும். ஒரு தனி மனிதனுக்குப் பொருந்தும் நீதி ஒரு சமூகத்துக்கு, ஒரு நாட்டுக்குப் பெருமளவில் பொருந்துவதாக அமையவும் கூடும்.

பெண்கள் குடும்பம் என்கிற கட்டுக்குள் அமைந்து தாய், தந்தை, கணவர், உறவினர், நண்பர்கள் ஆகியோரின் பாசப் பிணைப்புக்குள் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு துய்த்திடும் சுதந்திரம் தான் உண்மையான பெண்ணிய விடுதலையாகும். இல்லாவிடில், மேலை நாட்டு நாகரிக அடிப்படையில் அமைந்த கட்டுப்பாடற்ற, ஒழுக்கம் பண்பாடு பற்றிச் சிறிதும் கவலை கொள்ளாத, ஒரு மனப்போக்காக அது அமைந்துவிடும்.

நம் நாட்டுப் பெண்களின் விடுதலையானது, நமது பண்டைய தமிழ்மரபில் காணப்பெறும் அறிவுக்குப் பொருந்தக் கூடிய, அனைவராலும் ஏற்கத்தக்க, பரந்த மனப்பான்மையில் திளைத்த, பகுத்தறிவின்பாற்பட்ட ஒன்றாக இருத்தல் வேண்டும். ஏனெனில், ஒரு நாட்டின் பண்பாட்டுப் பெருமையே காலங்காலங்களுக்கு நின்று நிலைத்திடும் பெருஞ்சிறப்பாகும்.

ஆணுக்குப் பெண் நிகரெனக் கொள்வதால்
அறிவிலோங்கி இவ்வையம் தழைக்குமாம்

என்பதை மெய்யாக்க வேண்டுமென்றால், இந்தக் கண்ணோட்டத்தில் பெண்ணியச் சிக்கல்களைத் தீர்த்திடப் பின்வரும் கருத்துகளை முடிவுரையாக முன்வைப்போம்.

- பெண்களுக்கு 50% இட ஒதுக்கீடு செய்ய வேண்டும்.
- பெண்கள் அர்ச்சகராகும் உரிமை உடனடியாக வழங்கப்பட வேண்டும்.
- தீவிரமாகப் பகுத்தறிவுக் கொள்கைகளைப் பரப்பிட வேண்டும்.
- சாதி ஒழிப்புக் கருத்துப் பரப்பல்.
- சாதி பற்றிய அச்சம் போக்குதல்.
- சாதி மறுப்புத் திருமணங்களை மேலும் ஊக்குவித்தல்.
- சாதி மறுப்புத் திருமணங்களுக்கு மேலும் பரிசுகள் வழங்குதல்.

- சாதி மறுப்புத் திருமணங்கள் வாயிலாகப் பிறக்கும் குழந்தைகளுக்கு, குறிப்பாகப் பெண் குழந்தைகளுக்கு வேலைவாய்ப்பில் அதிக முன்னுரிமை வழங்கல்.
- பெண்களுக்குப் பொதுவான வேலை வாய்ப்புகளில் மிகுந்த முன்னுரிமை அளித்தல்.
- பெண்களுக்குச் சொத்துரிமை - இந்தியா முழுமையும், சீரான, ஒரே வகையான சட்டங்கள் செய்தல்.
- பெண் கல்விக்கு முன்னுரிமை அளித்தல் - பெண்களுக் கான மேல்நிலைப் பள்ளிகள், கல்லூரிகள் எண்ணிக்கையை அதிகரித்தல்.
- உயர் பதவிகள், ஆசிரியப் பணியிடங்கள், அரசியல் கட்சிப் பொறுப்புகள் ஆகியவற்றில் பெண்களின் பங்கேற்பு மிகுந்திடச் செய்தல்.

கிராமப்புறங்களில் பெண்களின் நிலைமையை அவரவர்களின் சமூக, பொருளாதார, குடும்பச்சூழ்நிலையின் அடிப்படையில் அணுகிடும் போக்கு உருவாக்கப்படல் வேண்டும். இப்பணிகள் அனைத்தையும் ஒருங்கே நிறைவேற்றும் வலிமைமிக்க அமைப்பாக மகளிர் நல வாரியத்தை அரசமைப்புச் சட்டப்படியான ஓர் அமைப்பாக, உறுப்பாக உருவாக்கிடல் வேண்டும்.

# தாய் பற்றிய பொன்மொழிகள்

1. ஒரு வித்து, பூவாக மலர்ந்து, காயாக முதிர்ந்து, கனியாக நிறைவுறுதல் போல் ஒரு பெண் பேதையாய் விளங்கிப் பெண்மையாய்ச் சமைந்து, தாய்மையாய் நிறைவடைகின்றாள். - பெருஞ்சித்திரனார்

2. குழந்தையின் பூத உடலை மட்டும் பெற்றெடுப்பவளல்ல தாய்; அதன் புகழ் உடம்பையும் பெற்றெடுப்பவள் அவளே. - அப்துல் ரகீம்

3. தன்னுடைய குழந்தைகளுக்குத் தொண்டு செய்கிற தாய், தன் தொண்டின் வழித் தன் தாய்மையை வெளிப்படுத்துகிறாள். - தாகூர்

4. தாயை யாருடனும் ஒப்பிடலாகாது; ஏனெனில் அவள் ஒப்பற்றவள். - பெல்ஜியம்

5. அன்பின் உறைவிடமே அன்னை - ஆப்பிரிக்கர்

6. அன்னையின் அன்புக்கு வயதே கிடையாது. - சப்பானியர்

7. ஒரு தாய் பத்துக் குழந்தைகளைப் பேணி வளர்க்கலாம்; ஆனால் பத்துக் குழந்தைகள் ஒரு தாயைப் பேணுவது அரிது. - சீனர்

8. தாயிலே கெட்டவளும் இல்லை ; சாவிலே நல்லதுமில்லை. - யூதர்

9. தாயின் வாழ்த்து வெந்தணலால் வேகாது; வெள்ளத்தால் அழியாது. - உருசியர்

10. தாயிற் சிறந்ததொரு கோயிலுமில்லை. - தமிழர்

11. தொட்டிலை ஆட்டுங்கை தொல்லுலகை ஆளுங்கை - தமிழர்

12. தாய்மை என்பது முழுமையான, பெருமையான, ஒப்பிட முடியாததான ஒன்றாகும். - ஜார்ஜ் வாசிங்டன்

13. தாய்ப்பாலோடு பருகிய தெல்லாம் ஆன்மா பிரிந்து செல்லும் போதுதான் அதனுடன் வெளியே செல்லும். - உருசியர்

14. புத்திசாலியான மகனால் தந்தை மகிழ்ச்சி அடைகிறான். ஆனால் மூட மகனால் தாயின் உள்ளம் வருந்துகின்றது. - விவிலியம்

15. அன்னை மகனது வயிற்றைப் பார்ப்பாள்; மனைவி அழகைப் பார்ப்பாள். - இந்தியர்

16. எந்தத் தாயாரும் தந்தையாரும் தங்கள் குழந்தைகளை விகாரமானவர் களாகக் கருதுவதில்லை. - யாரோ

17. நடனத்தின் இசை இனிமையிலும், தாய்க்குத் தன் குழந்தைகளின் அழுகுரலே கேட்கும். - சப்பானியர்

18. செல்வமுள்ளபோது தந்தை; இல்லாதபோது தாய். - இந்தியர்

19. தாய் வார்த்தை கேளாப் பிள்ளை நாய்வாய்ச்சீலை. - தமிழர்

20. பசுவின் பின்னால் எப்பொழுதும் ஒரு கன்று இருந்து வரும்; சில சமயங்களில் அது சொந்தக் கன்றாய் இருக்கும்; சில சமயங்களில் வேறு பசுவின் கன்றாயிருக்கும். - இந்தியர்

21. தந்தையின் அன்பு கல்லறை வரை, தாயின் அன்பு உலகுள்ள வரை. - யாரோ

22. தாய் உன்னைப் பத்து மாதங்கள் சுமந்தவள்; மூன்று ஆண்டுகள் பால் கொடுத்து வளர்த்தவள்; உனக்கு எல்லாம் அவள்தான். அவள் உன்னைப் பற்றி ஆண்டவனிடம் முறையிடும்படி நடந்து விடாதே. - எகிப்தியர்

23. குழந்தைகளின் இதயத்திலும் வாயிலும் வரும் கடவுளின் பெயர்தான் தாய். - தாக்ரே

24. நல்ல தாயின் கருவிலும் தீய பிள்ளைகள் உண்டாகி இருக்கிறார்கள். - சேக்சுபியர்

25. தாயை அழவிடுவதில் மனிதர்கள் கவனமாயிருக்க வேண்டும்; ஏனென்றால் ஆண்டவன் அவளுடைய கண்ணீர்த் துளிகளை எண்ணிப் பார்க்கிறான். - யூதர்

26. ஒரு தேவதூதன் தாய்மையின் உருவத்தை முழங்காலிட்டு வணங்கிப் பிரார்த்தனை செய்கிறான். - ஜார்ஜ் போப்பு

27. தாய்மை கண்ணீரைச் சிந்திக்கொண்டே தம்முடைய இனிய புன்முறுவல்களை என்றும் மலர்ந்த நிலையில் வைத்துக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது. - தாகூர்

28. ஒரு தாய் நன்றிகெட்ட குழந்தையைப் பெற்றிருத்தல், பாம்பின் கொடும் பல்லைவிட மிகவும் கொடுமை. - சேக்சுபியர்

29. ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால், தன் பிள்ளை தானே வளரும். - தமிழர்

30. தாய்மையே! பொறுக்க வொண்ணாத் துயரத்தின் பளுவில் எங்கள் புருவங்கள் நெரித்து, கண்கள் கலங்கி நீர் பாய்கின்ற வேளை உன்னைப் போன்ற உறுதியும் ஆறுதலும் தருபவர் யார்? - வால்ட்டர் ஸ்காட்

31. அழகும், பெருந்தன்மையும், நற்குடிப் பிறப்பும், நற்புகழும் உடைய தாய்மையினின்று, சிறந்த அழகுள்ள பெண்ணும் உரமான ஆணும் பிறப்பார்கள். - பைரன்

32. ஓ! ஆடவர்களே பெண்களை மரியாதையாகவும், கௌரவமாகவும் நடத்துங்கள். அவர்கள் ஆண்களது தாய்மார்கள் அல்லவா! - கொரான்

33. தாய் சொல்லைத் தட்டாதே. - தமிழர்

34. தாய் தஞ்சாவூரில் பிச்சை எடுக்கிறாள்; மகன் கும்பகோணத்தில் அன்னதானம் செய்கிறான். - தமிழர்

35. தாய் என்ற ஆதிக்கத்தைத் தவிர, வேறு எந்த விதமான ஆதிக்கத்தையும் பெண்செய்ய வேண்டுமென எதிர்பார்க்காதவன் ஆண்! - மாண்ட்டெயின்

36. மலரிடம் மங்கையர்க்கும், தேனிடம் வண்டுகளுக்கும் ஏற்படும் பிரேமை போலக் குழந்தைகளுக்குத் தாயிடம் பாசம் ஏற்படுகின்றது! - அறிஞர் அண்ணா

37. மகனைப் பறிகொடுத்தாலும் மனங் கலங்காத மாதாக்கள் இருந்ததால் தான், தமிழகத்தின் மாண்பு தழைத்தது. - அறிஞர் அண்ணா

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார் | 40.00 |
| பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | 40.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 3 | 150.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 2 | 115.00 |
| தமிழிலக்கிய வகைமையியல் தொகுதி - 1 | 130.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள்-அறிவியல் - தொழில்நுட்பம் II | 100.00 |
| தமிழரின் மரபுச் செல்வங்கள்-அறிவியல் - தொழில்நுட்பம் I | 90.00 |
| மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | 40.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| திராவிட இயக்க இதழ்கள் - தொகுதி 1 | 60.00 |
| பெரியபுராணம் - திருமுறைகளின் கவசம் | 55.00 |
| காஞ்சிபுரம் கி.பி. 6-ஆம் நூற்றாண்டுக்கு முன் | 65.00 |
| திருவாவடுதுறைப் புராணம் | 250.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| சித்தாந்தச் செல்வர் க. வெள்ளைவாரணனார் | 25.00 |
| திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | 30.00 |
| தமிழிலக்கித்தில் மனித நேயம் | 115.00 |
| தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம் | 30.00 |
| தமிழ் இதழ்கள் - விடுதலைக்குப் பின் | 40.00 |
| பாவாணரின் ஞாலமுதன்மொழிக் கொள்கை | 45.00 |
| பெண்ணியப் படைப்பிலக்கியம் | 75.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே | 75.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை | 80.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 150.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| திறனாய்வு அணுகுமுறைகள் | 120.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |

**576 பெரியாரியப் பெண்ணியம் 35.00**